

# ஆராய்ச்சி

**Aaraaichi**

(காலாண்டுப் பத்திரிகை)

இலக்கியம், மானிடவியல், சமூகவியல்
பற்றிய ஆராய்ச்சிப் பத்திரிகை


ஆசிரியர்

**நா. வானமாமலை**



மார்ச் 1971

மலர் 2
இதழ் 2

# உள்ளே....

பக்கம்

இலக்கியம்.

தமிழ்நாட்டுக் கதைப் பாடல்களில் சோக முடிவு. — நா. வானமாமலை. — 129

கல்கியும் ஸ்காட்டும். — எஸ். தோதாத்திரி M.A. — 152

இரா. இராகவையங்காரின் ஆய்வுமுறை. — தமிழவன். — 160

மலேசிய நாவல் இலக்கியம். — லோகநாயகி நன்னித்தம்பி M.A. — 167

க. நா. சு. வின் நாவல்களும் அவற்றின் அடிப்படைத் தத்துவங்களும். — வெ. கிருஷ்ணமூர்த்தி. — 180

மானிடவியல்

நீலகிரி கசவாப் பழங்குடி மக்கள் — வே. சிதம்பரநாதபிள்ளை M. A. — 194

முரியா பழங்குடி மக்களும் கோட்டுல் அமைப்பும். — சு. சக்திவேல் M. A. — 200

சிறப்புப்பகுதி

தமிழ் பயிற்றுமொழியானால் (சங்கப்பலகை) — நா. வானமாமலை — 207

பயிற்சிமொழி — டாக்டர். இராமசுந்தரம் M.A., Ph.D. — 217

கல்லூரிகளில் பயிற்றுமொழி — மா. பா. குருசாமி M.A; — 225

பயிற்றுமொழியும், உளவியலும், சமுதாயவியலும். — ஆ. சுப்பிரமணியன் M.A.B.T. — 235

## ஆராய்ச்சி

ஆசிரியர்:— நா. வானமாமலை எம். எ., எல். டி.,

சந்தா விகிதம்: இந்தியா: ஆண்டு சந்தா ரூ. 10. 00

இலங்கை: ஆண்டு சந்தா ரூ. 15. 00

தனிப்பிரதி விலை ரூபாய் மூன்று

258, திருச்செந்தூர் ரோடு, பாளையங்கோட்டை திருநெல்வேலி-2.

## Statement — Form IV

The following is a Statement of ownership and other particulars abou "Aaraaichi" magazine as required under rule 8 of the Registration o News papers (Central) Rules 1956.

| | |
|---|---|
| Title of News paper | ... Aaraaichi |
| Language | ... Tamil and English |
| Periodicity | ... Quarterly |
| Publisher's Name | .... N. Vanamamalai |
| Nationality | ... Indian |
| Address | ... 258, Trichendur Road, Palayamcottai, Tirunelveli-2. |
| Place of Publication | -do- |
| Printer's Name | ... S. Justin Nesamoni C.M.S Press Palayamcottai |
| Nationality | ... Indi |
| Address | ... C. M. S. Pre Tiruchendur Ro Palayamcot |
| Editor's Name | ... N. Vanamama |
| Nationality | ... Indi |
| Address | ... 258, Tiruchendur Ro Palayamcot Tiruelveli |
| Owner's Name | ... N. Vanamamal |

I, N. Vanamamalai hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

17—2—71
Palayamcottai

(Sd) *N. Vanamamalai*

---

# ஆராய்ச்சி

## முதல் இதழ். பொருளடக்கம்


| தொடர் எண் | பகுதி எண் | | பக்கம் |
|---|---|---|---|
| **இலக்கியம்** | | | |
| 1 | 1 | தமிழ் இலக்கியத்தில் மனுவின் கதை —டாக்டர் டி. வி. விராசாமி எம். ஏ., பி. எச். டி. | 60 |
| 2 | 2 | மறைந்துபோன பழந்தமிழ்ப் பாடல்கள் —மு. வை. அரவிந்தன் எம்.ஓ.எல். | 112 |
| 3 | 3 | இன்றைய தமிழ் இலக்கியப் போக்கு —டாக்டர். இராம. சுந்தரம் எம். ஏ; பி. எச். டி. | 116 |
| 4 | 4 | மணிமேகலையில் பௌத்தம் —நா. வானமாமலை. எம். ஏ.. | 159 |
| 5 | 5 | சங்க காலத்து நடு கற்கள் —மயிலை. சீனி வெங்கடசாமி. | 190 |
| 6 | 6 | வள்ளுவரின் பொருளியல் கருத்துக்கள் —மா. பா. குருசாமி எம். ஏ. | 195 |
| 7 | 7 | யாளி —க. ப. அறவாணன். | 207 |
| 8 | 8 | பண்டைத் தமிழகத்து மகளிர் நிலை. —வித்வான் டாக்டர். ந. சுப்பிரமணியம் எம். ஏ., பி. எச். டி. | 211 |
| 9 | 9 | சிலப்பதிகாரத்தில் காவியப் பண்பாடும், நாட்டுப் பண்பாடும் ஒருமித்தல் —நா. வானமாமலை எம். ஏ. | 325 |
| 10 | 10 | சூழ்வினைச் சிலம்பு —ஆ. சுப்பிரமணியம் எம். ஏ., பி. டி. | 353 |
| 11 | 11 | வையாபுரிப் பிள்ளையின் ஆய்வு முறை —டாக்டர். இராம. சுந்தரம் எம். ஏ., பி. எச். டி. | 425 |
| 12 | 12 | Epic Poetry and modern mind —A. V. Subramania Iyer. | 536 |
| 13 | 13 | சங்க இலக்கியத்தில் செங்கதிர் —டாக்டர். தா. வே. வீராசாமி. | 547 |
| 14 | 14 | What is Comparative Literature —Dr. V. Sachidanandam M. A., Phd. | 555 |
| | **சமூகவியல் - வரலாறு (Social Sciences and History)** | | |
| 15 | 1 | நகரத்தார் வரலாறும் சிலப்பதிகாரக் கயைும்த —தொ. மு. சி. ரகுநாதன் | 1 |
| 16 | 2 | தமிழ் நாட்டில் சாதி சமத்துவப் போராட்டக் கருத்துக்கள் —நா. வானமாமலை எம். ஏ. | 25 |
| 17 | 3 | ஒரு பிராமி எழுத்துச் சாசனம் —மயிலை. சீனி வெங்கடசாமி | 73 |
| 18 | 4 | பண்டைத் தமிழகத்தில் போர்க் கருவிகள் —அ. ராகவன் | 112 |
| 19 | 5 | Pre and Proto-historic Cultures of Tamilnadu —K. V. Raman M. A., Ph.D. | 137 |
| 20 | 6 | Social set up in India in the late 18-th and early 19-th century —Dr. J. Heydrich (Berlin) | 143 |
| 21 | 7 | சோழர் காலத்தில் கல்வி —லோகநாயகி நன்னிதம்பி எம்.ஏ. | 359 |

| | | | |
|---|---|---|---|
| 22 | 8 | இந்தியாவும் மத்திய ஆசியாவும் —ஜி. எம். பொன்கார்டு லெவின் | 376 |
| 23 | 9 | இந்திய வரலாற்றை உருவாக்கும் சக்திகள் —எஸ். ஏ. டாங்கே. | 249 |
| 24 | 10 | இந்திய வரலாறும் மாக்ஸீயக் கண்ணோட்டமும் —அமலேந்துகுஹா | 273 |
| 25 | 11 | சொத்துரிமையும் நமது அரசியல் அமைப்பும் —ஏ. எஸ். ஆர். சாரி எம்.ஏ; எல்.எல்.பி. | 386 |
| 26 | 12 | முருகவணக்கம் இரு பண்பாடுகளின் இணைப்பே — நா. வானமாமலை எம். ஏ. | 457 |
| 27 | 13 | Distribution pattern of culture traits in the Pre and Proto-historic times in Madurai region —Dr. K. V. Raman | 499 |
| 28 | 14 | சங்ககாலத்து வாணிகம் —மயிலை. சீனி வெங்கடசாமி | 510 |
| 29 | 15 | லெனினும் இந்தியாவும் —ஏ. என். கொமரராவ். | 577 |

மானிடவியல் (Anthropology)

| | | | |
|---|---|---|---|
| 30 | 1 | கோத்தர்களின் சாவு விழா —கோ. சுப்பையா. எம். ஏ. | 392 |
| 31 | 2 | நீலகிரி தோடா பழங்குடி மக்கள் — க. சக்திவேல் எம். ஏ. | 73 |
| 32 | 3 | நரிக் குறவர்களின் வாழ்க்கைமுறை —டாக்டர். கோ-சீனிவாசவர்மா எம்.ஏ., பி.எச்.டி. | 484 |
| 33 | 4 | கொடவர் வாழ்க்கைமுறை. —இரா. பாலகிருஷ்ணன் எம். ஏ. | 487 |

நாட்டுப் பண்பாட்டியல். (Folk lorology)

| | | | |
|---|---|---|---|
| 34 | 1 | நாட்டுப் பாடல்களும் திருமண உறவுகளும் —ஆ. சிவசுப்பிரமணியன். | 66 |
| 35 | 2 | வாசற்படி மறியல் — ஆ. சிவசுப்பிர மணியன். | 291 |
| 36 | 3 | தமிழ்நாட்டுப் பண்பாட்டியலுக்குப் பேராசிரியர் நா. வா. ஆற்றிய பணி —ஆ. சிவசுப்பிரமணியன். | 435 |

இலக்கணம் மொழியியல்

| | | | |
|---|---|---|---|
| 37 | 1 | சங்கச் செய்யுளில் யாப்பு வளர்ச்சி — க. ஜெகநாதன் | 217 |
| 38 | 2 | வினை யெச்சங்கள் – டாக்டர். ச. வே. சுப்பிரமணியன். | 231 |
| 39 | 3 | Tholkappiyar's treatment of Syntax —Dr. Agasthiyalingam. | 238 |
| 40 | 4 | உலகமொழிகளுக்கு ஒரு பொதுவரி வடிவம் —அ. சடகோபன். | 427 |
| 41 | 5 | Non Sanskritic Common Vocabulary of Punjabi and Tamil. — Baldev Raj Gupta. | 561 |

தத்துவம் (Philosophy)

| | | | |
|---|---|---|---|
| 42 | 1 | இந்திய ஆன்மீகவாதம்-ஓர் அறிமுகம் —டாக்டர். தேவிபிரசாத் சட்டோபாத்தியாயா. | 78 |
| 43 | 2 | சங்கரரும் சநாதனமும் —ஏ. என். சட்டநாதன் எம். ஏ., | 298 |
| 44 | 3 | வரலாற்றில் பொருள்முதல் வாதம் — வி. இ. லெனின் | 303 |
| 45 | 4 | Lenin on Science —N. Vanamamalai M. A; L. T; | 365 |
| 46 | 5 | இந்தியத் தத்துவமரபும் பாரதியும் — வெ. கிருஷ்ணமூர்த்தி. | 395 |
| 47 | 6 | இந்தியச் சிந்தனை மரபு பற்றிமார்க்ஸீய மதிப்பீடு—Y. பலராமமூர்த்தி | 418 |
| 48 | 7 | தத்துவ விமர்சனத்துறையில் பேராசிரியர் நா. வா.வின் பணி —வெ. கிருஷ்ணமூர்த்தி. | 444 |
| 49 | | லெனினும் ஐன்ஸ்டினின் சார்பு நிலைக்கொள்கையும் — போனிபதி கெத்ரோவ். | 575 |

# ஆராய்ச்சி

மலர் 2 | மார்ச் 1971 | இதழ் 2

ஆராய்ச்சியின் இரண்டாவது மலரின் இரண்டாவது இதழைப் பல கட்டுரையாளர் களின் ஒத்துழைப்போடு உங்களுக்குப் பணி வாக அளிக்கிறேன்.

இவ்விதழில் இலக்கியப்பகுதி சற்று அதி கமாகவே இருக்கிறது. தற்கால இலக்கியத் துறையில் சில கட்டுரைகள் வெளியிட்டிருக்கி கிறேன். ஆய்வுத்துறையில் இதுவரை பாரதி காலத்திற்குப் பிந்திய காலத்தைப் பற்றி விரி வான ஆய்வுகள் நடத்தப்படவில்லை. நமது காலத்துத் தமிழ் இலக்கியம் பற்றிப்பல கட்டு ரைகளை வெளியிட முயன்று வருகிறேன். இவ் விதழுக்கே பெ. கோ. சுந்தரராஜன் (சிட்டி) ஓர் கட்டுரை அனுப்புவதாக எழுதியிருந்தார். உடல்நிலை காரணமாக எழுதி அனுப்புவதில் தாமதம் ஏற்பட்டுவிட்டது. அடுத்த இதழில் அதனை வெளியிடுவேன். அடுத்த இதழுக்கும் தற்கால இலக்கியம் பற்றிச் சில கட்டுரைகளை எழுத்தாளர்கள் அனுப்பிவைப்பார்கள் என்று எதிர்பார்க்கிறேன். அவை அரைகுறை விமர்சனக் கட்டுரையாக இல்லாமல் முழுமை யான இலக்கிய ஆராய்ச்சிக் கட்டுரைகளாக இருத்தல் வேண்டும்

வழக்கம் போல இரண்டு மானிடவியல் கட்டுரைகள் வெளியாகின்றன. 'கோட்டுல் அமைப்பு' மானிடவியல் ரீதியிலும், சமூக வியல் ரீதியிலும் முக்கியமான கட்டுரை. அது இன்றைய முரியா மக்களுடைய தற்கால வாழ்க்கையை மட்டுமில்லாமல் அதே பண் பாட்டு வளர்ச்சி நிலையிலிருந்த வரலாற்று முற்கால மக்களுடையதாக இருந்ததுமாகும். இன்று வரலாற்று முற்கால மக்களின் வழக்கங்கள் எச்சங்களாக நிற்கின்றன. மணவாழ்க்கை தோன்றுவதற்கு முன்னல், குழு மணமுறையிருந்த காலத்தை'கோட்டுல்' முறை எச்சமாக நின்று காட்டுகிறது. மண முறை தோன்றியபின்னும், இவ்வெச்சம் நீடிக்கிறது. அதற்கடுத்த கட்டம் இரண்டா வது கோட்டுல் முறை. அதில் குழுமணத் தின் எச்சம் நீங்கும் நிலையிலுள்ளது. அவர்க ளது, சமூக வாழ்க்கை தனிமைப்பட்டிருக் கும் வரை இவ்வெச்சங்கள் நீடிக்கும். அதன் பின் அவர்களுடைய சமுதாயத்தில் அடிப் படையான மாறுதலும் வளர்ச்சியும் ஏற்பட் டால் இவ்வெச்சங்கள் மறைந்துவிடும். அவர் களுடைய சமுதாய வளர்ச்சியையொட்டி கோட்டுல் முறையில் மாறுதல்கள் ஏற்படும். இது சமுதாயவியல் ஆய்வாளர்களால் ஆரா யப்பட வேண்டியது.

இவ்விதழில் சிறப்புப்பகுதியாக தமிழைக் கல்லூரிகளில் பயிற்றுமொழியாக்கினல் ஏற் படக்கூடிய பிரச்சினைகளையும், அவற்றிற்குரிய தீர்வுகளையும் கல்லூரிகளில் பாடம் பயிற்று வித்து அனுபவமுள்ள நான்கு ஆசிரியர்கள் ஆராய்கிறுர்கள். தமிழில் ஆராய்ச்சி வளர்ச்

சியடைவதற்கும், தமிழ், கல்லூரிகளில் பயிற்று மொழியாவதற்கும் தொடர்பு இருப்பதால் இப்பிரச்சினையை ஆராயும் கட்டுரைகளை வெளியிடுகிறோம்.

ஆராய்ச்சியின் புகழ் உலகத்தின் வலிமையான நாடுகளான சோவியத் ரஷ்யாவிலும், அமெரிக்காவிலும் பரவியுள்ளது என்பதை எடுத்துக் காட்ட இரண்டுசெய்திகளைச் கூற விரும்புகிறேன். நான் மாஸ்கோவிற்குச் சென்றிருந்தபோது அயல்மொழிக் கல்லூரியில் தமிழ் போதிக்கும் திருமதி துருப்னிகோவா என்னைச் சந்தித்து ஒரு செய்தியைச் சொன்னார். அவரும் அவருடைய மாணவ மாணவியரும் ஆராய்ச்சி இரண்டாவது இதழிலிருந்து ஒழுங்காகப் படித்து வருகிறார்கள். சில ஆராய்ச்சி மாணவர்கள் ஆராய்ச்சியில் வெளிவந்த கட்டுரைகளை ரஷியனில் மொழிபெயர்த்து சைக்ளோஸ்டைல் செய்து மாஸ்கோவிலுள்ள இந்தியவியல் ஆய்வாளர்கள் அனைவருக்கும் கொடுத்துள்ளார்கள். 'ஆசிய மக்கள்' என்ற ஆராய்ச்சி இதழிலும் 'ஆசிய-ஆப்பிரிக்கா' என்ற ஆராய்ச்சி இதழிலும் ஆராய்ச்சியைப் பற்றிய விமரிசனக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன. இந்தப் பத்திரிகையின் பல மொழிபெயர்ப்பு இதழ்களிலும் இக்கட்டுரைவெளிவரும். அக்கட்டுரையோடு ஆராய்ச்சிஇதழில் வெளிவந்துள்ள முகப்புப்படமும் வெளியிடப்பட்டுள்ளது.

அமெரிக்காவில் நியூயார்க் நகரிலிருந்து 'உல்ரிச் பீரியாடிகல்ஸ் டைரக்டரி' என்ற பத்திரிகைப்பட்டியலில் நமது இதழைச்சேர்ப்பதற்காக விவரங்கள் கேட்டு எழுதியுள்ளார்கள். இந்த டைரக்டரி உலக முழுவதும் உள்ள பெரிய நூல் நிலையங்களுக்கும், புத்தக வெளியீட்டு நிறுவனங்களுக்கும் செல்லுகிறது. இந்த ஆண்டில் வெளியிடப்படவிருக்கும் டைரக்டரியில் நமது இதழைப்பற்றிய விவரங்கள் சேர்க்கப்படும். இந்த டைரக்டரியில் சர்வதேச முக்கியத்துவம் வாய்ந்த தரமான பத்திரிகைகள் மட்டுமே இடம்பெறும்.

நமது இதழைச் சில நண்பர்கள் தங்கள் கடிதங்களில் புகழ்ந்துள்ளார்கள். தமிழ் நாட்டில்வந்து ஓராண்டு பேச்சுத் தமிழ் பயின்று தாய் நாட்டுக்குச் சென்று லெனின் கிராடு பல்கலைக்கழகத்தில் தமிழாசிரியராகப் பணியாற்றுகிற செமியோன் ரூதின் (செம்பியன்) எனக்கு எழுதிய கடிதத்தில் கூறுவதாவது.

''நான்காம் இதழ் அக்கரையூட்டும் ஆய்வுப் பொக்கிஷமாகத் தோன்றுகிறது. தங்களது ''முருகவணக்கம்'' என்னும் ஆராய்ச்சியைப் படித்துப் பெரும்பயனும்மகிழ்ச்சியும் அடைந்தேன். Todas ஒட்டிய கட்டுரை இப்போது படிக்கத் தொடங்குகிறேன். பல தோடர் மக்களோடும் நேரில் பழகிய எனக்கு இக்கட்டுரையும் பேராவலை ஊட்டுகிறது''

தற்பொழுது தமிழ் நாட்டு நடுக்கால வரலாற்றை ஆராய்ந்து ஒரு நூல் எழுதுவதற்காகச் சென்னைக்கு வந்துள்ள டாக்டர் இவ-னேவா, ஆராய்ச்சி பற்றி எழுதுவதாவது: ''Your Journal **Aaraaichi** is of interest to me. I found it not very difficult to read a few of the articles.

இவ்வாறு உலகப்புகழ்பெறுவது மகிழ்ச்சியளிப்பதாயினும், தமிழ் நாட்டில் நமது மலரின் சந்தாதார் எண்ணிக்கை ஐந்தாவது இதழ் முதல் குறைந்து விட்டது. முதல் மலருக்குச் சந்தாகட்டியவர்களில் பலர் நான்காவது இதழுக்குப்பின் புதுப்பித்துக் கொள்ளவில்லை. அதுபோலவே ஐந்தாவது இதழோடு சந்தா முடித்தவர்களில் பலர் புதுப்பிக்கவில்லை. ஆனால் புதிய சந்தாதார்கள் சேர்ந்திருக்கிறார்கள்.

ஆகவே நெருக்கடியான நிலையிலேயே மலரை அச்சிட வேண்டியதாயுள்ளது. இம் மலர் தொடர்ந்து நடக்கவேண்டும் என்று விருப்பமுள்ளவர்கள், ஒவ்வொருவரும் புதிய சந்தாதார் ஒருவரையாவது சேர்த்துத் தர வேண்டும். அவ்வாறானால் தான் நெருக்கடியில்லாமல் மலரை வெளிக்கொணர இயலும்.

இதுபோலவே ஆராய்ச்சியின் நண்பர்கள் நூலக ஆணைக்குழு மூலமாகவும், பஞ்சாயத்து யூனியன்கள் மூலமாகவும் சந்தாக்கள் வாங்கிக் கொடுக்க முன்வரவேண்டும்.

இதுபோன்ற உதவிகளின்மூலம் ஆராய்ச்சியைத் தொடர்ந்து நடத்த முடியும் என்று கருதுகிறேன். இவ்விதமான உதவியை ஆராய்ச்சி நண்பர்கள் செய்வார்கள் என்றும் நம்புகிறேன்.

**நா. வானமாமலை**

# CONTRIBUTORS

N. Vanamamalai, M. A., L. T. Editor of Aaraaichi. He has contributed to publication of folk songs and ballads. Published books on literary and cultural studies with reference to Tamilnadu. Has contributed to philosophical studies in Tamilnadu especially in Buddhism and materialism in Tamilnadu. His contributions have been published in journals in U. S. S. R. and G. D. R.

S. Thothathiri, M. A. works as lecturer in English in Paramakalyani College, Tirunelveli Dt. He has translated books on science. His articles on literary criticism have been published in Journals and Aaraaichi.

S. Carlose. M. A. works as lecturer Dept of Tamil, St. Xavier's College, Palayamkottai. He is interested in research in literature.

Lokanayagi Nannithambi, M.A. works in the Department of Indian studies in the university of Malaysia. She has participated in the Ist and 2nd seminars of the International conferences of Tamil studies. She is an expert in the history of the Cholas. Her contribution to the IVth issue on 'Education under the Cholas' has attracted the attention of scholars interested in South Indian history.

V. Krishnamoorthy is a poet and is an old contributor to Aaraaichi. He is interested in literary and philosophical studies.

Chidambaranatha Pillai M. A. is a linguist and is interested in the anthropology of South Indian tribes. He is working for his Ph.D in the advanced centre of linguistics in the Annamalai University.

S. Sakthivel, M A, (Tamil) M.A. (Anthro) is working in the Anthropological survey of India and has done extensive field work on the social life of Indian tribes. He is also interested in lingustics and studies linguistics at the advanced centre of linguistics in the Annamalai University from the point of view of an anthropoligist. He has written essays in anthropology in Tamil.

Dr. Rm. Sundaram, M.A., Ph.D. is a senior scholar in the Dept of advanced learning of linguistics and has contributed many articles on literary studies. He is a regular contributor to Aaraaichi.

M. P. Guruswamy, M. A. Head of the Dept of economisc, Athithanar College, Tiruchendur. He has written short stories and novels. He has also written essays on rural sociology economics. He has studied the problems of teaching economics in the Tamil medium.

A. Subramanian, M.A., B.T. works in the MDT Hindu College High School, Tirunelveli. He has published a few articles on the study of literary criticism and specialised in modern literature.

# இலக்கியம்

# தமிழ் நாட்டுக் கதைப் பாடல்களில் சோக முடிவு.

நா. வானமாமலை.

[இலக்கியத்திலும், வாய்மொழி இலக்கியத்திலும் நீண்ட கதைப்பாடல்கள் உள்ளன. அவற்றுள் சில சமூக நிகழ்ச்சிகளையும் வரலாற்று நிகழ்ச்சிகளையும் அடிப்படையாகக் கொண்டவை. இத்தகைய கதைப் பாடல்களின் தலைவர்களோ. தலைவியரோ சோக முடிவை அடைகிறார்கள். உதாரணமாக முத்துப்பட்டன் கதையில் அவனும் அவன் மனைவியரான பொம்மக்காவும் திம்மக்காவும், மதுரை வீரன் கதையில் அவனும் அவன் மனைவி பொம்மியும், காதலி வெள்ளையம்மாள் என்ற கணிகையும், காத்தவராயன் கதையில் அவனும் அவன் மனைவியர் நால்வரும், சின்னத்தம்பி கதையில் அவனும் அவன் தாயும் மனைவியும், கட்டபொம்மு கதையில் கட்டபொம்முவும், ஐவர் ராஜாக்கள் கதையில் குலசேகர பாண்டியனும் கன்னடிய இளவரசியும் கதை முடிவில் இறந்துபோகிறார்கள். மருது கதையில், இரு மருதுக்களும், கான்சாகிப் கதையில் கான்சாகிபுவும் சோக முடிவடைகிறார்கள்.

கிரேக்க வாய்மொழி இலக்கியம் முதலாக வரலாற்று ரீதியாக சோக முடிவடையும் பாத்திரங்களின் அமைப்பையும், அவற்றின் சமூக வர்க்கச் சார்பையும் ஆராய்ந்து, அவை சோக முடிவு அடைவதன் காரணங்களை இக்கட்டுரையில் ஆராய்ந்திருக்கிறேன்.

முக்கியமாக கிரேக்க இலக்கியம், ஆங்கில இலக்கியம் இவற்றின் படிப்பினைகளைத் தமிழ் வாய்மொழி இலக்கியத்தின் ஆய்வுக்குப் பயன்படுத்த முயன்றிருக்கிறேன். சோக முடிவின் காரணங்களையும் சுட்டிக்காட்டியிருக்கிறேன். ஆசிரியர்.]

0·0 தமிழ்நாட்டுப் பாடல்களின் தலைவர்கள் அல்லது தலைவியர் கதை முடிவில் சாகிறார்கள். நூற்றுக்குத் தொண்ணூறு கதைகளின் முடிவு, சோக முடிவாகவே இருக்கின்றன. இத்தலைவர்களை சோகக்கதைத் தலைவர்கள் (Tragic heroes) என்று கூறலாம்.

தென்பாண்டி நாட்டில் வழங்கும் வில்லுப்பாட்டுகளிலும், வடபாண்டி நாட்டில் வழங்கும் அம்மானைகளிலும், மற்றப் பகுதிகளில் வழங்கும் கும்மி, சிந்து முதலிய பாடல்களிலும், புகழப்படும் கதைத் தலைவர்கள் சோக முடிவடைவதைக் காணலாம். இவர்களில் சிலர் சாதாரண மனிதர்கள். சமுதாயத்தில் மனிதனை அடக்கும் சமூகச் சட்டங்களையும், கருத்துக்களையும் எதிர்த்தவர்கள். வேறுசிலர், மன்னர்கள், சிற்றரசர்கள், அதிகாரிகள், படைத்தலைவர்கள், இளவரசிகள், ராணிகள். இவர்களது சோக முடிவுக்குக் காரணங்கள் என்ன?

0 . 1 காவியத்தில் சோக முடிவை அடையும் கதாபாத்திரங்களையும், நாடகத்தில் சோக முடிவடையும் கதா பாத்திரங்களையும் கவனித்தால் சோக முடிவிற்கு முன்னோர் கூறும் காரணங்களை அறியலாம். தமிழ் நாட்டுப் பாடல் கதைத் தலைவர்கள் வரலாற்று மனிதர்கள். சிலர் வரலாற்று நிகழ்ச்சிகளில் பங்குகொண்டதாகக் கற்பனை செய்யப்பட்ட கதாபாத்திரங்கள். இவர்கள் சோக முடிவு அடைவதற்குரிய காரணங்களை இலக்கியத்தில் காணப்படும் சோக முடிவிற்குரிய காரணங்களோடு ஒப்பிட்டு ஆராயலாம்.

1 . 1 ஆரம்பகால இலக்கியங்களில் கதாபாத்திரங்கள் தங்களுக்கு எதிராகப் போராடும் சக்திகளை வெல்லமுடியாமல் தோல்வியடைவதுண்டு. முதல் வகை வீரர்கள் சோக வீரர்களாகவும், இரண்டாவது வகை வீரர்கள் வெற்றி வீரர்களாகவும் கருதப்படுவார்கள்.

1 . 2 கிரேக்க நாட்டு ‘டிராகான்’ என்ற தீயுமிழும் பாம்புகளை எதிர்த்துப் போராடுபவர்களில் இறந்தவர்களின் கதைகள் பலநாட்டுச் சோகப் பாடல்களில் இடம்பெற்றன. வென்றவர்களில் ஜேசன் போன்றவர்கள், பலர் தோல்வியடைந்த காரியத்தில் வெற்றி பெற்றவர்களாகக் காட்டப்படுகின்றனர். இவ்வெற்றிக்குக் காரணம், மனித வலிமையோ, திறமையோ அல்ல. பாம்பைக் கொல்ல ஓர் மந்திரத்தை அறியவேண்டும். அதைத் தெரிந்தவர்களை அணுகித் தெரிந்து கொள்ளவேண்டும். ஜேசன் கதையில், தன்னைக் காதலிக்கும் மீடியாவிடமிருந்து இதனை அவன் அறிந்துகொள்ளுகிறான். மந்திரத்தால் மயக்கிப் பாம்பைக் கொல்லுகிறான். இதைப் போன்ற கதைகளில் மந்திரம் அறியாமல் இருப்பவர்கள் தமது வலிமையாலோ, திறமையாலோ பாம்பைக் கொல்ல முடியாமல் பாம்பினால் கொல்லப்படுவார்கள். இச்சோக முடிவிற்குக் காரணம் என்ன?

1 . 2 மிகப் பழங்காலத்தில் இயற்கையின் சக்தியை மனிதன் அறிந்து அடக்கமுடியாதவனாயிருந்தான். . இதன் உருவகமே தீயுமிழும் ‘டிராகான்’ இதனை அடக்க மனிதன் மந்திர வாதம் என்ற சக்தி அல்லது ‘ஷாமனிஸம்’ என்ற திறமையை அடையவேண்டும். மனித சக்திக்கு மேற்பட்ட மந்திர சக்தியை அறிந்து கொள்ள முடியாதவர்களை, இயற்கையை எதிர்க்கும் வலிமையற்றவர்களை, வலிமை மிக்க இயற்கை அழித்துவிடும். அவ்வாறு அழிந்தவர்களே ஆரம்ப சோகக் கதாபாத்திரங்கள்.

1 . 3 இந்த நம்பிக்கை மனிதர்களிடையே நடைபெற்ற போர்களிலும் செல்வாக்குப் பெற்றிருந்தது. இந்திரஜித்து நிகும்பலை யாகம் நடத்தி மந்திர சக்தியுடைய அம்புகளைப்பெற்றான் என்ற கதையும், இராவணன் சிவனுடைய மந்திரவாளைப் பெற்றதும், ஆர்தர் மூன்று தேவதைகளின் மந்திரவாளைப் பெற்றதும், கருணன் கவசம் பெற்றதும் இந்த நம்பிக்கையின் அடிப்படையாக எழுந்த கற்பனைகளே. இதன் வளர்ச்சியாக பத்மாசுரன் கதையைக் குறிப்பிடலாம். அந்த சக்தியை அவனுக்கு அளித்துவிட்ட சிவன் சோக கதாபாத்திரமாகிவிடுகிறார். மந்திர சக்தியின் விளைவால் சாபம்பெறும் பகைவர்கள் தங்களுக்கு மந்திரசக்தி யில்லாததால் சோக கதாபாத்திரங்களாகின்றனர். தேவர்களினால் சபிக்கப்பட்ட டார்ஸஸ் தன்னைத் தண்ணீர் சூழ்ந்திருந்தும் ஒரு சொட்டுத் தண்ணீர் கூடக் குடிக்கமுடியாதபடி தாகத்தால் தவிக்கும்படி சபிக்கப்படுகிறான். இவன் ஒரு சோக கதாபாத்திரம்.

1 . 4 மந்திர சக்தியின் பிடிப்பிலிருந்து மனிதக் கற்பனை விடுலைபெறப் பல ஆயிரம் ஆண்டுகள் சென்றிருக்க வேண்டும். மனித சமுதாயங்கள் இயற்கையோடு நடத்திய போராட்டத்தில் சில வெற்றிகளைப் பெற்ற பின்னர் மனிதன் மனிதசக்தியின் வலிமையை உணர்ந்து தன்னம்பிக்கை பெற்றான். அப்பொழுது உருவக் கதைகளில் கதைத் தலைவர்கள் மனித எதிர்ப்புச் சக்திகளை, அவை மனித சக்தியை மீறினவையாக இருப்பினும் எதிர்த்து வெற்றி கொள்ளுவதாகக் கூறப்

படுகிறது. ஹெர்குலீசின் [4] செயல்கள் மனித வலிமை, மனித எதிர்ப்புச் சக்திகளை வெல்வதைக் கூறும் கதைகளேயாகும். கண்ணன் யானையின் கொம்பை ஒடித்ததும், காளிங்கன் என்ற பாம்பை [5] அடக்கியதும், இதுபோன்ற கற்பனையே. இங்கு மந்திர சக்தியின் தலையீடு இல்லை. ஆனால் அபூர்வ சக்தி படைத்த மனிதனைத் தேவர்களுடைய உறவினராகவோ, அவர்களுடைய அவதாரமாகவோ கருதும் சிந்தனை தோன்றியிருப்பதைக் காணலாம். எனவே, இன்னும் மனித வலிமையை மட்டும் மந்திரம், தெய்வம் என்ற இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்திகளிடமிருந்து, விடுதலை பெற்றதாகக் கவிஞர்களால் கற்பனை செய்ய முடியவில்லை. இந்நிலையில் கடவுளுக்கு எதிரானவர்களும், மந்திர சக்தியை எதிர்த்து மந்திரசக்தியைப் பயன்படுத்தாதவர்களும் சோக முடிவடைவார்கள். அவர்களுடைய சக்தியும், மந்திர சக்திகளும் கூடப் பயன்படாமல் போகிறபோது சோக பாத்திரங்களாக அவர்கள் சித்தரிக்கப்படுவார்கள். இராவணன், கும்பகருணன், வாலி, இந்திரசித்தன், கும்பகருணன் போன்றோர் இத்தகைய சோகபாத்திரங்களாவர்.

1.5 காப்பியப் பாத்திரங்கள், அரசர் தெய்வங்களின் பூசனைகளை நிகழ்த்தும் பூசாரிகள், படை வீரர், நிலவுடைமையாளர் முதலிய உயர் பிரிவினர்களின் பிரதிநிதிகளாவர். சமுதாயத்தில் செல்வாக்கும் பதவியும் பெற்றவர்கள். அவற்றை இழக்க விரும்பாத மனப்போக்கு உடையவர்கள். இந்நிலைமைகளையே அவர்கள் தெய்வக் கட்டளையாகவோ விதியாகவோ காரணம்கூறி நம்பவைப்பார்கள். இவ்வுயர் வர்க்கங்களிடம் அடிமைப்பட்டு நிலத்தில் உழைத்தோ, குளம், கால்வாய் வெட்டியோ, வேறு உடலுழைப்பு மூலமோ வாழ்க்கையை ஓட்டுபவர்கள் உழைக்கும் வர்க்கத்தினர். உழைக்காமலேயே, பிறருழைப்பின் ஒரு பகுதியைத் தமதாக்கிக்கொண்டு வாழ்பவர்கள் உயர் வர்க்கத்தினர். தமது வர்க்கத்தின் பிரதிநிதிகளில் வெற்றியடைபவர்களையும், தோல்வியடைபவர்களையும் அவர்களுடைய கவிஞர்கள் கதாபாத்திரங்களாகப் படைப்பார்கள். இக்கதாபாத்திரங்கள் உயர் வர்க்கப் பிரதிநிதிகளின் இயல்புகளால் உருப்பெற்று கற்பனையால் வளர்க்கப்பெற்றனவே.

1.6 இவர்களில் எதிரிகளாயுள்ள இருவர் சமமான வலிமையுடையவர்களாயிருந்தாலோ, ஒருவனுக்குப் பல எதிரிகள் இருந்தாலோ, அவனிடமுள்ள ஒரு பலவீனமான உறுப்பு அல்லது தன்மை அவனுடைய அழிவுக்குக் காரணம் ஆவதாகக் கவிஞர்கள் கூறினர்கள். இவ்வாறு 'அக்கிலிஸி'ன் [6] உயிர் நிலை அவனது குதிங்காலில் இருந்த ரகசியத்தை அறிந்து ஹெக்டார் என்னும் வீரன் அதனைக் குறிவைத்து எறிந்து கொன்றுவிடுகிறான். மயில் ராவணன் கதையில் அவனது உயிர்நிலையும் உடலின் வேறுபட்ட ஓரிடத்தில் இருந்ததையறிந்து, அதனைத் தாக்கி அழித்து, அவனைக் கொன்றதாகக் கூறப்படுவது உலக காப்பிய மரபை ஒட்டியதே.

1.7 உடலுறுப்புகள் அல்லாமல், மன இயல்புகளின் முனைப்பினாலோ, பலவீனத்தாலோ சிலருக்கு முடிவு ஏற்படுவதாகப் பிற்காலக் காப்பிய ஆசிரியர்கள் கூறுவர். இக்காலத்தில் தன்னேரில்லாத தலைவர்களோ, மந்திரசக்தியுடையவர்களோ, தெய்வத் தன்மையுடையவர்களோ, கதாநாயகர்களாக இல்லை. மனிதர்களே கதைத் தலைவர்களாகச் சித்தரிக்கப்பட்டனர். மனித இயல்புகளும் மனித உறவுகளில் ஏற்படும் முரண்பாடுகளுமே தலைவர்களின் வெற்றி தோல்விகளுக்குக் காரணமாகக் காட்டப்பட்டன.

2.1 ஜூலியஸ் சீசர், [7] சுய நம்பிக்கை, பயமின்மை இவற்றின் மிகுதியால் எச்சரிக்கை செய்யப்பட்டும் கேட்காமல் ஆபத்துக்குள்ளாகி கொலை செய்யப்படுகிறான். மார்க் ஆந்தனி, மிதமிஞ்சிய காதலுணர்ச்சிக்கு, வயது முதிர்ந்தபின் ஆளாகி நிதானம் தவறி செய்யவேண்டிய கடமைகளைமறந்து போரில் தோல்வியுற்று, தற்கொலை செய்துகொள்ளு

கிறன். இரண்டாவது ரிச்சர்டு, [8] தன்னிரக்கத்தால், அரசியல் நிலைமைகளின் உண்மையைஅறியாமல் தோல்வியடைந்து சிறைப்பட்டுச் சாகிறன்.

2 . 3 எனவே காப்பியங்களிலும், கவிதைகளிலும் படைக்கப்பட்ட சோக பாத்திரங்கள், மனிதனுடைய சிந்தனை வரலாற்றுக் கட்டங்கள் சிலவற்றில், சில குறிப்பிட்ட இயல்புகள் கொண்டவையாக இருக்கின்றன. சிந்தனை வளர்ந்த விதத்திலேயே, சோகபாத்திரங்களைப்பற்றிய சிந்தனையும் வளர்ந்திருக்கிறது.

3 . 1 . 1 முதன் முதலில் மந்திர சக்தியால் இயக்கப்படும் மனிதன், பெருஞ் செயல்கள் செய்கிறன். மந்திர சக்தி படைத்தவர்கள் எதிரிகளாகும்பொழுது அவ்வாற்றல் அதிகமாகப் பெற்றவனிடம், குறையாகப் பெற்றவன் தோற்றுப் போகிறன். இயற்கைச் சக்திகளை, தனது உடல் வலிமையாலும், மனவலிமையாலும் அடக்கத்தெரியாத காலத்தில் மனிதன் மந்திர சக்திகளின்மீதும், சடங்குகளின்மீதும் நம்பிக்கை கொண்டு, அவற்றின் மூலம் செயல்கள் புரிய எண்ணினன். அவை பயனளிக்காத போதும், போட்டி ஏற்பட்டு தன்னைவிட மிஞ்சிய மந்திரசக்தி படைத்தவனை எதிர்க்க நேர்ந்த போதும் தான் அழிந்துபோக நேரிடும் என்று மனிதன் உணர்ந்தான். இச் சிந்தனையின் உருவகமே அக்காலச் சோகபாத்திரங்கள்.

3 . 1 . 2 இயற்கைச் சக்திகளைப் பயன்படுத்தி அறிவு வளர்ச்சியில் முன்னேறிவந்த மனிதன் பழைய சிந்தனையிலிருந்து முற்றிலும் விலகாமல், ஒரு புதிய சிந்தனையையும் படைத்தான். இங்கே அவன் மந்திர சக்திக்கு முற்றிலும் அடிமையாக இல்லாமல் சுய முயற்சியாலும், மனித ஆற்றலினலும் செயல்புரியத் தொடங்கினன். ஆயினும், முன்பு அவன் படைத்த சிந்தனை ஒரு திசையில் அவனைச் செலுத்திப் புதிய சிந்தனையையும் பாதித்தது. இங்கு சூழ்நிலையை மீறி மனிதன் புரியும் செயல்களுக்கு அவனது தெய்வீகப் பிறப்பு, அல்லது அவதாரத் தன்மைகள் காரணமாகக் கூறப்படுகின்றன. இக்காலத்தில்தான் புராணக் கதைகள் பெரிதும் வளர்ச்சியடைந்தன. இங்கு கதாநாயகர்களுக்கு எதிரிகளே சோகக் கதாபாத்திரங்களாகப் படைக்கப்படுவர். உதாரணங்கள் இராவணன், சூரபத்மன், சிசுபாலன் முதலியோர். இலியடைப் [9] போல ஆயிரக்கணக்கான கதாநாயகர்களில்லாமல், ஒரு கதாநாயகன் கதை நிகழ்ச்சிகளில் பெரும் பங்குபெறுவான். ஒடிஸியஸ், [10] பாகவதத்தில் கண்ணன், கில்கமேஷில், கில்கமேஷ், இராமாயணத்தில் இராமன் போன்ற தனிப்பெருந் தலைவர்கள் கதாநாயகர்களாகின்றனர். மற்றவர்களுக்கு அவர்களைப்போன்ற ஆற்றல் இல்லை. அவர்களை எதிர்ப்பவர்கள் சோக முடிவு அடைவார்கள்.

3 . 2 இக்காலத்திற்குப் பின் மன்னர்களைப் பற்றிய காவியங்கள் தோன்றின. அவை நிலவுடைமை தோன்றி வளர்ந்த காலம். நிலப் பெருக்கத்தாலும், நிலத்தில் உற்பத்தியாகும் பொருளில் பெரும் பகுதியை நிலப்படைவைத்துக்கொள்ளப் பயன்படுத்தவும் பிற மன்னருக்கும் பிறமக்களுக்கும் சொந்தமான நிலங்களைச் சொந்தமாக்கிக் கொள்ளவும், போர் நடத்தவும், மன்னர்களைத் தலைமையாகக்கொண்ட சமுதாய அமைப்பைப் பாதுகாக்கவும் மன்னர்கள் முயன்றனர். நிலவுடைமை உரிமைகளைப் பாதுகாக்கும் சிந்தனைகளைக் கொண்ட சமயங்கள், தத்துவங்கள், காவியங்கள் முதலியவற்றைப் படைப்போருக்கு செல்வங்களை அளித்து மன்னர்கள் உதவினர்கள். சமுதாயம் வாழ்க்கை நலன்களில் முரண்பட்ட இரு வர்க்கங்களாகப் பிரிந்துவிட்டது. உழைக்கும் பகுதியினரை கட்டாயமாக உழைத்து உற்பத்தி செய்விக்கவும், அதில் ஒரு பகுதியை நிலவுடைமையாளருக்கும், மன்னனுக்கும் கொடுக்கும் நிலையில் வைத்திருக்க அரசு தனது படையைக் கொண்டு வன்முறையைப் பயன்படுத்தியது. சமயங்களும், தத்துவங்களும் அரசன் ஆட்சியையும், நிலவுடைமை முறையையும் ஆதரித்தன. நிலவுடைமையாளரின் தலைவனை

மன்னனைப் படிப்படியாக தெய்வாம்சமாக உயர்த்தும் போக்கில் சிந்தனையைக் கட்டுப் படுத்த புனைகதைகளும், வீரக் கதைகளும், காவியங்களும் தோன்றின. அவை முன் பிருந்த கதைத் தலைவர்களின் பண்புகளோடு புதிய பண்புகளும் இவர்களுக்கிருந்ததாகக் கற்பனை செய்தன. காவிய காலத்தில் மன்னர் களின் கோபத்துக்காளானவர்கள் சோக பாத்திரங்களாகக் காணப்படுகின்றனர். காத்தவராயன் கதை, சிலப்பதிகாரம் இவை இதற்குப் பழங்கால எடுத்துக்காட்டுகள்.

4.1 வலுப்பெற்று சமுதாயத்தில் ஆளு கிற வர்க்கமாக இருக்கும் குழுவையோ, அச் சமுதாயத்தில் அதன் நலன்களுக்கு உகந்த தாக இருக்கும் சட்டங்கள், நீதிகள் ஒழுக்க முறைகள் இவற்றையோ எதிர்த்து நிற்கும் குழுக்களும், மனிதர்களும் அடக்கி ஒடுக்கப் படுகிறார்கள். அவர்கள் சோக கதாபாத்தி ரங்களாகும் தகுதி பெறுகிறார்கள்.

4.2 சாதி அமைப்பை எதிர்த்து மனித நேசம், காதல் என்ற உணர்வுகள், வேறுபட்ட சாதியைச் சேர்ந்தவர்களிடையே உறவை ஏற்படுத்தினால் அதனை அழிக்கவும், அவ்வாறு உறவு கொண்டவர்களை அழிக்கவும் சமூகத் தில் மாறுதலை விரும்பாத உயர்ந்த வர்க்கம் முற்படுகிறது.

4.3 சிறந்த வீரத்தைக்காட்டி சமுதாய முழுவதற்கும் நன்மை புரிகிறவர்கள் தாழ்ந்த சாதியாராயிருந்தால். அவர்களுக்குக் கிடைக் கும் சமூகமதிப்பை அழிக்கவும் அவர்களையே அழிக்கவும் உயர் வர்க்கம் முற்படுகிறது. இவையனைத்தையும் தங்கள் உயர்வுக்கு ஆபத்து வராமலிருப்பதற்காக அது செய் கிறது.

4.3.1 உயர்ந்த வர்க்கத்தை எதிர்த்து அவர்கள் மீது, வெற்றி கொள்ளும் அளவுக்கு உழைக்கும் பகுதிகள் வலுப்பெற்றிராததால் அவர்கள் தங்களது சாதாரணமான ஆசை களை நிறைவு செய்து கொள்ளுவதற்குக் கூட உயர்வர்க்கங்கள் விதித்திருக்கும் சமூக விதி களை மீறவேண்டியதாயிற்று. இதனால் அவர் களை எதிர்க்கவும் எதிர்ப்பில் தோற்கவும் வேண்டியதாயிற்று.

4.3.2 சமூகச்சட்டங்களை எதிர்ப்பவர்கள் உயர் வர்க்கத்தினராயிருப்பின், அவர்கள் கோடாலிக் காம்புகளாகக் கருதப்பட்டு ஈவிரக்கமின்றி அழிக்கப்படுவார்கள்.

4.3.3 இவ்வாறு சமுதாயத்தின் உயர் வர்க் கத்தினரின் ஆணைகள். சட்டங்கள், விதிகள், பழக்கங்கள், சிந்தனைகள் இவற்றை எதிர்ப் பவர்கள், அந்த வர்க்கத்தினரால் சமுதாயத் திற்கே விரோதிகளெனக் கருதப்பட்டு அழிக் கப்படுவார்கள்.

5.0 இவ்வகையான சோகபாத்திரங்களை நாட்டுக்கதைப்பாடல்களில் மிகுதியாகச் சந் திக்கிறோம்.

5.1.0 இங்கு இவ்வகையான கதாபாத்தி ரங்களைக் குறிப்பிடுவோம். காத்தவராயன், மதுரைவீரன், முத்துப்பட்டன், சின்ன நாடான் என்ற குமாரசுவாமி, கௌதலமா டன் முதலியோர் சாதி முறையின் சட்டங் களை எதிர்த்ததனால் கொல்லப்பட்டார்கள்.

5.1.1 கௌதலமாடன் தவிர, மற்றக் கதா பாத்திரங்கள் ''சாதிக்குள் மணம் புரிய வேண்டும்'' என்ற சமூகவிதியை மீறியவர்கள்.

5.2.1 காத்தவராயன் பறையர் சாதியைச் சேர்ந்தவன். ஒரு பிராமணப்பெண் அவனைக் காதலித்துப் பின் தொடர்ந்தாள். அவன் பறையன் என்று சொல்லிய பின்னும் அவள் அவனையே மணந்து கொள்வதாகக் கூறினாள். இருவரும் மணம் செய்துகொள்ள சமூகச்சட்டங்கள் இடம் தரவில்லை. எனவே வேறு நாட்டிற்குச் சென்றனர். அங்கு பறைச் சேரியில் வாழ்ந்து வந்தனர். பிராமணர்கள் சமுதாய ஒழுக்கம் கெட்டு விட்டதென அரச னிடம் முறையிட்டனர். மனுதர்மம் அழிந்து விட்டதென்று ஓலமிட்டனர். அரசன் காத்த வராயனின் தந்தையை அழைத்து காத்தவ ராயனைப் பிடித்துக்கொணர்ந்து கழுவேற்றும் படி கட்டளையிட்டான்.

5.2.2 காத்தவராயன், தந்தை தேடி வந்தபொழுது சில வேறுசாதிப் பெண்களை மணந்து கொண்டிருந்தான். தந்தை தனது குடும்பம் அழிந்து விடும் என்று முறையிட்டு காத்தவராயனை கழுவேறச்சம்மதிக்கச்செய்து அழைத்து வந்தான். காத்தவராயன் தான் செய்தது நியாயமென்றே வாதித்தான். மனம் ஒத்தவர்கள் மணம் செய்து கொள்வது நியாயம் என்று கூறினன்.

அரசனும் பல சாதிகளில் பெண்களை மணந்தவன் ஆதலால், காத்தவராயனது கருத்தை ஒப்புக்கொண்டான். ஆனல் பிராமணர்களும், காத்தவராயனது மற்ற மனைவியர்களின் சாதிப் பெரியவர்களும், அவன் செய்த குற்றம் மிகப்பெரியதென்று அவனைக் கழுவில் ஏற்றக் கூறினர். அரசனும் கழுவேற்ற ஆணையிட்டான்.

5.2.3 இதன் பின்னர் கதை புராணப் போக்கில் செல்லுகிறது. இவ்வாறு கழுவேறிச் சாக வேண்டும் என்ற சாபம் அவனுக்கிருந்தது என்று ஓர் முற்பிறப்புக் கதை புனையப்பட்டுள்ளது. அச்சாபம் சிவபெருமானல் அளிக்கப்பட்டது. சிவகணங்களுள் ஒருவனுகக் கைலாயத்தில் இருந்த காத்தவராயன் சில தேவமாதர் மீது ஆசைகொண்டான், இதையறிந்த சிவன் அவனை இவ்வுலகில் பிறந்து அவர்களை மணந்து பின் கழுவேறிச் சாக வேண்டும் என்று சபித்து விட்டார்.

5.2.4 இச்சாபத்தின் பின் விளைவாக, காத்வராயன் இரண்டாம் பிறப்பு நிகழ்ச்சிகள் அமைகின்றன. இரண்டாம் பிறப்பில் நடந்ததாகச் சொல்லப்படும் நிகழ்ச்சிகள் வரலாற்றில் நிகழக்கூடியவை. முதற்பிறப்பு நிகழ்ச்சிகள் கதை நிகழ்ச்சிகள் நடைபெற்ற சிறிது காலத்துக்குப்பின் கற்பனை செய்யப்பட்ட புனை கதை.

5.3 காத்தவராயன் சோக பாத்திரமாக இருந்தபோதிலும், சாதிசமத்துவ உணர்வை அவனுடைய கதை வளர்த்து விடக்கூடும். கதையின் ஆற்றலால் சமூக உளவியல் நிலைகளில் மாறுதல் ஏற்படும். இச்சாதிச் சட்டங்கள் அநீதியானவை என்பது விளங்கிப்போகும். கீழ்ச் சாதியார்என்ற உழைக்கும் மக்கள் சாதிச் சட்டங்களை உடைத்தெறிய முன்வருவர். இதை முன்கூட்டியறிந்து உயர் சாதியினர், இரண்டாம் பிறப்பிற்கு முன் ஒரு முற்பிறப்புக் கதையைப் புனைந்திருக்க வேண்டும். இக்கதை சுந்தரர்[12] பரவையாரையும், சங்கிலியாரையும் மணம் செய்துகொண்ட கதையை ஒத்திருப்பதைக் காணலாம். எனவே இது சைவர்கள் புனைந்த கதையாகவே தோன்றுகிறது. முற்பிறப்புக் கதையின் மூலம், வரலாற்றுச்சமுதாய நிகழ்ச்சிகளையும், மனிதனது உணர்ச்சிப் போராட்டங்களையும், கைலாயத்தில் நடந்த நிகழ்ச்சிகளின் பயனுக, சாபவிளைவாகக் காட்டி, இவ்வுலக நிகழ்ச்சிகளை, மேல் உலகநிகழ்ச்சிகளின் நிழலாக மாற்றிவிட்டார்கள். சாபமும், கைலாய நிகழ்ச்சிகளும் உண்மையானதாகவும், கலப்புத்திருமணத்தையும் சாதிச்சட்டங்களை மீறியதால் தண்டனை பெற்றதையும் சாப விளைவுகளாகவும் மாற்றி கதைப்பொருளின் ஆற்றலை உயர்சாதியினர் போக்க நினைத்தார்கள். சமூகச்சிந்தனைகளை மாற்றும் இக்கதையின் சக்தியை இவ்வாறு போக்க எண்ணினுர்கள். ஆனல் நாட்டு மக்கள் வாய்மொழி இலக்கியம் என்ற முறையில் சாபக்கதையைவிட, கலப்புத் திருமணக் கதையும், கழுவேறும் கதையும் உண்மையின் ஒளிபெற்று வலுவுடையனவாகி, கதைமுடிவில் கேட்போர் உள்ளத்தில் சோக உணர்வையும் இரக்கவுணர்ச்சியையும் ஏற்படுத்தி, காத்தவராயன்மீது அனுதாபங் கொள்ளச் செய்கின்றன. இப்பாத்திரம் சமூக மாறுதலுக்கான உணர்ச்சியைத் தூண்டும் வீரனுகவும், சாதி அமைப்பு விதிகளை எதிர்த்து உயிர் நீத்ததால் கொள்கைக்காகவும், மனித பாசங்களுக்காகவும் உயிர் நீத்தவனுகவும் நம் மனதில் ஒருசித்திரத்தை எழுப்புகிறது. எனவே இந்நாட்டுக் கதைப்பாடலின் நிகழ்ச்சிகளை சாபவிளைவாக மாற்றச் செய்த முயற்சி எதிர்பார்த்த விளைவை அளிக்கவில்லை.

5.4 இனி இவ்வகைக்கதைகளில் ஒன்றுன மதுரைவீரன் கதையைப் பார்ப்போம். மதுரைவீரன் கதையில் சில நிகழ்ச்சிகள் திரு

லைநாயக்கர் காலத்தில் நடைபெற்றவை. மதுரைவீரனுக்குக்[13] கோயிலும், கதைப் பாடலும் உள்ளன. அவன் கதையைப்பற்றி சில கல்வெட்டுச் சான்றுகளும் உள்ளன.

இக்கதை தமிழ் நாடு முழுவதிலும் பரவி உள்ளது.

5.5 மதுரைவீரன் சக்கிலியச் சாதியைச் சேர்ந்தவன். செருப்புத்தைக்கும் சாதி. (தற்காலத்தைப் போலக் கழிவிடங்களைச் சுத்தம் செய்யும் வேலை அவர்களுக்கில்லை). மலைகளில் மாடுமேய்ப்பதும், செத்தமாட்டை அறுப்பதும், தோல் பதனிடுவதும், செருப்புத் தைப்பதும், குதிரைச்சேணம் தைப்பதும் அவர்களது வேலை. இவர்கள் நாயக்கர் ஆட்சிக் காலத்தில் அவர்களோடு வந்து குடியேறியவர்கள். நாயக்கர் பாளையங்களில் தோலால் சாமான்கள் செய்து ராணுவத்திற்கும், மக்களுக்கும் விற்பனை செய்து வந்தார்கள்.

5.5.1 திருச்சி மாவட்டத்தில் பொம்மணன் என்ற பாளையக்காரனிடம் வேலை செய்துவந்த மதுரை வீரனை, பொம்மணன் மகள் பொம்மி காதலிக்கிறாள். இருவரும் மணஞ்செய்து கொள்ளுவது சாதி வேறுபாடு காரணமாக இயலாது. எனவே திருச்சிக்கு உடன்போக்காக வந்துவிடுகிறார்கள். வரும் வழியில் பொம்மணன் படையோடு வந்து போராடுகிறான். படையும் அழிந்து அவனும் இறந்து போகிறான்.

5.5.2 மதுரை வீரன் திருச்சியில் ராணுவத்தில் சேர்ந்து பல பகைவர்களை முறியடித்து வாழ்ந்து வரும்பொழுது திருச்சி நாயக்கனது மகளைக் காதலித்து அவளை அடிக்கடி சந்திக்கிறான். இது நாயக்கனுக்குத் தெரிந்து அவனை நகரை விட்டு ஓட்டிவிடுகிறான்.

5.5.3 அவனது வீரத்தைப் பயன்படுத்திக் கொள்ளத் திருமலை நாயக்கன் விரும்பி மதுரைக்கு அழைத்துக்கொள்ளுகிறான். பொம்மியோடு மதுரை சென்ற மதுரைவீரனைத் திருமலைநாயக்கன் ஒரு படைப்பிரிவின் தலைவனாக நியமிக்கிறான். கள்ளழகர் கோவில் கள்ளர்கள் மதுரை ராஜ்யத்தில் பல இடங்களில் கொள்ளையடித்து வந்தார்கள். அவர்களை ஒடுக்க மதுரைவீரனைத் திருமலை நாயக்கன் அனுப்பினான். மதுரைவீரன் கள்ளர்களோடு போரிட்டு அவர்களை அடக்கினான். அவர்கள் தோல்வியடைந்துவிட்டபோதிலும், மதுரை வீரன் மீது பகைமை உணர்வோடு தானிருந்தனர். நாட்டின் மிகப்பெருஞ்சாதியினரான கள்ளர்கள் அவனைப்பகைத்தனர். இச்சமயம் வேறொரு நிகழ்ச்சி நடந்தது. திருமலை நாயக்கனின் காதல்கிழத்தி ஒருத்தியை மதுரை வீரன் அடிக்கடி சந்தித்து வந்தான். அதனை அறிந்த திருமலைநாயக்கன், சக்கிலியன் தனது காதற்கிழத்தியோடுபழகுவதாஎன்றெண்ணி வெகுண்டு அவனைமாறுகால் மாறுகை வாங்க உத்தரவிட்டான். அவனது ஒரு கையும் ஒரு காலும் வெட்டப்பட்டன. அவன் இறந்தபின் பொம்மியும், அரசனது காதற் கிழத்தியான வெள்ளையம்மாளும் உடன்கட்டையேறினர். மதுரைவீரனின் இறுதிக்காலத்தில் அவனால் அடக்கப்பட்ட கள்ளர்களின் தலைவர்கள் திருமலைநாயக்கனது நண்பர்களாகி விட்டனர். அவர்களுடைய தூண்டுதலாலேயே மதுரை வீரன் கொல்லப்பட்டான்.

5.5.4 இக்கதையில் சோக முடிவிற்கு முதற்காரணம் பொம்மி-மதுரைவீரன் காதல். காதல், உடன் போக்காகச் செயல் படாமல் போயிருந்தால் கதை நிகழ்ச்சிகள் மேலும் தொடரமுடியாது. எனவே திருச்சிக்குச் சென்றது இரண்டாவது காரணம். திருச்சியிலிருந்து அவனது கொலைக்களமான மதுரைக்குச் செல்ல ஒரு காரணம் வேண்டும். அதுவே திருச்சி நாயக்கன், மதுரை வீரன் தொடர்பு. இவ்வளவு விவரங்களும் தெரிந்து தனது பகைவர்களை அடக்க மதுரை வீரனே தகுதியுடையவன் என்றறிந்து திருமலைநாயக்கன்அவனை அழைத்துக்கொள்ளுகிறான். தனது சாதியார்களான பொம்மணன், திருச்சி நாயக்கன் முதலியவர்களுடைய குடும்பங்களின் பகைவன் என்று தெரிந்தும் தன்சொந்தக் காரியத்தை நடத்திக்கொள்ள மதுரை வீரனைப் பயன்படுத்திக்கொண்டான்.

5.5.5 கள்ளர்களை அடக்கியபிறகு மதுரை வீரனை, கள்ளர்களின் பகைவனுக்கிவிட்டு திருமலைநாயக்கன் அவர்களோடு சமாதானம் செய்து கொண்டான். வெள்ளையம்மாளைக் காரணமாகக் காட்டி சாதியில் தாழ்ந்தவன் மீது கள்ளர்களும், நாயக்கர்களும் கொண்ட பகைமையுணர்ச்சிக்கு மதுரைவீரனைப் பலியிட்டான். முடிவில் இருபெண்கள் உடன் கட்டையேறியது அவனது மனித உணர்விற்கும், பெருமைக்கும் சான்றாகும்.

5.5.6 இக்கதையைத் திசை திருப்பிவிட சாதிஉயர்வு தாழ்வுகளை நிலைநிறுத்த வேண்டுமென்ற விருப்பம் உடையவர்கள், புராணப் போக்கில் கதையை மாற்ற முயன்றுர்கள். திருச்சியில் நாயக்கன் மகள் இவள்மீது காதல் கொண்டதையும், வெள்ளையம்மாளிடம் இவன் தொடர்பு கொண்டதையும் காட்டி, இவன் காமுகன் ஆனதால் கொல்லப்பட்டான் என்று அவனை இராவணனேடு ஒப்பிட்டு கதையின் அழுத்தத்தை மாற்ற முயன்றிருக்கிறார்கள். ஆனால் நூற்றுக்கணக்கான வாய்மொழிக் கதைகளும், பாடல்களும் பல நாட்டுக்கவிஞர்களால் இணைக்கப்பட்டு, அம்மானையாகவும், கும்மியாகவும், உருப்பெற்று விட்டன. மதுரைவீரன் சாதியால் தாழ்ந்தவனுயினும் மனிதத் திறமைகளான வீரமும், வலிமையும் உடையவனுகவும், இனிமையான பண்புடையவனுகவும். இப்பண்புகளால் உலகில் வெற்றி பெறுபவனுகவும் ஆரம்பத்தில் சித்திரிக்கப்பட்டுள்ளான், பின்னர் இவற்றையெல்லாம் விட சமூகச் சாதி விதிகள் மிகவும் வலிமையுடையனவாக இருப்பதை கதை உணர்த்துகிறது. அவன் பொம்மணனை எதிர்த்துப் போராடும்பொழுது, சாதி விதிகளை மதியாமல் மனித நேசத்தை மதிக்கிறான் என்பது வெளியாகிறது. இது முதல் சமூகச் சட்டங்களுக்கும், மனித உணர்வுகளுக்கும் போராட்டம் தொடங்குகிறது. சமூகச் சட்டங்களைப் புறக்கணிப்பது போலக் காட்டிக் கொள்ளுகிற உயர் சாதி மன்னர்கள், ஏதாவது ஒரு காரணம் கண்டுபிடித்து கீழ்ச் சாதிக்காரனைப் பதவியிலிருந்து ஓட்டவும், கொல்லவும் தயங்கவில்லை. திருச்சிராப்பள்ளி விஜயரங்க நாயக்கன், மதுரை வீரனைப் பயன்படுத்திக்கொண்டு தனது எதிரிகள் அடங்கியதும் ஏதோ காரணம் கற்பித்து மதுரை வீரனைப் பதவியினின்றும் விலக்கினான். திருமலை நாயக்கனும் கள்ளர்களை அடக்கியபின் வெள்ளையம்மாள் தொடர்பைக் காட்டி அவனைக் கொன்று விடுகிறான்.

6.1 இதைப்போன்றதோர் கதை முத்துப்பட்டன் கதை.[14] இது நெல்லை மாவட்டத்தின் தென் பகுதியிலும், நாஞ்சில் நாட்டிலும் வழங்கி வருகிறது. மதுரை வீரன் கதையில் தாழ்ந்த சாதிக்காரன், உயர்ந்த சாதிக்காரியை மணந்து கொள்ளுகிறான். முத்துப்பட்டன் கதையில் உயர்ந்த சாதிக்காரன் தாழ்ந்த சாதிக்காரிகளை மணந்து கொள்ளுகிறான். முன் கதையில் கதாநாயகன் சக்கிலியன். இரண்டாவது கதையில் கதாநாயகியர் சக்கிலியர்கள்.

6.2 முத்துப்பட்டன் தன் ஆறு அண்ணன்மாரோடு சண்டையிட்டுக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறி கொட்டாரக்கரையில் ராமராஜனிடம் வேலை பார்க்கிறான். சில ஆண்டுகளுக்குப்பிறகு இவனிருக்கும் இடம் அறிந்து அண்ணன்மார்கள் கொட்டாரக்கரைக்கு வந்து அவனைக் கண்டு கொள்ளுகிறார்கள். அவனிடம் பணம் இருப்பதையறிந்து ஊருக்கு அழைத்துச் சென்று மணம் செய்து வைப்பதாகச் சொல்லுகிறார்கள். முத்துப்பட்டன் அண்ணன்மாரோடு செல்லுகிறான். வழியில் பொதியமலைச்சாரலில் அரசடித் துறையில் பூசை செய்து விட்டுப் புறப்படும் பொழுது படித்துறையிலிருந்து இரு பெண்கள் பாடுவதைக் கேட்டுத் திரும்பிப் பார்க்கிறான். இரு சக்கிலியப் பெண்கள் பாடிக்கொண்டு படியேறுகிறார்கள். முத்துப்பட்டன் பூசை செய்த சிவலிங்கத்தை ஆற்றில் எறிந்துவிட்டு அவர்களிடம் வருகிறான். அவன் அவர்கள்மீது அன்பு கொண்டு இருவரையும் மணம் செய்து கொள்ளுவதாகச் சொல்லுகிறான். மிகத் தாழ்ந்த சாதிப்பெண்களாதலால் அவன் பேச்சை அவர்கள் மயக்க

வுரையென்றே நினைக்கிறார்கள். ஆயினும் அவனது சொல்லும், தோற்றமும் அவர்களை அவன்மீது ஈடுபாடுகொள்ளச் செய்கின்றன. அவர்கள் காட்டுப்பாதைகளின் வழியே ஓடிச் சென்று தந்தையின் பசுக்கிடையை அடைகின்றனர். அவர்களது படபடப்பைக்கண்டு காரணம் வினவியறிந்த அவர்களது தந்தையான வாலப்பகடை தனது மக்களைத் துரத்திய பார்ப்பானைக் கொன்று விட்டு வரக் கிளம்புகிறான். காட்டில் சக்கிலியப் பெண்களான பொம்மக்காளையும், திம்மக்காளையும் விரட்டி வந்த முத்துப்பட்டன் களைத்துப் போய் ஓரிடத்தில் படுத்திருந்தான். அவனைக் கண்டு பகடை அன்பு கொண்டான். அவனைக் கல்லையெறிந்து எழுப்பிக் கோபமாகத் தன் மக்களை விரட்டி வந்த பார்ப்பானைக் கொல்லப் போவதாகச் சொல்லுகிறான். இவன் யாரென்று தெரிந்துகொண்ட முத்துப்பட்டன், அவன் காலில் விழுந்து 'மாமா' என்றழைத்து, அவனுடைய மக்களை சக்கிலியச் சாதி முறைப்படி மணம் செய்து வைக்கச் சொல்லுகிறான். அவர்களோடேயே வாழ்ந்து அவர்களுக்காகவே பணிபுரிவதாகவும் கூறுகிறான். இதைக்கேட்டுத் துணுக்குற்ற சக்கிலியன் சிறிது நேரத்தில் சுய நிலைக்கு வந்து சில நிபந்தனைகள் விதிக்கிறான். அவற்றுள் முக்கியமானவை, தங்கள் சாதித்தொழிலான மாடு மேய்ப்பது, இறந்த மாட்டை அறுப்பது, தோல் பதனிடுவது, செருப்புத் தைப்பது, விற்பது போன்ற தொழில்களைச் செய்ய வேண்டும். உயர்ந்த சாதிக்கு அறிகுறியான குடுமி, பூணூல் இவற்றை அறுத்தெறிய வேண்டும். கணுக்கால் வரை கட்டும் வேட்டியை முழங்காலுக்கு மேல் கட்ட வேண்டும். தோல் வாரை இடுப்பில் கட்டிக்கொள்ள வேண்டும். தோற்றத்தில் சக்கிலியனாக மாறி விட வேண்டும்.

6. 3 இதற்கெல்லாம் சம்மதித்து முத்துப்பட்டன், அண்ணன்மாரைப் பணத்தோடு அனுப்பிவிட்டு வருவதாகச் சொல்லிச் செல்லுகிறான். இச் செய்தியைக் கேட்ட அண்ணன்மார் அவனைக் கொன்றுவிட முயன்றனர். அவன் தப்பி வந்து, கொண்டையையும், பூணூலையும் அறுத்து, தோல்வார் கட்டி, தோலை அறுத்து செருப்புச் செய்து கொண்டு சக்கிலியர் சேரிக்குத் திரும்பி விடுகிறான்.

6. 4 இரு பெண்களையும் சக்கிலியர்கள் கூடி அவனுக்கு மணம் செய்து வைக்கின்றனர். சில ஆண்டுகளில் அவன் சக்கிலியர்களின் தலைவனாகிவிடுகிறான். தென்பாண்டி நாட்டிலிருந்து திருவனந்தபுரம் செல்லும் பொதி மாட்டு வாணிபர்களுக்கு காட்டுப் பாதையில் பாதுகாப்பு அளிக்கிறான். இந்த வாணிபர்களது பொருள்களைப் பக்கத்துஊர்களிலுள்ள ஜமீந்தார்களது உதவியோடு சில கொள்ளைக்காரர்கள் கொள்ளையடித்து வந்தனர். அவர்கள் முத்துப்பட்டன் பாதுகாவலில் உள்ள காடுகளில் நுழைய முடியவில்லை. அவர்களுக்கு அவன்மீது கோபம்.

7. 5 உயர்ந்த சாதியில் பிறந்து சக்கிலியனாகிவிட்ட அவன்மீது பகைமையை வளர்த்து அவனைக் கொன்றுவிடத் திட்டம் தீட்டினர்.
7. 6 ஒருநாள் அவன் உடல் நலமின்றி இருக்கும்பொழுது, அவனுடைய பாதுகாப்பிலுள்ள மாடுகளை ஓட்டிச் சென்றனர். இதையறிந்து போருக்குச் சென்று அவர்களில் பலரை அவன் கொன்று விட்டான். மறைந்திருந்த ஒருவன் அவனை முதுகில் குத்திக் கொன்று விட்டான். இவனது மனைவியர் அவன் இறந்த செய்தியையறிந்து ஊராரிடம் சொல்லி அவர்களோடு மலைக்குச் சென்றனர். அங்கு அவனுடைய உடலை எரிக்கும் பொழுது உடன்கட்டையேறினர்.

மேலே சொல்லப்பட்ட கதை பல ஏட்டுப் பிரதிகளில் உள்ளது. வாய்மொழி மரபாகவும் வில்லுப்பாடல்களிலும் பாடப்படுகிறது.

ஆனால் சில வில்லுப்பாட்டுக்காரர்கள் பாடும் கதையில் ஒரு முக்கிய மாறுதல் காணப்படுகிறது.

6 7. 1 கதையில் வரும் பொம்மக்காவும், திம்மக்காவும் பிராமணப் பெண்கள். ஒரு

பிராமணர் காசிக்குச் செல்லும்பொழுது அவருடைய மனைவி கர்ப்பமாயிருந்தாள். அவர் போனபின் சில மாதங்களில் அவள் குழந்தைகளைப் பெற்றாள். அவர் போகும் பொழுது மனைவி கர்ப்பமாயிருப்பது அவருக்குத் தெரியாது. எனவே தனது ஒழுக்கத்தைப்பற்றிக் கணவர் சந்தேகப்படுவார் என்றெண்ணி அவள் தனக்குப் பிறந்த இரு குழந்தைகளை காட்டில் போட்டுவிட்டாள். அக்குழந்தைகளை காட்டில் வாழ்ந்த வாலப்பகடை கண்டு எடுத்து வளர்த்தான்.

6. 7. 2 இம்மாறுதலை உண்டாக்கியவர் கல்லிடைக் குறிச்சியில் வாழ்ந்த முத்துப்புலவர். அவரிடமே நான் இம்மாறுதலைப் புகுத்துவதற்கு வேண்டிய காரணத்தைக் கேட்டறிந்தேன். முத்துப்பட்டனுக்கு காரையாறு என்ற மலைப்பகுதியில் கோயில் தோன்றியது. அங்கு அதற்கு முன்னரே சொரிமுத்தையன் கோயில் இருந்தது. பட்டன் கோயிலில் ஆண்டிறுதிக் கொடையின்போது பட்டன் கதையை வில்லில் பாட முத்துப்புலவரின் பாட்டனாருக்கு மானியம் இருந்தது. அதற்குப் பின் முத்துப்புலவரும் அவருடைய தந்தையும் இந்த மானியத்தின் உரிமையாளராகஇருந்தனர். இவர்களும் வில்லுப்பாட்டுப் பாடியிருக்கிறார்கள். அவர்கள் பரம்பரையாகப் பாடிய பாடலில் இக்கதையின் தலைவியர் சக்கிலியப் பெண்கள் என்று தான் இருக்கிறது. இந்த மாறுதலைப் புகுத்தியவர் முத்துப்புலவர் தான்.

6. 7. 2 சொரிமுத்தையன் கோயிலுக்குப் பிராமணர், பிள்ளைமார் முதலிய உயர்சாதியினர் வருகிறார்கள். முத்துப்பட்டன் கோயில் கொடைக்கும் அவர்கள் வருகிறார்கள். அவர்கள் இப்பாடலை விரும்பவில்லை. அவர்கள் கதாநாயகியரை உயர்சாதிப் பெண்களாக மாற்றும்படி வற்புறுத்தினார்கள். அதனால் தான் முத்துப்புலவர் பொம்மக்கா, திம்மக்காவைப் பிராம்மணப் பெண்களாக்கி விட்டார்.

இம்மாறுதலுக்குப்பின் கதையின் சமூகச் சீர்திருத்த ஆற்றல் அறவே ஒழிக்கப்பட்டது. ஆனால் மாற்றமடைந்த கதை பரவவில்லை. காரையாற்றில் அப்படிப் பாடப்பட்டது. மற்ற இடங்களில் மூல உருவத்திலேயே பாடப்பட்டு வந்தன. இன்றும் உழவர் பெருமக்கள் இக்கதையைப் பெரிதும் விரும்பிக் கேட்கிறார்கள். இக்கதையை 1100 முறை சிவகிரி கார்க்கி பாடியிருக்கிறார். திருநெல்வேலியின் தென்பகுதியில் பாடப்பட்டு வந்த இப்பாடலை வடபகுதிக்கும், இராமநாதபுரம் மாவட்டத்திற்கும் அவர் பரவச் செய்தார்.

6. 8. சோகக் கதாபாத்திரமாயினும், உயர்ந்த மனிதப் பண்புகளையும், சமூக அநீதியை எதிர்க்கும் வீரத்தையும் இப்பாத்திரம் நமக்கு ஊட்டுகிறது. உயர் வர்க்கங்கள் புனைந்திருக்கும் சமூக நீதி பற்றிய கருத்துக்களை இது அழிக்கும் ஆற்றல் பெற்றிருக்கிறது. தற்காலச் சாதி ஒழிப்புப் போராட்டத்திற்கு ஓர் வலிமை வாய்ந்த கருவியாக விளங்குகிறது.

7. 0 இம்மூன்று கதைகளைப்போலவே, திருமணம், இணை விழைவு—வாழ்க்கை (Sexual life)யில் சாதிச் சட்டங்களை மீறிய ஒரு இளைஞனின் கதை சின்னநாடான் கதை. குமாரசுவாமி கதையென்றும் வழங்கும்.

7. 1 இக்கதையில் சாதி ஏணியில் தலைவன் தலைவியின் வேறுபாடு முந்திய கதைகளைப் போல மிகவும் அதிகமானதாயில்லை. முந்திய கதைகளில் ஒரு பங்காளி சாதிகளிலேயே உயர்ந்த பிராம்மண சாதியைச் சார்ந்தவராகவும் மற்றொரு பங்காளி தமிழ்ச் சாதிகளில் தாழ்ந்ததாக மதிக்கப்படும் பறையர்களால் கூடத் தாழ்ந்தது என மதிக்கப்படும் சக்கிலிய சாதியைச் சேர்ந்தவர்களாகவும் இருப்பதைப் பார்க்கிறோம். இந்த வேறுபாடு கதையின் கருத்தைத் தெளிவாக்குவதற்காக மிகைப்படுத்திக் காட்டப் பட்டுள்ளது. ஆனால் சின்ன நாடான் கதையில் தலைவனுக்கும் தலைவிக்கும் ஜாதி வேறுபாடு முத்துப்பட்டன் கதையிலுள்ளதுபோல் மிக அதிகமல்ல. ஆனால் திருமணத்திற்கும் சாதிக்கும் ஏன் தொடர்பு இருக்கிறது என்ற காரணத்தின்

அடிப்படையில் சாதியை மீறின திருமணமும், இணைவிழைவு வாழ்க்கையும் சமுதாயத்தின் எதிர்ப்புக் குள்ளாகின்றன.

7.2 குமாரசுவாமி ஒரு நாடார் இளைஞன். கதையின் களம், திருச்செந்தூர் வட்டாரத்திலுள்ள சாயர்புரம் அருகிலுள்ள நட்டாத்திப் பகுதியாகும். அவனுடைய தந்தைக்கு நான்கு தம்பிகள் ஒரு தங்கை. இவளை மணம் செய்து கொடுத்து அவளுக்கு ஒரு பெண் இருந்தாள். சிற்றப்பன்மார் ஒருவருக்கும் குழந்தைகள் இல்லை. இவர்களுக்கு ஐந்து கிராமங்களில் நிலபுலன்கள் உண்டு. அத்தையை மணந்த மாமாவிற்கும் சொத்து மிகுதியாக உண்டு. ஐந்து வீட்டிற்கு ஒரு மகன் குமாரசுவாமி. தங்கை மகளை அவனுக்கு மணம் செய்து வைத்தனர். அவளுக்கு 2 வயது. அவனுக்கு 18 வயது. சொத்தோடு சொத்துச் சேர இத்திருமணம் நிகழ்ந்தது. இவர்களுக்குப் பிறந்த குழந்தை ஆணாக இருந்தால் இரத்தபந்த உரிமையால் இரு குடும்பச் சொத்துக்களையும் அடைவான். இது குடும்பத்தினர், அச்சாதியினர், உயர் சாதியினர் அனைவருடைய எதிர்பார்ப்பு.

7.3 வயதுவந்து இயற்கையாக இணைவிழைச்சு உணர்வினால் உந்தப்பட்ட குமாரசுவாமி நாவிதர் சாதியைச் சேர்ந்த ஐயம்குட்டி என்ற பெண்ணை விரும்பினான். அவளும் விரும்பினாள். இவர்களிடையே திருமணம் நிகழ்வது நடைபெற முடியாது. காரணம்; சாதி வேறுபாடும், செல்வநிலை வேறுபாடும். எனவே இவர்கள் திருமணமாகாமலே சேர்ந்து வாழ்ந்தனர். இவ்வாறு பணக்கார குடும்பங்களின் இளைஞர்கள் திருமணம் செய்துகொள்ளாமல், வேறு சாதிப் பெண்களோடு சேர்ந்து வாழ்வதைக் குடும்பத்தினர் எதிர்ப்பதில்லை. திருமணமாவதற்கு முன்பும் பின்பும், ''வைப்பாட்டி''கள் வைத்துக் கொள்ளுவதற்கு சமூகச் சட்டங்கள் தடை விதிக்கவில்லை. எனவே அவனது இளம் பிராயத்தை மனதில் கொண்டு இந்த வாழ்க்கையில் பெற்றோர்கள் தலையிடவில்லை.

7.3 பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளில் குமாரசுவாமியின் அத்தை மகள் பூவணைஞ்சு பெரிய பெண்ணானாள். இரண்டு வருஷங்களுக்குப் பின் அவளோடு சேர்ந்து வாழ அவனை, அவனது பெற்றோரும் உறவினரும் அழைத்தனர். அவன் மறுத்து விட்டான். நாவிதப் பெண்ணான ஐயம் குட்டிக்கு குழந்தைகள் இருந்தனர். இக்குடும்பத்தை விட்டுவர அவன் ஒப்பவில்லை. புதிய பெண் ஒருத்தியை மனைவியாக ஏற்றுக்கொள்ளவும் அவன் சம்மதிக்கவில்லை.

7.4 அவனுடைய தந்தையும் சிறிய தந்தைமாரும் அவனுடைய வீட்டிற்கு வந்து பெண் வேடம் தரித்த ஒருவனை வீட்டிற்குள் அனுப்பி குமாரசுவாமியை வெளியில் வரச் செய்து கொன்று தலையை எடுத்துக் கொண்டு போய் புதைத்து விட்டனர். அவனுடலை ஐயம்குட்டி தகனம் செய்தபோது, பூவணைஞ்சும், ஐயம் குட்டியும் சிதையில் விழுந்து மாண்டனர்.

7.5 இக்கதைப் பாடலுக்கு நட்டாத்தி முதலிய ஐந்து ஊர்களில் பிரதிகள் இருக்கின்றன. பாடல் முழுதும் வெளியாகவில்லை.

7.6.1 இக்கதையில் சாதிசட்டங்களைமட்டு மல்லாமல் சொத்துரிமைக்கு வாரிசாக வரக்கூடிய மகன் தன் சாதியில் மணந்த பெண்ணின் பிள்ளையாகத்தான் இருக்கவேண்டும் என்ற நிலவுடைமை முறையின் அடிப்படைச் சட்டத்தையும் குமாரசுவாமி மீறிவிட்டான். அதனால் அவனை, அவனது தந்தையும், சிற்றப்பன்மாரும் சேர்ந்து கொன்று விட்டனர். இரத்த பந்தத்தை விட நிலவுடைமைச் சமுதாயத்தில் நிலவுரிமைக்குரிய வாரிசு ஒரே சாதிக்குள் இருத்தல்வேண்டும், என்ற விதியே உறவினர்களுக்குப் பெரிதாகப் படுவதைப் பார்க்காமல், தனது சொந்த மனித உணர்ச்சிகளைப் பெரிதாக மதிக்கும் குமாரசாமியைக் கொன்று அவ்வுணர்ச்சியை அழித்து, சாதித்தூய்மையும், வாரிசுரிமையின் புனிதத் தன்மையையும் தந்தை காப்பாற்றிக் கொள்ளுகிறார். இக்கதையில் பூவணைஞ்சு தான் யாரென்றறியாத கணவனது சாவினால் பாதிக்கப்பட்டு விதவையாக வாழ விரும்பாமல், கற்புடைப் பெண்டிரின் கதைகளில் வரும்

இலட்சிய மனைவியாக உடன் கட்டையேறு கிறாள். ஐயம் குட்டிக்கு மனைவியென்ற சமூக மதிப்பில்லை. வேறு சாதிக்காரியாதலால் சொத்தில் உரிமையில்லை. ஆயினும் அவள் பல பயமுறுத்தல்கள், உயிராபத்துக்களுக் கிடையே மனித — உணர்ச்சியான காதலைப் பெரிதாக மதித்து அவனோடு வாழ்ந்தாள். அவனுடைய உண்மையான அன்பிற்குத் தலை வணங்கி அவன் இறந்ததும் உடன்கட்டை யேறினாள்.

7 . 6 . 2 இவர்கள் சமுதாயச் சட்டங்களுக் கும் வழக்கங்களுக்கும் பலியாகிவிட்ட உயிர் களாயிருப்பினும், மக்கள் இவர்களது நினை வைப் போற்றிக் கோயில்கள் கட்டி, கதைப் பாடல்கள் இயற்றிப் பாடக் கேட்டு வருகிறார் கள். இக்கதைத் தலைவர், தலைவியரது முடி வுகள், அவர்கள் மேற்கொண்ட நோக்கத்தில் தோல்வியையே காட்டுபவை ஆயினும் அவர் கள் வாழ்க்கையில் காட்டிய வீரமும், காதலின் உறுதியும், இளைஞருலகைக் கவரு கின்றன. இச்சமுதாய விதிகளின் கொடு மையை விளக்கவைக்கின்றன. அந்த உணர்வு சமுதாய மாற்றத்திற்குரிய ஆற்றலாக உரு வெடுக்கலாம். அதனால்தான் இத்தகைய கதைகள் பரவிவிடாமல் சாதி அமைப்பின் பாதுகாவலர்கள் தடுக்கிறார்கள்.

7 . 6 . 3 காதல் உணர்வின் தலையீடின்றி, ஒரு தாழ்ந்தசாதிப் பெண்ணை அவமதிக்கும் உயர்ந்தசாதி வாலிபனைத் தடுக்க முயன்ற, சாதியற்ற சமுதாயமான முஸ்லிம் சமூகத் தைச் சேர்ந்த ஒருவன் கொலை செய்யப்பட்ட கதை, சாதியமைப்புக் கொடுமையைக் காட்டும்.

8 . 1 ஒரு சக்கிலியப் பெண் தன் ஊரில் இருந்து சிறிது தூரம் உள்ள நகரத்திற்குச் சென்று மோர் விற்று வருவதுண்டு. அவ் வூரில் போக்கிரியான ஒரு தேவர்சாதிப் பையன் அவளை வழிமறித்து அவமதிக்கிறான். அவன் பெயர் கௌதல மாடன். அவள் பெயர் பூவாயி, இதைத் தடுப்பார் யாரும் இல்லை. இந்நிலைமை கீழ்சாதிப் பெண்களுக்கு தமிழ்நாட்டுக் கிராமங்களிலும், கேரளக் கிராமங்களிலும் இருப்பதை நாம்அறிவோம். இதனைப் பொருளாகக் கொண்டு 'வெளுத்த கத்தரீனா' என்ற கதையை யமைத்து மலை யாளத்தில் படமாக்கியுள்ளனர். அழகான கீழ்சாதிப் பெண்ணை மேல்சாதிப் பையன்கள் கையைப்பிடித்து இழுத்தால் அதைத் தடுக்க யாரும் முன்வருவதில்லை. கீழ்சாதி ஆண் மகன், மேல்சாதிப் பெண்ணின் சம்மதத் தோடு தொடர்பு கொண்டிருந்தால் இருவரையும் தண்டிப்பார்கள்.

8 . 2 இக்கதை[16] யின் நிகழ்ச்சிகள் சுமார் 100 ஆண்டுகளுக்கு முன் நடந்தது.

ஒரு நாள் அவள் நகரிலிருந்து திரும்ப நேரமாகிவிட்டது. ஊர் மந்தையில் கௌதல மாடன் தன்னை மறிப்பான் என்பதை அவள் அறிவாள். எனவே வழக்கமாக மோர்விடும் ஒரு பட்டாணியரின் வீட்டில் துணையாக யாரையாவது அனுப்பக் கேட்டாள். அவர் கள் தம் குடும்பத்தின் மூத்த மகனை அனுப்பி வைத்தனர். அவனைப் பட்டாணி அண்ணன் என்று பூவாயி அழைப்பாள். திரும்பி வரும் பொழுது கௌதலமாடன் எதிர்ப்பட்டான். அவளை வன்முறையாகத் துன்புறுத்தி அணைய முற்பட்டான். பட்டாணி தடுத்தான். அதை தடுக்கப் பட்டாணிக்கு உரிமையில்லை என்று கௌதலமாடன் சொன்னான். காரணம் மேல் சாதிக்கார இளைஞர்கள், சக்கிலியப் பெண் களோடு சரசமாடுவது குற்றமல்ல. இந்துவல் லாத முஸ்லிம் இளைஞர்களோடு பழகுவது தான் குற்றம் என்று கூறி அவனைத் தாக் கினான். இருவரும் போராடி உயிர்நீத்தனர். பூவாயியும் தற்கொலை செய்துகொண்டு இறந் தாள்.

8 .3 இந்நிகழ்ச்சியால் மக்களின் மனச்சாட்சி விழிப்படைந்து இந்த அநியாயத்தைத் தடுக்க வேண்டுமென்ற உணர்வு உண்டாகுமல்லவா? ''கொடுமை செய்யும் உரிமை உயர் சாதிக்காரர்களுக்கு உண்டு'' என்ற வழக்கம் தவறு என்ற எண்ணம் இம்மரணங்களால் உண்டாகும். குற்றத்திற்காகத் தண்டனைய யடைந்த கௌதலமாடனைத் தவிர பட் டாணியும், பூவாயியும் இறப்பது சமூக மனச்

சாட்சியைத் தூண்டிவிடுகிறது. வலுவாக விருக்கும் ஒரு கொடுமையை, பிறர் கொடு மையென்று உணர்ந்து தடுக்கமுடியாத தொன்றை பட்டாணி தடுக்கப்பார்க்கிருன். இதில் அவனுக்குச் சுயலாபம் எதுவுமில்லே. மனித நேசம் ஒன்றே அவனைப் போராடத் தூண்டுகிறது. பிறர் எதிர்க்காத கொடு மையை, தனக்கொரு லாபம் எதிர்பாராமல் எதிர்த்து, நீதியற்ற, ஒழுக்கம்கெட்ட முரடன் ஒருவனுல் கொல்லப்பட்ட இப் பட்டாணி, ஒரு ஆற்றல்மிக்க சோக கதா பாத்திரமாகக் கதைப்பாடலில் ஆகிவிடு கிருன். தங்களுக்குக் கையாலாகாவிட்டா லும் சாதிப் பழக்கங்களின் கொடுமையை எதிர்த்து, மிகவும் கீழ்ச்சாதிக்காரியான பூவா யிக்குத் துன்பம் நேராதபடி தடுக்கப் போ ராடி உயிர்விட்ட பட்டாணியின் கதையைக் கேட்ட மக்கள் உத்வேகமடைந்தார்கள். அவன்கதை வில்லுப்பாட்டாக உருவாயிற்று. சிறந்த தன்னலமற்ற தியாகத்திற்கும், கொடு மையை எதிர்த்து அஞ்சாமல் போராடும் வீரத்திற்கும், ஏழையின் துயர்போக்கத் தன் ஞல் இயன்றதைச் செய்யவேணடும் என்ற இரக்க உணர்விற்கும் எடுத்துக்காட்டாகப் பட்டாணியனது சோகபாத்திரம் விளங்கு கிறது.

9.1 இன்று நம் நாட்டில் நிலவுகிற நில வுடைமைச் சமுதாயம் 15—16 நூற்ருண்டு களாக நிலேகொண்டிருப்பது. கடந்த 100 ஆண்டுகளாகத்தான் நிலவுடைமைப் பொருள் உற்பத்தி முறை, முதலாளித்துவப் பொருள் உற்பத்தி முறையாக மாறிவரு கிறது. இன்னும் நமது கிராமப்புறங்களில் நிலவுடைமை உற்பத்தி முறை அழிந்துவிட வில்லே. இம்முறையில் சமுதாய உறவுகள் நில வுடைமையாளர்களுக்கும், நிலத்தில் உழைத்து உற்பத்தி செய்வோர்களுக்கும், இடையில் உள்ள உறவுகளே. இவர்களேத் தவிர கைத்தொழிலாளிகள், நெசவாளர், கம் மாளர், கொத்தர் போன்ற தொழிலாளிகள் கிராம சமுதாயத்தில் உள்ளனர். சில நூற் ருண்டுகளுக்கு கிராமத்தின் அடிப்படை வர்க் கங்கள் நிலத்தை உடைமையாகக் கொண்ட நில உரிமையாளர் வர்க்கமும், நிலத்தை உடைமையாகக் கொள்ளாது நில உரிமை யாளர் நிலத்தில் உழைத்துத் தானியத்தை உற்பத்தி செய்யும் உழவர் வர்க்கமும் ஆகும், பிற உழைப்பாளிகள் உற்பத்தியில் நேரடி யாக ஈடுபடாது, அதற்குத் துணைசெய்பவர் களாவர். இவர்கள் நடுத்தரப் பகுதியினர். இவர்களனைவர் மீதும் நிலவுடைமையாளர் கள் ஆதிக்கம் செலுத்துவர். சாதியாகக் கரு தினுல் சில நூற்ருண்டுகளுக்கு முன் உயர் சாதியினர் உடைமை வர்க்கமாகவும், தாழ்ந்த சாதியினர் உழைக்கும் வர்க்கமாக வும் இருந்தனர். தாழ்ந்த சாதிகளுக்குள் அப் பொழுது உடைமை வர்க்கம் அதிகமாகத் தோன்றிவிடவில்லே.

9.2 தாழ்ந்த சாதியார்களுக்கும், உயர்ந்த சாதியார்களுக்கும் ஏற்பட்ட முரண்பாடுக ளும் போராட்டங்களும், உடைமை வர்க்கத் தினருக்கும், உழைக்கும் வர்க்கத்தினருக்கும் இடையே தோன்றிய முரண்பாடுகளும் போராட்டங்களுமே. கீழ் சாதிக்காரன் தனது வலிமை, திறமை, ஆற்றல் முதலிய வற்ருல் மக்களிடையே செல்வாக்குப் பெற் ருல், அவனுல் தங்களது பதவிக்கும், செல் வாக்குக்கும் ஆபத்து வந்துவிடக் கூடா தென்று எண்ணி, அவர்களே ஒழித்துவிடுவ தற்குப் பல முயற்சிகள் நடந்துள்ளன. மதுரை வீரனே இதற்கு ஓர் எடுத்துக்காட் டாகக் கூறலாம். பொருத்தமான உதார ணமாயினும் அவனே ஒழிக்க பெண்ணுசையை, காமுகத் தன்மையை, ஒரு காரணமாகக்காட் டமுடிந்தது. 'காமம்' பெண்ணுசை, கலப் புச் சாதி இணைவிழைச்சு என்ற அம்சங்கள் எதுவும் இல்லாமலேயே, திறமையாலும், உடல் வலுவாலும், பிறரைக் கவர்ந்து தன் னேப் பின்பற்றச் செய்யும் ஆற்றலாலும், செல்வாக்குப் பெற்று, தனது திறமையையும் வலிமையையும் மக்களது பயிர்களேப் பாது காக்கப் பயன்படுத்திய ஒருவனே, உயர்சாதிக் காரர்கள் வஞ்சனேயால் கொன்ற கதை கள் பல இருக்கின்றன. அவற்றுள் இக் கருத் துக்கு மிகப் பொருத்தமான உதாரணம் சின் னத்தம்பி கதையாகும்.

9 . 3 சின்னத்தம்பி[17] சக்கிலிய சாதியில் பிறந்தவன். பணகுடிப்பகுதியில் ஒரு கிராமத்தில் வாழ்ந்து வந்தான். அப் பகுதியை ஆண்டுவந்த ஒரு அதிகாரி 'பிள்ளை' சாதியைச் சேர்ந்தவர். பணகுடி மலையிலிருந்து காட்டுப் பன்றிகள் ஊருக்கு இறங்கி வந்து பயிர்களை நாசம் செய்தன. ஊர்க் காவல்காரர்களான தேவர்களால் இந்தப் பன்றிகளின் சேட்டையைத் தடுக்க முடியவில்லை. அதிகாரி பன்றிகளை வேட்டையாடி அழிப்பவர்களுக்கு திருக்குறுங்குடிக் கோட்டை வாசல் காவல் பதவி யளிப்பதாகப் பறை சாற்றுகிறார்.

9 . 4 இதைக் கேட்ட சக்கிலிய இளைஞன் தன் சாதி இளைஞர்களையும், வேறுசாதி இளைஞர்களையும் சேர்த்துக்கொண்டு, வலை, வில் அம்பு, ஈட்டி முதலிய ஆயுதங்களைச் சேகரித்துக்கொண்டு பணகுடி மலைக்கு வேட்டையாடச் செல்லுகிறான். இரண்டு முறை சென்று பன்றிகளைக் கொல்லுகிறான். ஊரிலும் வயல்களுக்கும், விளைகளுக்கும் காவல் போடுகிறான். ஊர்ப்பணியாகவே இதனை அவன் தலைமையில் இளைஞர்கள் செய்கின்றனர். உழவர்கள் பயிர்செய்து பயன்பெறுகிறார்கள்.

10 . 0 தாம் சொன்னபடி திருக்குறுங்குடி கோட்டை வாசல் காவல் பதவியை அதிகாரி சக்கிலியனுக்கு அளித்துவிடுகிறார். இதுவே அவன் அழிவிற்கு ஊன்றிய வித்து. வேண்டுமென்றே அதிகாரி இப்படிச் செய்கிறார். ஏனெனில் பரம்பரை பாத்தியதையாக இப்பதவியை நம்பித்தலைவன் பட்டயம் என்ற ஊரில் உள்ள தேவர்களின் தலைவர் வகித்து வந்தார். இப்பொழுது அவரும் அவர் சாதியாரும் சக்கிலியன் ஆணைக் கடங்கி நடக்கவேண்டும். அவர்களது காவல் படையின் தலைவன் சக்கிலியன்.

உயர்ந்த சாதித் தேவர்களுக்கு சின்னத்தம்பிமீது பகைமை வளர்ந்தது. வளரட்டும் என்றே அதிகாரி காத்திருந்தார்.

10 . 1 அவருடைய மைத்துனர் பாப்பாக்குடியில் அதிகாரியாயிருந்தார். அவருடைய வயலில் புதையல் இருப்பதாகவும், வீரனான இளைஞன் ஒருவனைப் பலிகொடுத்தால் புதையலைக் காத்திருக்கும் பூதம் வெளியேறிவிடும் என்றும், புதையலை எடுக்கலாம் என்றும் அவருக்கு சோதிடர்கள் கூறினார்கள். அவர் சின்னத்தம்பியைப்பற்றிக் கேள்விப்பட்டிருந்தார். சக்கிலியர்கள் இப்பகுதிகளில் அதிகமில்லை. அவனை வரவழைத்துப் பலியிட்டால் பெரிய கலகம் எதுவும் ஏற்படாது. எனவே அவனையே அழைப்பதென முடிவு செய்து, தனது மனைவியைக்கொண்டு, அவளுடைய அண்ணன் பணகுடி அதிகாரிக்குக் கடிதம் எழுதுவித்தார். கடிதத்தில் உள்ளோலை ஒன்றும், வெளியோலை ஒன்றும் இருந்தன. வெளியோலையில் தமக்கு உடல்நலமில்லை யென்றும் மலையில் வளர்ந்திருக்கும் மூலிகைகளைக் கொண்டு வருவதற்காகச் சின்னத்தம்பியை அனுப்ப வேண்டுமென்றும் எழுதியிருந்தார். உள்ளோலையில் தம் வயலில் புதையலிருப்பதையும், பலி கொடுத்தால் புதையலை எடுக்கலாம் என்றும், சின்னத்தம்பியைப் பலியிடுவதற்காக அனுப்பிவைத்தால் பாதிப் புதையலைத் தருவதாகவும் எழுதியிருந்தார்.

10 . 2 வெளியோலையைக் காட்டிச் சின்னத்தம்பியை, பணகுடி அதிகாரி பாப்பாக்குடிக்கு அனுப்பிவைத்தார். அங்கு அவனை மலைக்கு அனுப்புவதாகச் சொல்லி பாப்பாக்குடி அதிகாரி தமது பண்ணையாளான பறையனிடம் அனுப்பி வைத்தார். அவனிடம்தான் சின்னத்தம்பியைப் பலியிட ஏற்பாடாகியிருந்தது. அவன் இவனுக்குக் கஞ்சாவும், அபினும், சாராயமும் கொடுத்து, புத்திமயங்கிய நேரத்தில் வயலுக்கு அழைத்துச் சென்று பலி கொடுத்தான்.

10 . 3 சின்னத்தம்பியோடு வந்திருந்த நாய் ஊருக்குச் சென்று ஊளையிட்டு சின்னத்தம்பியின் தாய் தந்தையரையும், அவனுக்கு மணம் பேசியிருந்த சோணைச்சியையும் அழைத்துவந்தது. அவனது கூறுபட்ட உடலைக்கண்டு பொறுமல் மூவரும் தற்கொலை செய்து கொண்டனர். இவர்கள் மூவரும் பேய்களாகி பாப்பாக்குடியில் வாழ்ந்தபிள்ளைமார்களனைவரையும் கொன்றுவிட்டனர்.

11 . 1 சோக கதாபாத்திரங்கள் வாழ்க்கையில் தங்களைக் கொன்றவர்களை எதிர்க்கும் வலிமையில்லாதவர்கள். இப்பாத்திரங்களின் சாதியாராலோ, வர்க்கத்தாராலோ, கொன்றவர்களை எதிர்த்து அழிக்கச் சக்தியில்லை. எனவே இக்கொடுமையை எதிர்த்துக் கிளம்பும் கோபத்தைக் கதையில் காட்ட, சோக கதாபாத்திரங்களைச் சாவிற்குப் பின் பேய்களாக்கி, அவை பழிதீர்த்துக்கொள்வதாகக் கதையை முடிப்பது மரபாகும். இனக்குழுக்களில் ஒருவன் கொலை செய்யப்பட்டால் பழிவாங்குவது குழுவின் கடமையாகும். இனக்குழுக்கள் அழிந்தபின் இது ஓர் மரபெச்சமாகிவிட்டது.

11 . 2 இதேபோல எல்லா 'மாடன்' கதைகளிலும் காணலாம். மாடன் கதைகள் கொல்லப்பட்ட வீரர்களின் கதைகளே. களவாடவோ, கலப்புச் சாதி மணம் காரணமாகவோ, புதையல் எடுக்கவோ, வேறு சமுதாயக்காரணமாகவோ கொலை நடக்கலாம். இக்கதைகளில் எல்லாம் கொலை செய்யப்பட்டவன் பேயாகிக் கொலைசெய்தவனை மட்டுமல்லாமல் அவனுடைய உறவினர்களையெல்லாம் கொன்றுவிடுவான். பழிவாங்குதல் இரண்டு மூன்று பிறவிகளில்கூட தொடரலாம். உதாரணமாக நீலி கதையில் ஒரு பிறவியில் நடந்த கொலைக்கு அடுத்த பிறவியில் பழிவாங்கப்படுகிறது. பிச்சைகாலன் கதையில் கொலை செய்யப்பட்டவனது தங்கை கொலை செய்ய தூண்டியவனது ஆசை நாயகி. கொலை செய்யத் தூண்டியவனை அவளே கொல்கிறாள். தானும் தற்கொலை செய்து கொள்ளுகிறாள். அண்ணனும் தங்கையும் பேய்களாகி, கொலை செய்தவர்களைக் கொல்லுகிறார்கள். மானிட உருவில் பழிதீர்க்க முடியாதாயின் இறந்தவர்கள் பேய்களாகி பழிதீர்த்துக் கொள்ளுவார்கள். எல்லாக் கதைகளிலும் கொலைக்குக் கொலை, உயிருக்கு உயிர் பழி தீர்ந்துதானாகும். இது இனக்குழு மரபாயிருந்து, உலக நாட்டுக கதை மரபாக ஆகிவிட்டது. இதனைத் தமிழ் நாட்டு வில்லுப் பாடல்களிலும் காணலாம்.

12 . 1 தமிழ் நாட்டு வரலாற்றுப் பாடல்களில், மிகப் பெரும்பான்மையான கதைத் தலைவர்கள் போரில் சாகிறார்கள். அல்லது கொல்லப்படுகிறார்கள். இவர்களையும் சோக கதாபாத்திரங்களாகவே நாம் கருதலாம். நமது வரலாற்றில் ஐவர் ராஜாக்கள் கதையின் தலைவன் குலசேகரன், ராமப்பய்யன் கதையில் வரும் பகைவன் சடைக்கத்தேவன், ராமப்பய்யனை எதிர்த்துப் போரில் உயிர் விடும் இரவிக்குட்டி, நவாபையும், கம்பெனியையும் எதிர்த்துச் சவால் விடும் கான்சாகிபு, வெள்ளையர் ஆட்சி துவங்குமுன் அதனை நிறுவ முயன்றபோது எதிர்த்த கட்டபொம்மு, ஊமைத்துரை, மருது சகோதரர்கள், முகலாயர் படையெடுப்பை எதிர்த்து நின்ற தேசிங்கு, இவர்கள் யாவரும் சோகக் கதாபாத்திரங்களே. இவர்களும் வரலாற்றில் குறிப்பிட்ட வர்க்கத்தின் பிரதிநிதிகளாயிருந்து, அந்த வர்க்கத்திற்காக மாறுபட்ட வரலாற்றுச் சக்திகளை எதிர்த்துப் போராடி உயிர்விட்டவர்கள். தங்களை மீறிய மாபெரும் சக்திகளோடு, துணிவாகப் போராடி உயர்விட்ட இவர்களது வீரம் சோக முடிவையும் தோல்வியையும் மீறி மக்கள் நினைவில் பதிகிறது.

12 . 2 நமது வரலாற்றுக் கதைப் பாடல்களை "தமிழ்நாட்டு வரலாற்றுக் கதைப் பாடல்கள்" என்ற எனது ஆய்வுக் கட்டுரையில் ஆராய்ந்திருக்கிறேன். இங்கு இக்கதைப் பாடல்களில் வரும் பாத்திரங்களின் சோக முடிவுக்குரிய காரணங்களையும், இப்பாத்திரங்களின் நிகழ்ச்சிகளை இயக்கும் காரணிகளையும் ஆராய்வோம். எனது முந்திய ஆய்வுக் கட்டுரையில் தமிழ் வரலாற்றுக் கதைப் பாடல்களை காலவரையறை செய்து வரிசைப்படுத்தியிருக்கிறேன். அதனையே இங்கு மேற்கொள்ளுவோம்.

| கதை | காலம் |
|---|---|
| 1 ஐவர் ராஜாக்கள் கதை. கன்னடியன் படைப்போர். வெட்டும் பொருள் கதை. | கன்னடியர் படையெடுப்புக் காலம் பதினாறும் நூற்றாண்டின் முற்பகுதி |
| 2 இராமப்பய்யன் கதை. இரவிக் குட்டிப்பிள்ளை போர். | பதினேழாம் நூற்றாண்டின் நடுப்பகுதி |
| 3 தேசிங்கு ராஜன் கதை | பதினேழாம் நூற்றாண்டின் கடைசிப் பகுதி. |
| 4 கான்சாகிபு கதை | பதினெட்டாம் நூற்றாண்டின்கடைசிபகுதி |
| 5 கட்டபொம்மு மருதுசகோதரர்கள் | பதினெட்டாம் நூற்றாண்டின்கடைசிபகுதி |

12 . 3 இக்கதைகளின் நிகழ்ச்சிக் காலம் பதினெரும் நூற்ருண்டின் ஆரம்ப காலத்திலிருந்து 1802 வரையாகும். இக்காலத்தில் தமிழ்நாட்டில் பெரிய அரசியல் மாறுதல்கள் நடைபெற்றன.

13 . 1 14ம் நூற்ருண்டின் நடுப்பகுதியில் மதுரையில் நிலைபெற்றிருந்த பாண்டியர் ஆட்சி முடிவடைந்தது. மதுரையில் டில்லி சுல்தான்களுக்குக் கீழ்ப்பட்ட மதுரை சுல்தான்களது ஆட்சி ஏற்பட்டது. இவ்வாட்சி 49 ஆண்டுகள் நீடித்தது. இவ்வாட்சி மதுரை நகரத்திலும் அதனைச் சுற்றியுள்ள சில பகுதிகளிலும்தான் நடைபெற்றது. பாண்டியர் ஆண்ட பிறபகுதிகளில் அவர்கள் ஆட்சிதான் இருந்தது. தென்பாண்டி நாட்டில் பாண்டியர் கிளைகள் சில பரவி, சில ஊர்களில் கோட்டைகள் கட்டிக்கொண்டு, சில பிரதேசங்களை ஆண்டுவந்தனர். தென்காசி, கரிவலம்வந்தநல்லூர், கயத்தாறு முதலிய ஊர்களில் பாண்டியர் கிளைகளைச் சேர்ந்த சிற்றரசர்கள் ஆண்டுவந்தனர். இவர்கள் தங்களில் ஒருவரைத் தலைவராகக் கொண்டு, பாண்டியன், என்ற பட்டமளித்து அவருடைய ஆட்சியின் கீழ் சிற்றரசர்களாக ஆண்டனரா, அல்லது சுயாதிக்கம் பெற்றவர்களாக ஆண்டனரா என்பது ஒரு நிலையாகத் துணியப்படவில்லை. ஆயினும் 'பஞ்சபாண்டியர்' என்ற பெயரில் ஐந்து பாண்டியர்கள் ஆண்டுவந்ததாக ஒரு செவிவழி மரபு ஏற்பட்டுவிட்டது.

13 . 2 இதே காலத்தில் வடஇந்தியாவில் டில்லியில் நிலைத்திருந்த சுல்தான்களுடைய ஆட்சி தெற்கு நோக்கிப் பரவியது. தென் இந்தியாவின் வடபகுதியில் பாமினி ராஜ்யங்கள் தோன்றி மேலும் தெற்கே பரவ முயன்றன. இதனைத் தடுக்க விஜயநகர ராஜ்யம் தோன்றிற்று. விஜயநகர மன்னர்கள் தெற்கேயுள்ள பகுதிகளனைத்தையும் இணைத்து ஓர் பேரரசை நிறுவ முயன்றனர். அதனை நிறுவும் வாய்ப்பு அவர்களுக்கு இருந்தது. பாமினி சுல்தானிய ஆட்சியை எதிர்த்து மக்களை ஒன்றுபடுத்துவதில் அவர்கள் வெற்றியடைந்தனர். மிகப்பெரிய செழிப்பான நிலப்பரப்பை அவர்கள் ஆண்டுவந்ததால் சிறந்த நிலப்படையை அமைத்தனர். தெற்கே சோழர் அரசும், பாண்டியர் அரசும் வீழ்ச்சியடைந்துவிட்டன. சிற்றரசர்களே சோழ நாட்டையும், பாண்டிய நாட்டையும் ஆண்டுவந்தனர். மதுரையில் மட்டும் சுல்தானிய ஆட்சி இருந்தது. விஜயநகர தளபதி கெம்பணன், காஞ்சியைக் கைப்பற்றி சிறிது காலத்திற்குப்பின் மதுரை சுல்தானிய ஆட்சியை ஒழித்தான். மதுரையின் கடைசி சுல்தான்களுக்கும் கெம்பணனுக்கும் நடந்த போரைப்பற்றி, பின்னவனது மனைவியார் கங்கா தேவி ஒரு காவியம் எழுதியிருக்கிருர். அதற்கு மதுரா விஜயம் என்று பெயர். அதற்குப்பின் விஜயநகரத்தின் ஆட்சி மதுரையில் நிலையாக இருக்கவில்லை

13 . 3 புதிதாகத் தெற்கே வந்த புத்துயிர் பெற்ற நிலவுடைமைச் சக்தியை இங்கே வலுவிழந்த நிலவுடைமைச் சக்திகள் எதிர்த்தன. இவை வலுக்குறைந்து வந்தபொழுது, விஜயநகரம் வேருேர் சக்தியை எதிர்த்துப் போராடும் சக்தியாகவும் அதற்கெதிராக ஆந்திரம், மைசூர், கேரளம், தமிழ்நாடு முதலிய பகுதிகளிலுள்ள எல்லா வர்க்கங்களையும் ஒன்று திரட்டும் வலிமை வாய்ந்ததாகவும், இதற்கேற்றதோர் இந்துக் கருத்துத் தொகுப்பைக் கொண்டதாகவும் இருந்தது. பிரிந்துகிடந்த தமிழ்நாட்டுச் சிற்றரசர்கள் பழம் பெருமையில் திளைத்துத் தங்கள் தற்கால நிலைமையை முற்றிலும் மறந்திருந்தார்கள். பழம்பெருமையில் இந்திரனைவென்றவர்களாகவும், சிவனுடைய வம்சத்தாரெனவும் பழம்பெருமை பாராட்டிக்கொண்டு புதிய சக்தியான விஜயநகரத்தோடு உறவு கொளள மறுத்தார்கள். பொது எதிரியை எதிர்க்க ஒன்றுபடும் அரசியல் விவேகமில்லாமல், பழம்பெருமையிலேயே வாழ்ந்த பாண்டியர்களோடு உறவுகொள்ளமுடியாமற் போகவே, விஜநகர மன்னன் தங்கள் நலன்களையும் தென்னிந்திய நிலவுடைமையாளர்களின் நலன்களையும், இந்துப் பண்பாட்டைப் பாதுகாக்கும் பெயரால் பாதுகாத்துக் கொள்ள, பாண்டியச் சிற்றரசுகளை அழித்தான்.

13 . 4 இச்சூழ்நிலையில்தான் பாண்டியர்கள் வாய்மொழிக் கதைப்பாடல்களில் சோக பாத்திரங்களாகச்சித்தரிக்கப்படுகின்றனர். கன்னடியர் பாண்டியர் போர்களைப்பற்றிச் சில கதைப்பாடல்கள் இருக்கின்றன. அவற்றுள் முழுமையானது ஐவர் ராஜாக்கள் கதை.

14 . 1 குலசேகர பாண்டியன் காலத்தில் கன்னடிய மன்னன் தன் மகளை பாண்டியன் மணந்துகொள்ள வேண்டுமென்று கேட்டுத் தூதனுப்புகிறான். பாண்டியன் தாங்கள் தெய்வீக வம்சம் என்றும், மேகத்தைச் சிறை வைத்த வம்சம், இந்திரனுக்குப் போரில் உதவிய வம்சம், சுந்தரேசுவரர், தடாதகைப் பிராட்டியாருக்குப் பிறந்த கூன்பாண்டியன் வம்சம் என்றும் பெருமை பாராட்டி இத்தகைய வம்சத்தார், குலப்பெருமையற்ற கன்னடியன் மகளை மணம் செய்துகொள்ளுவது கூடாதென்று கூறி தூதுவனை அனுப்பிவிடுகிறான். போர் மூளுகிறது. கன்னடியன் மகள் பாண்டியன் படத்தைப் பார்த்தும், அவனைப் பற்றிக் கேள்விப்பட்டும் அவனையே மணந்துகொள்வதென்று தீர்மானித்திருந்தாள். போரில் வெற்றிபெற்று, குலசேகரனைச் சிறைப் படுத்திக்கொண்டு வருமாறு அவள் தந்தையிடம் வேண்டிக்கொண்டிருந்தாள். கன்னடியனும் அவ்வாறே செய்கிறான். போரில் குலசேகரனது சகோதரர்கள் நால்வர் மடிந்து போகிறார்கள். குலசேகரன் சிறைப்படுத்தப் பட்டு பல்லக்கில் கொண்டுவரப்படுகிறான். வழியில் அவன் தன்மார்பில் குத்திக்கொண்டு இறந்துபோகிறான். அவனது உடலுக்கு மாலையிட்டுக் கன்னடியன் மகள் உடன்கட்டையேறுகிறாள்.

14 . 2 இங்கு சோகபாத்திரங்கள் பாண்டியனும் கன்னடியன் மகளும்.

பாண்டியன் சிதைந்து அழிந்துவரும் தமிழ்நாட்டு நிலவுடைமையின் பிரதிநிதி. ஆனால் சிந்தனையில் பழம்பெருமையையே நிரப்பிக்கொண்டு தனது பலவீனமான நிலைமையை உணராமல் தன்னைவிட மிகவும் பலமான நாட்டை இணைக்கும் ஆற்றல்பெற்ற வளரும் நிலவுடைமைச் சக்தியோடு மோதிக் கொண்டு உயிர் விடுகிறான். அவன் சிந்தனை அவனது கால நிகழ்ச்சிகளை உள்ளபடி அறிய முடியாமல் பழம்பெருமைகளில் சிக்கித் தடுமாறியதால், தற்கால நிகழ்ச்சிகளின் போக்கில் அவன் பலியாகிறான்.

14 . 3 கன்னடியன் மகளது திருமண ஆசை விஜயநகர மன்னர்களது சிந்தனைகளின் உருவகமேயாகும். அவர்கள் முஸ்லிம் படையெடுப்பைத் தடுக்க தென்னாட்டை அமைதியான முறையிலேயே ஒன்றுபடுத்த விரும்புகிறார்கள் திருமண உறவுகள் மூலமாகவும், அரசியல் உறவுகள் மூலமாகவும் தென்னாட்டுச் சிற்றரசர்களை யெல்லாம் ஒன்றுபடுத்தித் தங்களது தலைமையில் முஸ்லிம் படையெடுப்பைத் தடுக்க முயன்றார்கள். இவ்வாறு ஓர் ஒன்றுபட்ட எதிர்ப்புக்கு, பாண்டியர்களது சிந்தனை மாறாக இருந்தது. எனவே பாண்டியரோடு மணஉறவு சாத்தியமில்லாமற் போயிற்று. இரு குடும்பங்களின் மண உறவென்பதற்கு இரு சக்திகளின் அரசியல் ஒற்றுமை என்பதே பொருள். எனவே முடியாமற்போன முயற்சியைத்தான் கன்னடியன் மகளது உடன் கட்டையேறிய நிகழ்ச்சி கூறுகிறது.

14 . 4 பாண்டியன் வலிமை குன்றியிருந்தும், வலிமை மிக்கவர்களோடு சேர்ந்து, ஒன்றுபட்ட எதிர்ப்பினால் பொது எதிரியை எதிர்க்க முன்வராத பழம்பெருமைச் சிந்தனையில் மூழ்கியிருந்த குலசேகர பாண்டியன், கரைபுரண்டு புதுவெள்ளமான தென்னிந்திய மன்னர்களது ஒற்றுமை, தென்னிந்திய சாம்ராஜ்ய இணைப்பு, ஆகிய சரித்திரத் தேவைகளுக்கும், புதிய வளரும் சாம்ராஜ்ய சக்திகளுக்கும் எதிராக நின்றதால் சோகபாத்திரமானான். அவனது பழம்பெருமை ஆசைகள் மறுபடியும் நடைபெற முடியாது. அவற்றையே மனோபாவமாகக் கொண்ட குலசேகரன், தன்னைவிட வலிமையுடையவனும் ஒரு சாம்ராஜ்யத்தை வெற்றிகரமாக உருவாக்கி வருபவனுமான விஜயநகரப் பேரரசன் விரும்பியும் நட்புறவுகொள்ள மறுத்து, போரையே விரும்பி தனக்கு நிச்சயமாக அழிவுநேரும் என்றறிந்தும் பாறையில் மோதுவதுபோல மோதிக்கொண்டு உயிர் விடுகிறான்.

14 . 5 இப் பாத்திரத்தில், வீரம்பற்றிய கருத்து வளர்ந்தகாலத்தில் முதல் கட்டமான மந்திர சக்திக் கருத்து இப் பாத்திர அமைப்பில் காணப்படவில்லை. ஆனால் இரண்டாவது கட்ட வளர்ச்சியான நிலவுடமை மன்னர்களின் தெய்வாம்சக் கருத்து, தேவர்களோடு போராடியது பற்றிய கதைகள், பழம்பெருமைநினைவுகள் எல்லாம் இப்பாத்திரத்தினிடம் காணப்படுகின்றன. முற்காலச் சிந்தனைகள், பிற்கால வரலாற்றுக் காலத்தில் மரபாக எஞ்சி நிற்கின்றன. இந்த மரபு முழுவதையும் குலசேகரன் நம்புகிறான். நிகழ்காலத்தின் வரலாற்றுப் போக்கையும் வருங்காலத்தையும் கூர்ந்துநோக்கி அறியமுடியவில்லை. எனவே கன்னடியன் வலிமைமிக்கவன் என்பதையறிந்தும், அவனோடு உறவு கொள்வதைப் பழம்பெருமை உணர்வு தடுத்துவிடுகிறது. பழைய குலப்பெருமையை நிலைநாட்டப் போராடும் வீரத்தையே அவனிடம் காண்கிறோம். தோற்றபின்னும் அவனது சிந்தனை மாறவில்லை. கன்னடியன் மகளை மணப்பதற்காகக் கொண்டு செல்லப்படும் பொழுது, இவ்வுறவு உண்டாகாமல் தடுத்துவிடுவதற்காக தற்கொலை செய்து கொள்ளுகிறான். அவனைச் சோகபாத்திரமாக்கும் காரணத்தை மேலே விளக்கினோம்.

14 . 6 இன்னொரு சோகபாத்திரம் கன்னடியன் மகள். இவள் கதையில் செயல்புரிபவளாகவோ, நிகழ்ச்சிகளில் பங்குகொள்பவளாகவோ இல்லை. இவள் ஓர் பின்னணிப் பாத்திரமாகவே இருக்கிறாள். கன்னடியன் தென்னாட்டை ஆண்டவர்களோடு உறவு கொண்டு ஒற்றுமையை ஏற்படுத்தச் செய்த முயற்சிக்குக் கருவியாகவே, ஒரு உருவகமாகவே இவள் விளங்குகிறாள். கதாநாயகி என்ற பெயருக்குக்கூட, இவளது உடன் கட்டையேறிய நிகழ்ச்சியே இவளைத் தகுதி பெறச் செய்கிறது. கதாநாயகனது மரணத்தோடு தனது மரணத்தையும் இணைத்துக் கொள்ளும்பொழுதுதான் இவள் கதாநாயகியாகிறாள். மற்றப்படி இவளுடைய ஆசை கைக்கிளையாக (ஒருபுடைக் காமம்)வே இருக்கிறது. இது கன்னடியனுடைய ஒற்றுமைக்கான முயற்சி ஒருபுடையதாக இருந்ததுபோலவேதான் இருக்கிறது. அவனுக்கு அவனுடைய காலஅரசியல் நிலைமையில் தென்னாட்டு சிற்றரசர்களை தனது தலைமையின்கீழ் ஒற்றுமைப்படுத்த வேண்டிய அவசியம் தெரிகிறது. வீண்பெருமை நினைவுகள் அவனுக்கில்லை. ஆனால் ஒற்றுமை முயற்சிகளுக்கு குலசேகரன் இணங்கவில்லை. அவனுடைய சிந்தனைப் போக்குகள் ஒற்றுமைக்கு எதிர் திசையில் சென்றன. இது போலவே மணப் பேச்சுகளை அவன் பழம் பெருமையுணர்வு காரணமாக ஒதுக்கித்தள்ளினான். எனவே அவனை மணம் செய்துகொள்ள வேண்டுமென்று முடிவு செய்துவிட்ட கன்னடியன் மகள், கதாநாயகி பற்றியும், கற்பு பற்றியும் மரபு வழிவந்த கருத்துக்கள்படி அவன் உதறியெறிந்தும், அவனைத் தனது கணவனாகவேகருதி அவனோடு உடன்கட்டையேறினாள். வாழ்க்கையில் முடியாத ஒற்றுமையைப் பிற்காலத்தில் சாதிக்கிற நம்பிக்கையூட்டுவதற்காகவே, கதை இப்படி எழுதப்பட்டது. இச் சோக பாத்திரம் பிற்காலத்தில் ஒற்றுமையுணர்வை தென்னாட்டிலும், விஜயநகரத்திலும் ஏற்படுத்தப் பயன்பட வேண்டுமென்பதற்காகவே படைக்கப் பட்டதென்று தோன்றுகிறது.

15 . 1 . 1 வலங்கையர் கதை என்ற நாடார்களது வரலாறு கூறும் மரபுவழிக் கதையில், தமது முன்னோர்களையும், அவர்களது பரம்பரையினரையும் சோக பாத்திரங்களாகவே நாட்டுக் கவிஞர்கள் படைத்துள்ளனர்.

15 . 1 . 2 சப்த மாதர் என்ற தேவ கன்னிமாருக்கு சத்திமுனி என்ற முனிவர் மூலம், கன்னிமாரது விருப்பமில்லாமலேயே ஏழு குழந்தைகள் பிறந்தனர். இவர்களே வலங்கையரின் முன்னோர்கள்.

15 . 1 . 3 கரிகாலன் அணை கட்டும்போது இவர்களைக் கூடையில் மண்எடுத்துப் போடச் சொன்னான். இவர்கள் படை வீரர்கள். கூடையில் மண் சுமக்க மறுத்தார்கள்.

15 . 1 . 4 ஆறு சகோதரர்களை வாள் கொண்டு தலையை அரிந்து அரசன் கொல்வித்

தான். ஒருவனை மட்டும் உயிரோடு பிழைத்துப் போகச்சொல்லி நாடு கடத்திவிட்டான். அவன் தெற்கு நோக்கி வந்து தனது குடும்பத்தைப் பெருக்கிக் கொண்டான்.

15.1.5 அங்கும் பிற சாதியினரின் பொறுமையால் ஆபத்து வரத் தெற்கு நோக்கி ஆயிரக்கணக்கான வலங்கையர் தரை வழியாக பிரயாணம் செய்து பின்பு கடல் வழியாக கன்னியாகுமரிக்கு அருகிலுள்ள முட்டம் என்ற கடற்கரைக் கிராமத்துக்கு வந்தனர்.

15.1.6 இங்கு வெங்கலராசன் என்ற அவர்கள் தலைவன், கோட்டையிட்டுக் குடியிருந்தான். அவனுடைய இரு பெண்களும் பக்கத்து ஊருக்குத் தேர்விழா பார்க்கச் சென்றனர். அங்கு போகக்கூடாதென தந்தை தடுத்திருந்தும் கேட்காமல் சென்றுவிட்டனர். அங்கு அவர்களைக் கண்ட வேணாட்டு மன்னன் அவர்கள் யாரென்று விசாரித்தறிந்து வெங்கலராசனிடம் பெண் கேட்டு அனுப்பினான். அரசன் தன் பெண்களை அரசனுக்குப் பெண்கொடுக்க ஒப்பவில்லை. ஏனெனில் திருவாங்கூரில் மன்னன் மணந்துகொண்ட பெண்களுக்குப் பிறக்கும் ஆண் குழந்தைகளுக்கு வாரிசு உரிமை கிடையாது. வெங்கலராசன் தந்தைவழி உரிமை மரபை உடைய தமிழ்நாட்டுச் சாதியொன்றைச் சேர்ந்தவன். எனவே தாய்வழி உரிமையில் தனது பெண்களை வைப்பாட்டிகளாக்கிவிட அவன் விரும்பவில்லை. எனவே மணத்தை மறுத்துச் செய்தியனுப்பினான். அரசன் வெகுண்டெழுந்தான்.

15.1.7 ராமராஜன் முட்டம் கோட்டையை முற்றுகையிட்டான். வெங்கலராஜன் மனம் தளர்ந்தான். அவன் சிறிய படையின் தலைவன். ராமராஜனோ நாட்டின் மன்னன். அவனுடைய மூத்த பெண் தங்கள் தலைகளை அறுத்துக் கோட்டைக்கு வெளியே எறியும்படி வேண்டினாள்.

15.1.8 தந்தை, சாதி கௌரவத்தையும், தந்தைவழி உரிமை மரபையும் காப்பாற்ற, தான்பெற்ற பெண்களின் கழுத்தை அறுத்து தலையைக் கோட்டைக்கு வெளியில் எறிந்தான்.

15.1.9 ராமராஜன் இவற்றை எடுத்துக் கொண்டுபோய் மரியாதையோடு தகனம் செய்து, அவ்விடத்தில் ஓர் கோயில் கட்டினான்.

15.1.10 இளைய பெண்ணோடு நாட்டை விட்டுச் சென்ற வெங்கலராசன் பல இன்னல்களுக்காளாகி குறும்பூருக்கு வந்து இறந்து போகிறான். அவன் மகள் அவ்வூரையாளும் சிற்றரசனால் பல கொடுமைகள் இழைக்கப்பட்டு இறந்துபோகிறாள்.

15.2 இக்கதையில் தலைவன், தலைவியாரும் இல்லை. கதையில் வரும் சமூகத்தார், சாதிக் கட்டுப்பாடுகளையும், அடக்குமுறைகளையும், அநீதிகளையும் எதிர்க்கும் பொழுது, மன்னனது தாக்குதல்களுக்கு உள்ளாகிறார்கள். இரு முறையும் மன்னனது தண்டனைக்குள்ளாவதற்கு வெவ்வேறு காரணங்கள் உள்ளன. முதற் காரணம், எல்லாச் சாதியாரும் உடைப்புவிழுந்தால் ‘வெட்டி’ என்ற பெயரில் அன்று வழக்கத்திலிருந்த இலவச உழைப்பைக் கொடுத்து உடைப்பை அடைக்க வேண்டும். இந்த வெட்டியைச் சில சாதியார்கள் எதிர்த்துத் தண்டனையடைந்ததாக சில கல்வெட்டுகளில் இருந்து தெரிகிறது. அத்தகைய போராட்டம் ஒன்றில் தமது முன்னோர்கள் அரசனை எதிர்த்ததாகவும், தண்டனையடைந்ததாகவும் கூறுகிறார்கள். முதல் ஏழு சகோதரர்கள் சோகபாத்திரங்களாக இருக்கிறார்கள். உயிர் தப்பிய சகோதரன் நாடு கடத்தப்படுகிறான். பல தலைமுறைகளுக்குப் பின் தோன்றிய வெங்கலராசனும் அவனது பெண்களும் மீண்டும் ஓர் அரசனின் கோபத்துக்காளாகின்றனர். இதன் காரணம் வேறு. இருவேறு மணவிதிகளும், உரிமை முறைகளும் கொண்ட சமுகத்தாரிடையே மணம் செய்துகொள்வது இயலாது. இந்தநிலவுடைமைக் கருத்தினாலேயே மணம் மறுக்கப்

பட்டுப் போர் தொடங்குகிறது. மிக வலிமையுடைய மன்னனிடம் இந்தக் கருத்தைக கூறிச் சம்மதிக்கவைக்க இயலாது. எனவே மூத்த மகள் உயிர்விடத் தீர்மானிக்கிருள். தங்கள் குழுவின் சுயவிருப்பத்திற்கு எதிராக மிகப்பெரும் சக்தி இருப்பதையறிந்து வீர மரணம் அடைய முடிவு செய்கிருள். தந்தை இக்காரணத்திற்காக நாட்டைவிட்டுச் செல்லுகிருன். கடைசிவரை சோக பாத்திரங்களாகவே இருந்து தந்தையும், இளைய மகளும் சாகிருர்கள்.

15.3 இக்கதையின் முற்பகுதி நாடார்களிடையே ஏழை பணக்காரர் என்ற பொருளாதார வேறுபாடுகள் மிகுதியாகத் தோன்றுமுன் புனையப் பெற்றது. பல நூற்றுண்டுகளாகத் தோன்றிய கதை இது. சப்தகன்னி கதை பிறப்பை தெய்வாம்சமாகக் கருதும் காலத்திலேயே தோன்றியிருக்க வேண்டும். ஏழு சகோதரர்களில் ஆறுபேர் கொல்லப்பட்ட கதை 'வெட்டி'[19] அமுலில் இருந்த முற்காலத்தே தோன்றியிருக்க வேண்டும். இது சுமார் நான்கு நூற்றுண்டுகளுக்கு முன்னர் இருக்கலாம். நாயக்கர் காலத்தில்தான் அவர்கள் கீழ்கடற் கரைப் பகுதிகளில் இருந்து அங்கு பரவியதாகப் பல கல்வெட்டுக்கள் கூறுகின்றன.[19] அவற்றைப் பத்மநாபபுரத்தில் பார்க்கலாம். பிறசாதியார்களால் மிகவும் துன்புறுத்தப்பட்டு, சமூக அந்தஸ்தில் தாழ்த்தப்பட்டு, இழிவாக நடத்தப்பட்ட இச்சாதியினர் சிற்சில சமயங்களில் அவற்றை எதிர்த்துப் போராடியுள்ளனர். வலுவாக இருந்த சாதியமைப்பும், அதைப் பாதுகாத்து நின்ற உயர் சாதியினரும், மன்னர்களும் இவர்களது போராட்டங்களையும் கிளர்ச்சிகளையும் அடக்கி விட்டனர்.

15.4 இந்நிலையில்தான் அவர்களுடைய நாட்டுப் பரம்பரை வரலாற்றுக் கதைகள் சோகக் கதைகளாயிருக்கின்றன. சாதிசமத்துவக் கருத்துக்களுக்காசவும், சமூக அந்தஸ்திற்காகவும், இலவச உழைப்பை எதிர்த்தும்,[20] வேறுபட்ட உரிமை முறையுடைய மன்னர்களுக்கு பெண் கொடுக்க மறுத்தும், இச்சாதியினரில் சில தலைவர்கள் போராடி உயிர் விட்டிருக்கிருர்கள். இவ்வீரர்களின்வாழ்க்கை வரலாறுகளின் பிற்கால நினைவுகளே தொகுக்கப்பட்டு காவியப்பாணியில் ''வலங்கையர் கதைப் பாடலா''யிற்று.

15.5 சோக வாழ்க்கையின் கண்ணுடி நிழலாக இக்கதைப் பாடல் அமைந்துள்ளது. சமூக அநீதிகளை எதிர்த்துப் போராடிய ஒரு சாதியினர் இக்கதையின் சோகபாத்திரங்கள்.

15.6 இக்கதையை அறிந்த அச்சாதியினர் பிற்காலத்தில் பிறசாதியார் தம்மை இழிவுபடுத்துவதை எதிர்த்துப் போராடியுள்ளனர். அப்போராட்டங்களுள் ஒன்று, திருவிதாங்கூரில் ஒரு நூற்றுண்டிற்கு முன் நடந்த 'மாருப்புச் சேலை'ப் போராட்டம். இப்போராட்டம் வெற்றிபெற்றது. இக்கதையின் சோகக் கதாபாத்திரங்கள தன் மதிப்புக்காகவும், மனித உரிமைகளுக்காகவும் போராடும் உணர்வை ஊட்டுகின்றன.

15.7 தமிழக வரலாற்றில் நவாபு ஆட்சிக் காலத்திலும், வெள்ளையர் ஆட்சியை நிறுவ நடைபெற்ற போர்களின் காலத்திலும், தமிழ்நாட்டில் பல போர்களை நடத்திய வீரர்களான பூலுத்தேவன், கான்சாகிபு, கட்டபொம்மு, ஊமைத்துரை, மருது சகோதரர்கள். தேசிங்கு அனைவரும் சோக முடிவடைந்ததை நாமறிவோம்.

16.1 மேலே நாம் ஆராய்ந்த காலத்திற்கு அடுத்த காலகட்டம் அவர்களுடைய காலம். சுருங்கச் சொன்ஞல் பதினெட்டாம் நூற்றுண்டின் நடுப்பகுதியிலிருந்து, அதன் முடிவு வரையுள்ள ஐம்பது ஆண்டு வரலாற்றில் நடைபெற்ற நிகழ்ச்சிகளின் காலமாகும்.

இக்கால கட்டத்தின் நிகழ்ச்சிகளை ஆராய்வது மிகவும் கடினமான பணி. அதனை ஓரளவு முதல் உலகத்தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கு மாநாட்டிற்கு நான் அனுப்பிய "Historical Ballads of Tamilnad" என்ற ஆய்வுக் கட்டுரையில் மேற்கொண்டேன். இன்னும் மேற்கொண்டு ஆராய்ந்தால்தான் இத் தலைப்பின் கீழ் அக்கால வரலாற்று வீரர்களைப்பற்றி எழுத முடியும்.

எனவே அதனை மற்றோர் ஆய்வுக் கட்டுரைக் கென ஒதுக்கி வைத்துக்கொள்ளலாம்.

16.2 இதுவரை நாம் ஆராய்ந்த பாத் திரங்களிலிருந்து, நாட்டுக்கதைப் பாத்திரங் களின் சோக முடிவுக் கதைகளில் காணப் படும் காரணங்கள் இவையென்ற முடிவுக்கு வரலாம்.

16.2.1 நாட்டுக்கதைப் பாடல்கள் பலவற் றின் தலைவர் தலைவியர் சாதாரண மக்கள்; உழைக்கும் வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் ஆளும் வர்க்கத்தினரோடு நில வுடைமைச் சமுதாயத்தில் கொள்ளும் உறவு, அவர்களிடம் பணிபுரிந்து தமது உழைப்பின் ஒரு பகுதியை அளிப்பதுதான். ஆளும் வர்க் கம், இவர்கள் தமக்கு அடங்கி நடப்பதற் காக, பல சமூகச் சட்டங்களை வகுத்து வைத்துள்ளது. சாதி அமைப்பு முறையைப் பாதுகாக்கிறது. நிலவுடைமை முறையைப் பாதுகாக்க வாரிசு உரிமை முறைகளை வகுத்துள்ளது. இந் நோக்கங்களை நிறைவேற்ற மக்கள் மனதில் நிலவுடைமை முறைக்கு ஆதரவான கருத்துக் களைப் பதியவைக்கிறது.

இச்சமுதாய அமைப்பின் அம்சங்களில் சிலவற்றையும், நிலவுடைமை முறையையும் எதிர்க்கும் வரலாற்று மனிதர்கள், ஆளும் பிரிவினரால் அடக்கப்படுகின்றனர், எதிர்ப் புக்கும், துன்பங்களுக்கும் அஞ்சாமல் போ ராடுபவர்கள் உயிர்த்தியாகம் செய்ய நேரிடு கிறது. இதுவே சோகப் பாத்திரங்களின் படைப்புக்கு சமூக அடிப்படையாகும்.

16.2.3 ஆளும் வர்க்கத்தைச் சேர்ந்த வர்கள் சோகபாத்திரங்களாக வரும் கதைப் பாடல்கள் உள்ளன. இவற்றில் தங்கள் உள் ளத்தில் உள்ள பழைமையான சிந்தனை களோடு, தற்கால அரசியல் போக்கை அறிய முடியாமல், தம்மை மீறிய சக்திகளை எதிர்த்து அழியும் வரலாற்று மனிதர்களே சோகக்கதாபாத்திரங்களாகின்றனர். இதற்கு உதாரணம் ஐவர் ராஜாக்கள் கதையில் வரும் குலசேகரனும், பிற்கால வரலாற்றில் பங்கு கொள்ளும் கட்டபொம்மு முதலியவர்களும் ஆவர்.

16.2.4 சமுதாய அடிப்படை மேற்கூறிய காரணமாயினும், இப்பாத்திரங்களின் படைப்பில், வாய்மொழி இலக்கிய வரலாற் லாற்றில் தோன்றிய சோகப் பாத்திரங்களைப் பற்றிய கருத்துக்களின் வளர்ச்சிப் போக்கும் செல்வாக்குப் பெற்றுள்ளது. அவ்வரலாற் றின் கால கட்டங்களைக் கீழ்வருமாறு பிரிக்க லாம்.

1) மந்திர சக்திக் காலம்.
2) தெய்வீக உறவுக் காலம்.
3) தன்னிகரில்லாத மனிதர் காலம்.
4) பழைய கருத்துக்களால் கட்டுண்டு புதிய வரலாற்றுச் சக்திகளை அறிய முடியாமல், அவற்றிற்குப்பலியாகும் கதைத் தலைவர் காலம்.
5) சமுதாயச் சட்டங்களையும், வழக்கங் களையும் எதிர்த்து உயிர்விடும் காலம்.

இக்காலங்களில் பழைமையான கருத் தை எதிர்த்துப் புதிய கருத்துக்கள் தோன்றி யுள்ளன. பழைமையான கருத்து முற்றிலும் மறைந்துவிடாமல், முழுமையான வடிவத் தில் அல்லாமல் அரைகுறையாக அடுத்த கட் டங்களிலும் தனது செல்வாக்கைச் செலுத்து கிறது. எனவே கடைசிக் கட்டத்தில் பழை மைக்கால கட்டங்களில் தோன்றிய கருத்துக் கள் அனைத்தும் விரவியிருப்பதைக்காணலாம். ஆனால் ஒவ்வொரு கால கட்டத்திலும், முதலில் பழமை செல்வாக்குப் பெற்றிருந்து பின் புதிய கருத்து பழையகருத்தை எதிர்த்து வளர்ச்சி பெற்றுப் பழைமையின் செல்வாக் கைக் குறைத்துச் செல்வாக்குப் பெறுகிறது. ஒவ்வொரு கட்டத்திலும் பழமையும் புதுமை யும் ஒன்றையொன்று எதிர்க்கின்றன. கடைசி கட்டத்தில் பழமையின் செல்வாக்கு இருந்தபோதிலும் அதனை எதிர்த்துப் புதிய கருத்துக்கள் தோன்றுகின்றன. புதிய கருத்துக்களுக்காகப் போராடுகிறவர்களை பழைய கருத்துடையவர்கள், சமுதாய அமைப்பில் மேல்நிலையில் உள்ளவர்கள், அந்

நிலையைப் பாதுகாத்துக்கொள்ள, சமுதாயச் சட்டங்களைப் பயன்படுத்தி அடக்குகிறார்கள். கருத்துப்போரில் பழைமை பலவீனமடைந்து விட்டதையே இது காட்டுகிறது. கடைசிக் கால கட்டத்தில் கருத்துப் போரை விட்டு விட்டுப் புதிய கருத்தை அழிக்க ஆளும் பிரிவினர் வன்முறையையும் சூழ்ச்சிகளையும் பயன்படுத்துகின்றனர். அவற்றிற்கு அடி பணியாது தமது புதிய கருத்திற்கும், புதிய வாழ்க்கையார்வத்திற்காகவும்,மறுக்கப்பட்ட மனித உரிமைகளைப் பெறவும் போராடும் வீரர்களே நமது கதைப்பாடல்களில் வரும் சோகபாத்திரங்களான காத்தவராயன், முத்துப்பட்டன், மதுரை வீரன், சின்னத் தம்பி, கௌதலமாடன் முதலியோர்.

பழமையான சிந்தனைகளால் செயலூக்கம் இழந்து, புதிய நிலைமைகளை அறிய முடியாமல் புதிய சக்திகளுக்குப் பலியாகிற சோக பாத்திரங்கள் பெரும்பாலும் உயர்நிலை வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள்; சிற்றரசர்கள், பாளையக்காரர்கள், தளபதிகள், அதிகாரிகள் முதலியோர். இவர்களுக்கு உதாரணங்கள்: குலசேகரன், (ஐவர் ராஜாக்கள் கதை) சடைக்கத்தேவன் (ராமப்பய்யன் அம்மானை) இரவிக்குட்டிப்பிள்ளை (இரவிக்குட்டிப்பிள்ளை போர்) தேசிங்கு (தேசிங்கு ராஜன் கதை) கான்சாகிபு (கான்சாகிபு சண்டை) பூலுத்தேவன் (பூலுத்தேவன் சிந்து) மருது சகோதரர்கள் (சிவகங்கை அம்மானை, சிவகங்கைக் கும்மி) கட்டபொம்மு (கட்டபொம்மு கும்மி, கதைப்பாடல்கள்) ஊமைத்துரை (கட்டபொம்மு கும்மி, கதைப்பாடல்கள்).

எனவே இருவகையான சோகபாத்திரங்கள் இரு வகையான காரணங்களால் தோற்றம் பெறுகின்றன.

## Bibliography and notes
## (Content)


1 The story of Jason in Greek mythology.

2 Man in the primitive world. Hoebel. Macgraw Hill Book Co. Chapter G.

3 Morte De Arthur — Tennyson Tales of the Round table.

4 Labours of Hercules — Adbriged editions

5 Baghavatha — Bhawan's

6 Aeneid — Virgil

7 Julius Caesar — Shakespeare

8 Richard II — Shakespeare

9 Iliad — Homer - Eng. Translation

10 Odessey — Homer Eng. Translation

11 காத்தவராயன் — வெளியிடப்படாத கதைப் பாடல். இதனை மதுரைப் பல்கலை கழகம் பதிப்பிக்க ஏற்பாடு செய்துள்ளது பதிப்பாசிரியர் நா. வானமாமலை.

12 பெரிய புராணம். சுந்தரர் புராணம்.

13 மதுரை வீரன் கதை - என்னிடமுள்ள எட்டுப் பிரதியும், பெரிய எழுத்து அச்சுப் பிரதிகளும்.

14 முத்துப்பட்டன் கதை - ஏட்டுப் பிரதியிலிருந்து அச்சிட்டு வெளியிட மதுரைப் பல்கலைக் கழகம் ஏற்பாடு செய்துள்ளது. பதிப்பாசிரியர் நா. வானமாமலை. இது குறித்து 10 ஆண்டுகளுக்கு முன் சரஸ்வதி பத்திரிகையில் ஒரு ஆய்வுத்தொடர் கட்டுரையை நான் வெளியிட்டிருக்கிறேன்.

15 சின்னநாடான் கதை - ஏட்டுப் பிரதி வெளியிடப்படவில்லை. கதையை மட்டும் நான் 2 ஆண்டுகளுக்கு முன் வெளியிட்டிருக்கிறேன். தமிழர் 'வரலாறும் பண்பாடும்' என்ற எனது நூலில் 'நாட்டுக் கதைப்பாடல்கள்' என்ற கட்டுரையில் இக்கதையின் சுருக்கம் காணப்படும்.

16 கௌதலமாடன் கதை - நாஞ்சில் நாட்டிலும், பணகுடி, வேப்பிலாங்குளம்பகுதிகளிலும் வழங்குவது. இக் கதைப்பாடல் ஏட்டுப் பிரதியாக உள்ளது. இதன் கதையை 15ல் குறிப்பிட்ட நூலில், அதே கட்டுரையில் காணலாம்.

17 சின்னத்தம்பி கதை - பாட்டு வெளியிடப்படவில்லை. பழைய அச்சுப் பிரதிகள் கிடைக்கும்.

18 ஐவர் ராஜாக்கள் கதை - மதுரைப் பல்கலைக் கழகத்தாரால் வெளியிடப் படவிருக்கிறது. பதிப்பாசிரியர் நா. வானமாமலை.

18 இக் கல்வெட்டுக்கள் 'அஞ்சினான்புகலிடம்' என்ற தலைப்பில் காணப்படும். வெளியிடப் படவில்லை. பத்மனாபபுரம் காட்சி சாலையில் இருக்கிறது.

19 அரசாங்கம், ஊர், சபை போன்ற பொது நிறுவனங்களால் நடத்தப்படும் பொதுக் காரியங்களில் ஊதியமேதுமின்றிக் குறிப்பிட்ட சில சமுதாயத்தினர் உழைப்பதற்கு நிர்ப்பந்திக்கப்பட்டனர். இதற்கு வெட்டி என்று பெயர். சில மேல் சாதியினர் இவ்வுழைப்பிலிருந்து விலக்களிக்கப்பட்டனர். அப்படி உழைக்கக் கட்டாயப்படுத்தப்பட்ட சாதியினர், தாங்கள் உயர்ந்த தொழில் செய்பவர்கள் என்றும், சமுதாயத்தில் தங்கள் நிலை உயர்ந்ததென்றும் கூறி இத்தகைய 'வெட்டி' உழைப்பை எதிர்த்தனர். ஏரிகள், அணைகள் போன்றவை கட்டுவதற்கு வெட்டி உழைப்புத்தர சில சாதியினர் எதிர்த்ததையும், அவ்வெதிர்புகள் மரண தண்டனை போன்ற கொடிய தண்டனைகளால் ஒடுக்கப்பட்டதையும் குறிக்கும் பிற்காலச் சோழர்காலக் கல்வெட்டுக்கள் பல உள்ளன.

20 இது வெட்டியைக் குறிக்கும். பயனற்ற காரியத்தைத் தற்காலத்தில் வெட்டி வேலை என்ற சொற்றொடரால் குறிப்பிடுவதை நோக்கலாம்.

## (Methodology)


1 C.M. Bowra — Heroic poetry, Mac Millan

2 Anthropology — Kroeber — Oxford and I BH.

3 The development of monist view of history — G.P. Plekanov. Foreign languages publishing House, Moscow

4 Cultural heritage and Socialism— Progress publishers. Moscow

5 A short history of Pre capitalist society — T. Zubritsky and others. Progress publishers

6 Historical Materialism — Glezeman and Kursanov. Progress publishers, Moscow.

7 ஒப்பியல் இலக்கியம் — கைலாசபதி பாரி நிலையம் சென்னை.

8 F. Engels Origin of the family private property, and state. Moscow edition.

9 Greek mythology— Gilbert Murray.

10 Historical ballads of Tamilnadu — paper contributed by the author to the First conference Seminar of Tamil studies.

11 Social themes in Tamil Folk-ballads — paper contributed by the author to the conference seminar of Tamil studies.

12 Studies in Indian folk lore — Editor: Sankar Sengupta. C/o Folk lore, Calcutta.

# கல்கியும் ஸ்காட்டும்.

எஸ். தோதாத்திரி எம். ஏ.

[கல்கியை ஸ்காட்டோடு சிலர் ஒப்பிட்டிருக்கிறார்கள். இவ்வாய்வாளர் ஒப்பிடத்தகுந்த இயல்புகளையும், வேறுபாடாகக் கருதத்தக்க இயல்புகளையும் தொகுத்துக் கூறுகிறார். அதனடிப்படையில் இலக்கியநோக்கு, உலகக் கண்ணோட்டம் இரண்டிலும் ஸ்காட், கல்கியினின்றும் வேறுபடுவதைச் சுட்டிக்காட்டுகிறார். இவைதான் ஒரு ஆசிரியரின் எழுத்தின் போக்கையே பாதிப்பவை. இவற்றில் வேறுபாடு இருந்தால், அற்பமான சில இயல்புகளில் ஒற்றுமை இருப்பதைக்கொண்டு இருவரையும் ஒப்பிடுவது பொருத்தமற்றது என்று ஆசிரியர் நிறுவுகிறார்—ஆசிரியர்]

கல்கி தன் வாழ்நாளில் மிகவும் புகழ் பெற்றவர். அவரது எழுத்துக்கள் தமிழகத்தின் மூலைமுடுக்குகளில் எல்லாம் பரவியிருந்தன. பேச்சாலும் எழுத்தாலும் அவர் எல்லோரையும் கவர்ந்தார். அவரது நகைச்சுவை தமிழ் வாசகர்களை வயிறுகுலுங்கச் சிரிக்கவைத்தது. அவர் எழுதியவை எல்லாம் எளிதாக அரங்கேறின. இவற்றிற்கு பல சரித்திர-சமூகக் காரணங்கள் உள்ளன. இவற்றைப் பற்றிச் சிந்தியாத சாதாரண, விமரிசனக் கண்ணோட்டமில்லாத வாசகன் கல்கியை வானளாவப் புகழத் தொடங்கிவிடுகிறான்; அத்துடன் திருப்தி அடைந்து விடுகிறான். ஆனால் விமரிசகர்கள் இதேபோன்று கல்கியை அணுகும் பொழுது அது கேலிக்கூத்தாக இருக்கிறது. இப்படிக் கல்கியைப் புகழும் அம்சங்களில் ஒன்று அவரை ஸ்காட்டுடன் ஒப்பிடுவது ஆகும். கல்கி பற்றி எழுதியவர்கள் எல்லோரும், அவரை ஸ்காட்டுடன் ஒப்பிட்டே எழுதியுள்ளனர். உதாரணமாக கி. வா. ஜகன்னாதன் கல்கி ஸ்காட்டை விட உயர்ந்தவர் என்று கூறுகிறார்: ''ஆங்கிலத்தில் சரித்திர நாவல்கள் பல இருக்கின்றன. ஸ்காட் எழுதிய நாவல்கள் பலருக்கும் தெரிந்தவை. அவருடைய நாவல்களில் சரித்திரத்திற்கு மாறுபாடான குறைகள் இருக்கின்றன என்று முன்னே சொன்ன பேராசிரியர் (கே. வி. ரங்கஸ்வாமி அய்யங்கார்) கூறியிருக்கிறார்'' ''நுட்பமாக இதை (சிவகாமியின் சபதத்தை) ஆராய்ந்து பார்த்தபொழுது வரலாற்றுப் பிழையோ, இட விவரப் பிழையோ ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை''. கி. வா. ஜகன்னாதன் பேராசிரியர் கே. வி. ரங்கஸ்வாமி அய்யங்காரின் இக்கூற்றை ஆதரிக்கிறார்.[1]

டாக்டர் கைலாசபதி கல்கியை ஸ்காட்டுடன் ஒப்பிடுதல் கூடாது என்று கூறுகிறார். அவர் கூறும் காரணம் ''ஸ்காட் ஒரு யதார்த்தவாதி; கல்கி யதார்த்தவாதியல்லர்'' என்பதாகும். கைலாசபதியின் கருத்துப்படி கல்கியை ஸ்காட்டுடன் ஒப்பிடுவது தவறு.[2] கல்கியை ஸ்காட்டுடன் ஒப்பிடுபவர்கள் இவ்விரு எழுத்தாளர்களின் இலக்கிய நோக்கங்களைப் புரிந்துகொள்ளாமலே

எழுதுகிறார்கள். இக்கூற்றுக்களில் எதுசரி என்பதை ஆராய்வோம்.

ஆங்கில இலக்கியத்தில் ஓரளவு பழக்க முள்ள ஒருவன் கல்கியைப் படிக்கும்பொழுது, அவரை ஸர் வால்டர் ஸ்காட்டுடன் ஒப்பிட முயற்சிக்கிறான். இதன் காரணம் என்ன? இதற்குக் காரணம், கல்கிக்கும் ஸ்காட்டிற் கும் சில விஷயங்களில் ஒற்றுமைகள் காணப் படுவதே. ஸ்காட் ஆங்கிலத்தில் அற்புத சரித்திரக் கதைகளையும் (Historical Romances), சரித்திர நாவல்களையும் எழுதிக் குவித்தவர். அவர் காலத்தில் பெரும் புகழ் பெற்றவர். பைரன் என்ற ஆங்கிலக் கவிஞ ருடன் ஐரோப்பாவில் புகழ் பெறவேண்டும் என்று போட்டியிட்டவர்[3]. கல்கியைப்போல் ஸ்காட்டிற்கும் ஏராளமான வாசகர்கள் இருந்தனர். ஸ்காட் மிகவும் விரைவாக நாவல் எழுதும் ஆற்றல் படைத்தவர். அவர், தம் நாவல்களின் கதை அமைப்பு பற்றிக் கவலைப்பட்டதில்லை. சரித்திர உண்மைகளைப்பற்றிக் கவலைப்பட்டதில்லை.[4] கல்கியிடமும் இதே பண்புகளைக் காண்கிறோம். கல்கியை ஸ்காட்டுடன் ஒப்பிடுவதற்கு மற் றொரு காரணமும் உள்ளது. தமிழ் இரத்தத் தில் ஊறியுள்ள உயர்வு நவிற்சி மனப்பாங்கு தான் அது. தமிழில் எழுதப்படுவன எல் லாமே சிறந்தது, உயர்ந்தது என்று கருதும் விமரிசனக் கலைக்கு அப்பாற்பட்ட பண்பு காரணமாக உந்தப்பட்டு கல்கியை ஸ்காட்டு டன் பலர் ஒப்பிடுகின்றனர்.

இது போன்ற புற ஒற்றுமைகளைக் கொண்டு ஸ்காட்டையும், கல்கியையும் ஒப் பிடலாம். ஆனால் இவ்வொற்றுமைகள் யாவும் மேலெழுந்தவாரியானவை. இவை, இவ்விரு ஆசிரியர்களையும் ஒப்பு நோக்கு வதற்கு, தகுந்த அடித்தளம் அல்ல.

இரு வேறு நாவலாசிரியர்களை ஒப்பிடும் பொழுது, அந்த ஆசிரியர்கள் வாழ்க்கை யைப்பற்றி என்ன எண்ணுகிறார்கள் என்பதை யும், நாவல் கலையைப்பற்றி என்ன கருதுகிறார் கள் என்பதையும் நாம் கவனிக்க வேண்டும். சரித்திர நாவல் எழுதுபவர்களை அணுகும் பொழுது, அந்த நாவலாசிரியரின் சரித்திரக் கண்ணோட்டம் என்ன என்பதையும் காண வேண்டும். நாம் ஸ்காட்டையும் கல்கியையும் இந்த அடிப்படையில் இருந்து ஆராய்வோம்.

ஆங்கில இலக்கியத்தில் கற்பனை இயக்கத் தின் (Romanticism) மூல்வர்களுள் ஸ்காட் ஒருவர். ஒரு கவிஞனாகத் தம் வாழ்நாளை அவர் தொடங்கினார். தமது தாய் நாடான ஸ்காட்லாந்தின் நாட்டுப்பாடல்கள், கதை கள், பண்பாட்டு நிகழ்ச்சிகள், வரலாறு எல்லாமே ஸ்காட்டிற்கு மிக நன்றாகத் தெரி யும்[5]. பேக்கர் (E.) என்ற ஆசிரியர் அவரைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறார். 'ஸ்காட்டின் இரத்தத்தில் பழங்காலம் ஊறிப்போயிருந் தது. ஸ்காட்லாந்தின் சரித்திரமும், பாரம் பரியமும் அவருக்கு உணவாகவும், குடிநீராக வும் இருந்தன''[6]. கவிதைத் துறையில் ஸ்காட், பைரன் என்ற கற்பனை இயக்கக் கவிஞரின் போட்டியைச் சமாளிக்க வேண்டி வந்தது. பைரனுடன் ஸ்காட்டால் போட்டி யிட முடியவில்லை[7]. ஸ்காட் தன் இலக்கிய வடிவத்தை மாற்றினார். கவிதையைக் கை விட்டார். சரித்திர நவீனங்கள் எழுதுவதை மேற்கொண்டார். ''வேவர்லி" *(1814)* என்ற தனது முதல் சரித்திர நாவலை எழுதினார்.

ஸ்காட், குறிப்பிட்ட சில கொள்கை களும், நம்பிக்கைகளும் உள்ள நாவலாசிரியர். தனது கலையைப்பற்றி அவர்மிக உயர்ந்தலட்சி யங்களைக் கொண்டிருந்தார். '' வேவர்லி நாவல்களுக்குப் பொது முன்னுரை'' என்ற கட்டுரையில் அவர், தமக்குச் சிறு வயது முதற் கொண்டே இருந்த கதை கூறும் மனப்பாங் கைச் சுட்டிக் காட்டுகிறார். அவருக்கு முன்பே, சரித்திர நாவலாசிரியர்கள் இருந்த னர். லேலாண்ட் கிளாரா ரீவ்ஸ், திருமதி ராட்கிளிப், போன்றவர்கள் இத்துறையில் ஸ்காட்டிற்கு முன்னோடிகளாக இருந்தனர். அவர்களிடம் சரித்திரக் கற்பனை கிடை யாது[8]. ஸ்காட் அவர்களிடமிருந்து சரித் திர நாவல் எழுதும் முறையில் வேறுபட் டார். சரித்திர நாவல் என்பது, மக்கள்

வாழ்க்கை முறைகளையும், பழக்கவழக்கங்களையும் விளக்கிக் காட்டும் கருவியாக இருத்தல் வேண்டும் என்று அவர் கருதினர்.

இதுபற்றி பேக்கர் என்பவர் குறிப்பிடுகிருர்: ''சரித்திர நாவலுக்கு கதை முக்கியம். ஆதலால் அது வெறும் சரித்திரமாக இருத்தல் கூடாது அல்லது போலி சரித்திரமாக இருத்தல் கூடாது. எனவே நாவலாசிரின் தான் நேரில் கண்டால் எப்படி எழுதுவானே அதே போன்று முக்கிய நிகழ்ச்சிகளையும், பிரபலஸ்தர்களையும் பெரிது படுத்தாமல் எழுத வேண்டும். சரித்திர நாவல் என்பது வாழ்க்கையை யதார்த்தமாகப் பிரதிபலிக்க வேண்டும். அது இரவல் ஆடையில் மினுங்கும் அதியற்புத நவீனமாக (Romance) இருத்தல்கூடாது.''[9] ஸ்காட் இந்தக் கருத்தை உடையவர். வேவர்லி என்ற தன் நாவலை ''ஸ்காட்லாந்து வாழ்க்கை முறையை கோடிட்டுக் காட்டும் ஒரு சிறு முயற்சி'' என்று கூறுகிருர்.[10] சரித்திர நாவலை எழுத மூன்று கொள்கைகள் தேவை என்று ஸ்காட் கூறுகிருர். நாவலாசிரியன் தான் எழுதப் புகுந்த சரித்திர காலத்தை உணர்வு பூர்வமாக அனுபவிக்க வேண்டும் என்பது முதலாவது. சரித்திர நாவலில் எண்ணற்ற மனிதர்களை உலவ விட வேண்டும். அவர்கள் சாதாரண மக்கள், உயர்ந்த மனிதர்கள், விநோதமானவர்கள், அநாகரீகமானவர்கள் போன்ற பல்வேறு சமூகப் பிரிவுகளைப் பிரதிபலிப்பவர்களாக இருத்தல் வேண்டும் என்பது இரண்டாவது.[11] மூன்ருவது, கதை அமைப்பு. ஸ்காட், கதாபாத்திரங்களை, பல்வேறு நிகழ்ச்சிகளை வரிசைப்படுத்தும் சாதனங்களாகவே கருதினர். கதை அமைப்பு பற்றி அவர் கவலைப்பட்டதில்லை. ஸ்காட்டின் நாவல்கள் ''வேவர்லியில்'' இருந்து தொடங்கி, 'காஸில் டேன்ஜரஸ்' (Castle Dangerous) வரை இந்தக் கொள்கைக்கு உட்பட்டு அமைக்கப்பட்டுள்ளன.

இப்பொழுது கல்கியிடம் வருவோம். கல்கி தனது கலைபற்றி கொண்டுள்ள கருத்து என்ன? முதன் முதலாகத் தெரிந்து கொள்ள வேண்டியது, கல்கி, ஸ்காட்டைப் போன்ற உறுதியான கொள்கையையுடைய, விமரினக் கண்ணேட்டமுள்ள எழுத்தாளர் அல்லர். கல்கி, கதை எழுதும் கலைபற்றி எந்தவிதமான கோட்பாடுகள் உள்ளவர் என்று கூற முடியாது. பொன்னியின் செல்வனின் பின்னுரையில் கல்கி பின் வருமாறு கூறுகிருர் ''பொதுவாக ''நாவல்கள்'' எழுதுவதற்கும், முக்கியமாகச் சரித்திர நவீனங்கள் எழுதுவதற்கும், சட்ட திட்டங்கள் ஏற்பட்டிருக்கவில்லை. (அப்படி ஏற்பட்டிருந்தால் அவற்றை நான் படித்ததில்லை) ஆசிரியர்கள் ஒவ்வொருவரும் தமக்குரிய முறையை வகுத்துக் கொண்டு எழுதுகிருர்கள்.''[12] இக்கருத்து ஸ்காட்டின் கொள்கையிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. கல்கி, எழுத்தாளன் தன்னிச்சையாக, சுதந்திரமாக எழுத வேண்டும் என்ற எண்ணம் உள்ளவர். எந்தவிதமான கொள்கையையும் பின்பற்ற வேண்டாம் என்ற கோட்பாடுடையவர். அவருடைய எழுத்துக்கள் முழுவதிலும் இக் கருத்து பிரதிபலிப்பதைக் காணலாம். யதார்த்த நிலை என்ன என்பதை ஆராயாமல் கல்கி உணர்ச்சி பூர்வமான ஒரு சில முடிவுகளுக்கு வந்து விடுகிருர். சிவகாமியின் சபதத்திற்கு கல்கி எழுதியுள்ள முன்னுரையில், விதி வசமாக அவருக்கும் தமிழ் நாட்டின் பழங்காலத்திற்கும் தொடர்பிருக்கிறது என்று கூறுகிருர்.[13] சிவகாமியின் சபதத்தின் கதா பாத்திரங்கள் அவரது மனதில் பன்னிரண்டு ஆண்டுகள் இருந்தன என்று கூறுகிருர். அந்த நாவல் முழுவதும் கற்பனை என்று கூறுகிருர்.[14] கல்கி சரித்திர சம்பவங்களை தனது நாவலிற்கு கருவாகத் தெரிந்தெடுக்கக் காரணம், கதையை எவ்வளவு தூரம் வேண்டுமானுலும் நீட்டலாம் என்பதுதான்[15]. இந்தக் கண்ணேட்டத்தில் தான் அவர் பார்த்திபன் கனவை எழுதினர். இந்த விவரங்கள் கல்கிக்கும் ஸ்காட்டிற்கும் உள்ள வேறுபாட்டைத் தெளிவாகக் காட்டுகிறது. இதிலிருந்து நாம் ஒரு முடிவிற்கு வரலாம். ஸ்காட் சரித்திர நாவல் இப்படித்தான் அமையவேண்டும், என்ற கொள்கையுள்ளவர்.[16] இந்த விஷயத்தில் அவர் கற்பனை இயக்கத்திற்கு எதிரானவர்.

கல்கி ஊழின்மீது நம்பிக்கை உள்ளவர். சரித்திர நாவல்கள் எப்படியும் அமையலாம் என்ற கருத்து உள்ளவர்.

இது கல்கிக்கும், ஸ்காட்டிற்குமுள்ள முதல் வேறுபாடு. இதேபோன்று கல்கியும், ஸ்காட்டும் மற்றொரு முக்கியமான அம்சத்தில் வேறுபடுகின்றனர். வாழ்க்கையை அணுகும் முறையில் கல்கியும், ஸ்காட்டும் எதிர் எதிரானவர்கள். ''இலக்கியம் என்பது வாழ்க்கையின் ஒரு பகுதி. வாழ்க்கைக்கும் அதற்கும் உள்ள பொருத்தத்தைக் கொண்டு தான் இலக்கியத்தை எடைபோட வேண்டும் ......வாழ்க்கை பற்றிய உணர்வை அளிக்காத நாவல்கள், ஒரு தடவை படிக்கத்தகுந்தவை. ஆனால் மறுபதிப்பிற்கு பொருத்தமற்றவை''[17] ஆர்னல்டு கெட்டில் என்ற விமரிசகர் நாவலிற்கும். வாழ்க்கைக்குமுள்ள தொடர்பை இவ்வாறு அழுத்தமாகக் கூறுகிறார். ஸ்காட் வாழ்க்கையை அணுகுவதில் சில திட்டவட்டமான கொள்கைகள் உடையவர். அவர் ஒரு யதார்த்தவாதி. சரித்திர காலங்களைப் படம் பிடித்துக் காட்டும் கண்ணாடியாக அவரது நாவல்கள் அமைந்துள்ளன. இதுபற்றி ராபின் மேஹெட் என்ற விமர்சகர் கூறுவது வருமாறு. ''மக்களைப் பற்றிச் சிந்திக்கும் பொழுது கூட, ஸ்காட் கற்பனை இயக்கத்தின் தனிநபர்கொள்கையிலிருந்து முற்றிலும் மாறுபட்டவர்;''[18] பதினெட்டாம் நூற்றாண்டின் போலி உணர்வுகளை ஸ்காட் புறக்கணித்தார். ஆளும் வர்க்கத்தினரின் கண்ணோட்டத்தில் இருந்து நாவல் எழுதுவதை மறுத்து, பெருவாரியான மக்கள் நோக்கிலிருந்து அவர் நாவல் எழுதினார். அவருடைய பெரும்பாலான நாவல்களில் சமுதாயத்திலிருந்து தப்பியோடும் மனப்பான்மை உள்ளது. ஆனால் அவருடைய சிறந்த நாவல்களான "The Heart of The Midlothian" "The Antiquary" ஆகியவற்றில் தான் ஒரு யதார்த்த வாதி என்பதை ஸ்காட் எடுத்துக் காட்டுகிறார். இது பற்றி ஆர்னல்டு கெட்டில் கூறுகிறார், ''ஸ்காட்லாந்து மக்களின் இன்ப துன்பங்களைப் படம்பிடித்துக் காட்ட ஸ்காட் தீவிர முயற்சி எடுத்துக் கொள்கிறார். இப் புத்தகங்களுக்குப் பலம் தரக்கூடிய சக்தி விவசாயிகளின் பிரச்சினைகளை ஸ்காட் உணர்ந்ததுதான்.''[19] ஸ்காட் யதார்த்த வாதி என்று விளக்க வந்த போரிஸ் சுச்காவ் (Boris Suchkov) என்ற எழுத்தாளர் கூறுகிறார். ''ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் உள்ள சமூகசக்திகளை வேறுபடுத்திப்புரிந்து கொண்ட ஸ்காட், அவை தாம் வர்க்கப் போராட்டங்களுக்குப் பின்னணி என்று கருதுகிறார். அவர் இக்கண்ணோட்டத்துடன் தமது நாவல்களுக்கு ஒரு இதிகாசத் தன்மையை ஏற்படுத்துகிறார். இதன் காரணமாக அவரது நாவல்கள் யதார்த்தத்தைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக விளங்குகின்றன. சரித்திரத்தின் அடித்தளம், வர்க்க முரண்பாடுகள் தான் என்ற கருத்தில் அவரது நாவல்கள் உருவாகியுள்ளன. இதனால் தான் அவரது நாவல்கள் உண்மையில் சரித்திர நாவல்கள் ஆகின்றன. இதனால் தான் ஸ்காட்லாந்து இனக்குழு மக்களின் தினசரி வாழ்க்கையையும், அரசியல் போராட்டங்களையும் அவரால் நன்கு சித்திரிக்க முடிகிறது. அதோடு மட்டுமல்லாமல், சமூக வாழ்வின் உறவுகளுக்கு அடிப்படைக் காரணங்களையும் அவரால் வெளிப்படுத்த முடிகிறது.''[20] ஸ்காட்டின் வாய்மொழியாக அவருடைய யதார்த்த வாதம் பற்றி நாம் காண்போம். ''I cannot boast of having sketched any distinct plan of work. The whole adventures of waverly in his movements up and down the country with the Highland Cateran Kan are managed without much skill. It suited best however, the road I wanted to travel and permitted me to introduce some descriptions of scenery and manners, to which the reality gave an interest which the powers of the author might have other wise failed to attain for them''[21] ஸ்காட் உருவாக்கிய கதாபாத்திரங்கள் இந்தக் கருத்தைத் தெளிவாக்குகின்றன. "Guy Mannering" என்ற நாவலில், ஸ்காட்லாந்தின் பல்வேறு வர்க்கங்கள் தெளிவாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன. நிலப்பிரத்துவ சமுதா

யத்தின் பிரதிநிதியாக காட்பிரே பெர்ட்ரம் என்பவன் அந்தநாவலில் வருகிறன். கில்பர்ட் கிளாசின் வளர்ந்து வரும் முதலாளித்துவ சமுதாயத்தின் பிரதிநிதியாகவிளங்குகிறன். அவனைப் பொறுத்த அளவில் பணம் தான் உலகின் விதி. மெக்மெரில்லீஸ் என்ற நாடோடிப் பெண் ஏழைகளின் பிரதிநிதியாக உள்ளாள். அவள் சமூக அமைப்பு அழிவதைப் பற்றி குறி கூறுகிருள். காட்பிரேபெர்ட்ராம் நாடோடிகளைத் துரத்தும் பொழுது அவள் பின்வருமாறு கூறுகிருள். ''இனங்கோவன் பிரபுவே, உன் வழியில் செல்; இன்று நீ ஏழு வீடுகளின் விளக்குகளை அணைத்து விட்டாய்! உன் வீட்டில் அடுப்பு எரியுமா என்று பார்! இன்று ஏழு குடிசைகளைக் கொளுத்தி விட்டாய். உன் வீட்டுக்கூரை உறுதியாக உள்ளதா என்று பார். உன்குதிரை எங்கள் பாழடைந்த வீடுகளை மிதிக்கலாம். ஆனால் உன் வீட்டு அடுப்பில் பூனை உறங்கப் போகிறது'' [22]

ஸ்காட்டின் சரித்திரக் கண்ணேட்டமும் திட்டவட்டமானதே. கற்பனை இயக்கத்தைச் சார்ந்தவர்கள், பழமை விரும்பிகள். பழமையை, நிகழ் காலத்திலிருந்து தப்பித்துச் செல்ல ஒரு கருவியாக அவர்கள் பயன்படுத்தினர்கள். ஸ்காட்டும் இத்தகையவர் தாம். ஆனல் அவர் காலரிட்ஜ், கீட்ஸ் போன்றவர்களிடமிருந்து வேறுபட்டார். ஸ்காட் பழமை நோக்கித் திரும்பியதற்கு காரணம் அவர் கால இங்கிலாந்தின் நிலைதான். அவர் காலத்தில் இங்கிலாந்தில் பெரிய சமுதாய மாறுதல் நிகழ்ந்து கொண்டிருந்தது. தொழில்புரட்சி, நாட்டின் பொருளாதாரத்தில் பெரிய மாறுதலை ஏற்படுத்தியது. பழைய நில பிரபுத்துவத்தின் ஆதிக்கம் மறையத் தொடங்கியது. மத்தியதரவர்க்கம். வாணிபப் பெருக்கம் காரணமாக, அரசியல் செல்வாக்குப் பெற்றது. முதலாளி வர்க்கம் தோன்றியது. ஸ்காட் இவற்றை வெறுத்தார். பணத்தின் சக்திக்கு மக்கள் அடிமையாக்கப் படுவதைக் கண்டார். பணத்தின் வளர்ச்சிதான் இங்கிலாந்தின் சமூக உறவுகள் சிதையக்காரணம் என்று ஸ்காட்கருதினர்என கிரியர்சன் என்ற[23] விமரிசகர் கூறுகிருர். முதலாளித்துவவர்க்கத்தின்வெறுமையை ஸ்காட் கண்டார். அந்த வர்க்கம் நிலப்பிரத்துவ அமைப்பை வெற்றி கண்ட போதிலும் அதுவும் ஒன்றும் சாதித்து விடப் போவதில்லை என்பதையும் கண்டார். ''பூர்ஷ்வாக்கள், நிலப்பிரபுத்துவ அமைப்பின் மீது கண்ட வெற்றி குறுகிய தன்மை உள்ளது என்ற கருத்துக் கொண்ட ஸ்காட் மற்ருெரு புதிய சமூக அமைப்பைத் தேடத்தொடங்கினர்'' [24] அதற்கு அவர் பழங்காலம் நோக்கித் திரும்பினர். சமூகத்தின் பல்வேறு வகுப்பினர்களுக்கிடையே உள்ள உறவுகள் சிதைவதை அவர் கண்டார். ஏழைகள் சுரண்டப்படுவதையும் அவர் உணர்ந்தார். மெக்மெரிலீஸ் கூறியவற்றை மேலே கண்டோம். இவை இதற்குச் சிறந்த உதாரணம். இது பற்றி ராபின் மே ஹெட் கூறுகிருர். ''Guy mannering'' என்ற நாவலில் ஸ்காட் நாடோடிகள் மூலமாக போலி உணர்வுகளை எழுப்பவில்லை...... இனங்கோவான் குடும்பத்திற்கும், அவர்களுக்கும் உள்ள உறவு, ஸ்காட்லாந்தின் மூலை முடுக்குகளில் எல்லாம் புதிய கருத்துக்கள் பரவுவதன் காரணமாக சிதைகிறது என்பதை ஸ்காட் காட்ட விரும்புகிருர்...... அதே சமயத்தில் கில்பர்ட் கிளாசின் போன்றவர்கள் வளர்ச்சி பெறுகிருர்கள் என்பதை அவர் நமக்கு நினைவூட்டுகிருர்'' [25] ராபின் மே ஹெட் மேலும் கூறுகிருர் ''ஸ்காட்டின் எந்த நாவலை எடுத்துக்கொண்டாலும் அதில் சமூக முரண்பாடுகள் பிரதிபலிப்பதைக் காணலாம்'' [26]

ஸ்காட்டின் சரித்திரக் கண்ணேட்டத்தின் ஒரு பகுதி, வர்க்கங்களுக்கு இடையே நிலவும் முரண்பாட்டைப் புரிந்து கொண்டது. மற்ருெரு பகுதி 'தனிநபர்கள் வரலாற்றை ஆக்கவில்லை' என்ற கருத்து. ஸ்காட் உருவாக்கியுள்ள ரிச்சர்டுமன்னன் அரசனுக்குரிய நிறை, குறைகள் நிரம்பியவன். எலிஸபெத் மகாராணி மனித உணர்ச்சிகள் உள்ள ஒரு சாதாரணப் பெண். இந்தப் பெரிய மனிதர்கள் எல்லாம் ஸ்காட்டின் நாவல்களில் முக்கியமானவர்கள் அல்லர்; சமூகம் தான் முக்கியம். இப்பெரிய மனிதர்கள் சமூகத்தின் ஒரு கோடியில் இருப்பவர்கள். [27]

வாழ்க்கை பற்றியும், சரித்திரம் பற்றியும் கல்கியின் கண்ணோட்டம் என்ன? ஸ்காட்டைப் போல் கல்கி எதையும் திட்டவட்டமாகக் கூறவில்லை. கல்கியின் சரித்திர நவீனங்களில் இருந்து நாம் கல்கியின் வாழ்க்கைக் கண்ணோட்டம் பற்றி ஒரு சில முடிவுகளுக்கு வரலாம். கல்கி ஒரு லட்சியவாதி. அவர் படைத்த கதாபாத்திரங்கள் கனவு உலகைச் சார்ந்தவர்கள். மனிதனின் உணர்வுள்ள ரிச்சர்டு மன்னனையோ, பெண்மையின் ஆசாபாசங்கள் உள்ள எலிசபெத் மகாராணியையோ கல்கி படைக்கவில்லை. அருள்மொழி வர்மன் எந்த இக்கட்டான சூழ்நிலையையும் சமாளிக்கும் திறன் பெற்றவன். அவன் ஐவான் ஹோ அல்ல. வந்தியத் தேவன் அசகாய சூரன். கரிகாலன் மறக்கள வேள்வியில் முழு ஈடுபாடு உள்ளவன். குந்தவி அரசியல் சாணக்கியர்களையும் தோற்கடிக்கும் ''பழையாறைப் பெண்புலி''. வானதி மென்மைக்குப் பெயர் பெற்ற பெண். நரசிம்மவர்மன் தந்தைக்கு அடங்கியவன். மகேந்திரவர்மன் தர்மத்தின் மறுவுரு. இப்படிப்பட்ட லட்சிய கதாபாத்திரங்களை உலவவிட்டு, வாசகர்களை கனவு உலகிற்கு அழைத்துச் செல்கிறார் கல்கி. இதனால் அவரது சரித்திரநவீனங்களில் யதார்த்த வாழ்விலிருந்து விலகி நிற்கும் ஒரு கனவு மனப்பான்மையை நாம் காண்கிறோம். இந்தக் கதாபாத்திரங்கள் எல்லாம் யாவர்? இவர்கள் நிலவுடைமை சமுதாயத்தின் ஒரு பகுதியினர். கல்கியின் நவீனங்களில் இருந்து ஒருவன் பெறக்கூடிய அனுபவம் இந்தப்பெருந் தலைவர்கள் தாம் வாழ்க்கையின் முழு அம்சம் என்ற உணர்வுதான். உண்மையில் இவர்கள் நிலவுடைமைச் சமுதாயத்தின் ஒரு பகுதியினர் தான். இவர்கள் வாழ்வை மட்டும் பிரதிபலிக்கும் கல்கி, வாழ்க்கை முரண்பாடுகளை மறுக்கிறார். இவர்களுடைய வாழ்விற்கு அப்பால் கல்கியின் வாழ்க்கைக் கண்ணோட்டம் விரிவடையவில்லை. அவருடைய சரித்திர நவீனங்களில் வரும் சிறு கதாபாத்திரங்கள் கதையம்ச அளவில் உள்ளத்தைத் தொடுபவைகளாக இருந்தாலும், ஸ்காட்டின் மெக்மெரிலீஸ், போன்று எந்தப் பெருவாரியான சமூகவர்க்கங்களையும் குறிப்பிட்டு நிற்கவில்லை. ஸ்காட்டிலிருந்து கல்கி மற்றொரு அம்சத்தில் வேறுபடுகிறார். கல்கி விதியின் சக்தியில் நம்பிக்கையுள்ளவர். வாழ்க்கை நிகழ்ச்சிகள் முழுவதும் விதிவசத்தால் நடைபெறுகின்றன என்ற கண்ணோட்டம் உள்ளவர்.[28]

சரித்திரம் பற்றிய கண்ணோட்டத்திலும் ஸ்காட்டிற்கும், கல்கிக்கும் வேறுபாடு உண்டு. ஸ்காட் கற்பனுவாத இயக்கம் காரணமாக பழங்காலம் நோக்கித் திரும்பினார். யதார்த்தத்தையும், (realism) கற்பனாவாத இயக்கத்தையும் ஸ்காட் ஒன்று கலக்கினார். கல்கி பழமை நோக்கித் திரும்புவதற்குக் காரணம் தேசியம்.[29] தமிழ்நாட்டின் பழங்காலத்தை கல்கி, தமிழக மக்களுக்கு பொற்காலமாகத் தீட்ட விரும்புகிறார். தமிழகத்தின் வரலாறு கல்கியின் கையில், தூங்கிக் கிடந்த தமிழக மக்களை விழிப்படையச் செய்யும் ஒரு கருவியாகப் பயன்படுகிறது. (utilitarian)[30] இக்கருத்தைப் பேராசிரியர்: நா. வானமாமலை வலியுறுத்துகிறார். கல்கி தமிழகத்தின் பழங்காலத்தைப் பொன்யுகமாகக் காட்டுகிறார் என்பதற்கு ஓர் உதாரணம் காட்டலாம்: ''சிவகாமியின் சபதத்தின்'' முன்னுரையில் கல்கி பின்வருமாறு கூறுகிறார்.

''அப்படியென்றால் அந்தக்காலத்தில் தமிழகத்தின் பண்பாடும், சமுகவாழ்க்கையும் எவ்வளவு மேம்பட்டிருக்கவேண்டும்! அத்தகைய மேம்பாட்டை ஒரு சமூகம் அடைய வேண்டுமானால் அதற்கு எத்தனை நூற்றாண்டுகளுக்கு முன்னாலிருந்து அச்சமூகத்தில் கலையும் கல்வியும் நல்லரசாட்சியும் நல்லொழுக்கமும் வளர்ந்து வந்திருக்கவேண்டும். இதையெல்லாம் நினைக்க நினைக்கப்பண்டைத்தமிழ் நாட்டில் வாழ்ந்த நம் மூதாதையர்களிடம் பக்தியும் மரியாதையும் பொங்கிவளர்ந்தன. தமிழகத்தின் பழம் பெருமையைப் பற்றிக் கேள்விப்பட்டதெல்லாம் உண்மையென்பது மட்டுமல்ல, இதுவரை உண்மையை ஓரளவு குறைத்துச் சொல்லியே வந்திருக்கிறார்கள் என்று தோன்றியது...மாமல்லபுரத்தில் உள்ள சொப்பன சிற்பலோகத்தைப் பலவந்தத்தின்

மூலமாக சிருஷ்டி செய்திருக்க முடியாது[31]'' இந்த மேற்கோள் கல்கி எவ்வாறு தமிழக வரலாற்றை அணுகினர் என்பதைக்காட்டுகிறது. கல்கியின் கண்ணேட்டத்தில் தமிழகத்தின் பழங்காலம் மகோன்னதமானது; பொன்மயமானது. கல்கிபடைத்தஅரசர்களும், படைத் தலைவர்களும் அந்தப் பொன்மயமான காலத்தில் உள்ளனர். அவரது ஆடவரும், பெண்டிரும் குறையில்லாதவர்கள். அறிவொளி மிகுந்தவர்கள். இவைமுற்றிலும் கற்பனைவடிவங்கள். மக்களது வாழ்வை யதார்த்தமாக சித்தரிக்க வேண்டும் என்ற ஸ்காட்டின் கருத்து கல்கியிடம் இல்லை.

மற்றெரு அம்சத்திலும் கல்கியும், ஸ்காட்டும் வேறுபடுகின்றனர். வரலாற்றை அணுகுகையில், ஸ்காட் வர்க்கபேதங்களை ஒப்புக் கொள்ளுகிறர். தனிமனிதர்களை சமூகநிகழ்சிகளுக்கு ஸ்காட் உட்படுத்துகிறர். கல்கியிடம் இந்தவரலாற்றுக் கருத்து இல்லை. கல்கி ஆளும் வர்க்கத்தினரின் கண்ணேட்டத்தில் வரலாற்றைக் காண்கிறர். அருள்மொழிவர்மரின் வீரச்செயல்களை வருணிக்கிறர். கரிகாலனின் கோபத்தை படம்பிடிக்கிறர். குந்தவியின்அடக்கமான அரசியல்காதலை வெளிப்படுத்துகிறர். நரசிம்மரின் இரண்டுங்கெட்டான் நிலையைத் தெரிவிக்கிறர். ஆனல் கல்கி படம்பிடித்துக் காட்ட விரும்பும் மகோன்னதமான காலம் போலியானது என்பதை வரலாற்று வல்லுநர்கள் வெளிப்படுத்தி உள்ளனர். சோழர்களின் காலத்தைப்பற்றி பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி பின்வருமாறு கூறுகிறர். ''சோழர்கள் காலத்தில் பெரும்பான்மையான மக்கள் கிராமங்களில் வசித்தனர். அவர்களது முக்கிய தொழில் விவசாயம். நிலவுடமைக்கு மிகுந்த மதிப்பு இருந்தது. எல்லோரும் சிறுஅளவிலாவது நிலம் இருப்பதைப் பெருமையாகக் கருதினர். கிராமங்கள் உழவர்களின் குடியிருப்புகளாக இருந்தன. அவற்றின் மகாசபை நிலப்பிரபுக்களின் கையில் இருந்தது.... பெரிய நிலச்சுவான்தார்களும் இருந்தனர்; சிறு நிலச்சுவான்தர்களும் இருந்தனர். இவர்கள் தவிர நிலமற்ற விவசாயிகளும் இருந்தனர். இந்தவிவசாயப் பாட்டாளிகள் உழவுத்தொழிலின் பல்வேறு கட்டங்களில் பணிபுரிந்தனர். இவர்களில் சிலர் நில அடிமைக (serf) ளாக இருந்தனர். இவர்களுக்கு கிராம விவகாரங்களில் பங்கெடுக்கும் உரிமை இல்லை. கிராமத் தொழில் வினைஞர்கள், கிராமப் பொதுநிலத்தில் பங்குபெற்றனர். [32]'' பேராசிரியர் நா. வானமாமலை சோழர்கள் காலத்தில் வர்க்கப் போராட்டங்கள் நடந்தன என்று கூறுகிறர்.[33]

கல்கியின் சரித்திர நவீனங்களில் சோழர் காலத்தைப்பற்றி இந்த யதார்த்த நிலையைக் காண்பது அரிது. அவரது சரித்திர நவீனங்கள் வாசகர்களைக் கனவு உலகத்திற்கு அழைத்துச் செல்கின்றன. மக்களைக் காண்பதே அரிது மேலே கூறியுள்ள சமூகப் பின்னணி இல்லாமையால் அவரது காவிய நாயகர்கள் வெறும் வீரச் செயல் புரியும் அதியற்புத மனிதர்களாக விளங்குகின்றனர். இதன் காரணமாகத் தான் எனது முந்திய கட்டுரையில் கல்கி வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் சரித்திர நவீனங்கள் எழுதவில்லை என்று கூறியுள்ளேன்.[34]

இவற்றைக் கொண்டு நாம் ஒரு சில முடிவுகளுக்கு வரலாம். கி. வா. ஜகன்னதன், டாக்டர். சுப்பராயன், சிதம்பர சுப்பிரமணியன் போன்றவர்கள் கல்கியை ஸ்காட்டுடன் ஒப்பிடுகின்றனர். ஸ்காட்டை விடச் சிறந்தவர் என்று கூறுகின்றனர். இது மிகையார்வம் காரணமாகத் தோன்றிய கருத்து. டாக்டர் கைலாசபதி, கல்கி ஸ்காட்டைப்போல் யதார்த்தவாதி அல்லர் என்பதனுல் மட்டும், கல்கியை ஸ்காட்டுடன் ஒப்பிடக் கூடாது என்று கூறுகிறர். கல்கியும், ஸ்காட்டும் இரு வேறு துருவங்கள். நாவல் பற்றிய கொள்கையிலும் வாழ்க்கையைப்பற்றிய கண்ணேட்டத்திலும் சரித்திரத்தை அணுகும் முறையிலும் இருவருக்கும் இடையேயுள்ள வேறுபாடுகள் அடிப்படையானவை. இக்கட்டுரையின் ஆரம்பத்தில் கூறப்பட்டுள்ள புற ஒற்றுமைகள் இருப்பினும் அடித்தளத்தில் பெரும் வேறுபாடுகள் உள்ளன. எனவே கல்கியை ஸ்காட்டுடன் ஒப்பிட முடியாது என்ற கூற்று சரியானதே.

## Bibliography.


1 தமிழ்நாவலின் தோற்றமும் வளர்ச்சியும்.
— கி.வா. ஜகன்னுதன் (103 - 104)

2 தமிழ் நாவல் இலக்கியம்.
— Dr. கைலாசபதி P. 114 — (F.N)

3 The History of English Novel —
Ernest. E. Baker Vol 6. P. 131

4 Ibid ,, ,, Vol 6.P. 132

5 Walter Scott. — Robin Mayhead P.4

6 The history of English Novel —
Ernest. E. Baker Vol 6. P. 123

7 Ibid ,, ,, P. 131

8 Ibid ,, ,, P. 134

9 Ibid page 135

10 Waverly — Sir Walter scott.

11 A History of English Novel —
E.Baker. P. 137

12 "பொன்னியின் செல்வன்" —
பிற்சேர்க்கை. பக். IV

13 'சிவகாமியின் சபதம்' முன்னுரை - பக் 1

14 Ibid ,, ,, பக் 2

15 தமிழ் நாவலின் தோற்றமும் வளர்ச்சியும். — கி. வா. ஜ. பக். 40

16 Walter Scott.—Robin Mayhead—P.6

17 An Introduction to English Novel —
Arnold Kettle — Vol. I. P. 12

18 Sir Walter Scott.—Robin Mayhead.P.7

19 An introduction to English Novel —
Kettle. A. Vol I. P. 110

20 Problems of Modern Aesthetics
(articles) — P. 326

21 Waverly — General Preface XV

22 Sir Walter Scott — Robin Mayhead-
Quoted P. 65

23 Sir Walter Scott, — Grierson P. 301

24 Problems of Modern Aesthetics —
P. 326

25 Sir. Walter Scott— Robin Mayhead -
P. 67

26 Ibid ,, ,, P. 52

27 A History of English Novel —
E. Baker. Vol 6. P. 135

28 பொன்னியின் செல்வன். பாகம் 5.
பக். 553

29 Historical Romances of Kalki—
Aaraaichi Oct. 70. P. 48

30 Ibid ,, ,, ,,

31 'சிவகாமியின் சபதம்' முன்னுரை. பக். 4

32 Studies in Tamil Folk Literature —
N. Vanamamalai - Quoted P. 99

33 Ibid ,, ,, P. 105

34 Historical Romances of Kalki —
'Aaraaichi' Oct. 70. P. 48

# இரா. இராகவையங்காரின் ஆய்வுமுறை

''தமிழவன்''

['ஆய்வு முறைகள்' என்ற தொடரில் இரா. இராகவையங்காரின் ஆய்வுமுறையைத் தமிழவன் இக்கட்டுரையில் ஆராய்கிருர். இதுவரை வையாபுரிப்பிள்ளை, கா. சுப்பிரமணிய பிள்ளை ஆகிய இரு ஆய்வாளர்களது ஆய்வு முறைபற்றி முறையே இராம.சுந்தரம், வெ. கிருஷ்ணமூர்த்தி ஆகிய ஆய்வாளர்களது திறனாய்வுரைகள் வெளிவந்தன. வடமொழியும், தமிழ் மொழியும் கற்றவர் இரா.இராகவய்யங்கார். சமயப்பற்று மிக்கவர். தற்கால அறிவியல்களான தொல் பொருளியல், வரலாற்றியல், மானிடவியல், ஒப்பியல் இலக்கிய ஆய்வுகள் இவற்றையறியும் வாய்ப்புப் பெருதவர். இவருடைய ஆய்வுகளைப் பார்ப்பனர் என்ற காரணத்தால் பார்ப்பனரல்லாத உயர் சாதியைச் சேர்ந்தவர்கள் ஒதுக்கித் தள்ளுகிருர்கள். ஆய்வுக்குத் துவேஷங்களை ஆதாரமாகக்கொள்ளாமல், சான்றுகளையும், ஆய்வு முறையையும். உலகக்கண்ணேட்டத்தையும் ஆதாரமாகக் கொண்டே இவ்வாய்வாளர் இராகவையங்காரின் ஆய்வுக்கட்டுரைகளை மதிப்பிடுகிருர் — ஆசிரியர்]

1.0. தமிழில் ஆய்வு மேனுட்டார்களால் தொடங்கி வைக்கப்பட்டது. அதனைத் தொட்டுத் தொடர்ந்து பலர் ஆய்வுகள் செய்யத் தலைப்பட்டனர். மேலும் இந்தக் கால கட்டத்தில் தான் பல நூல்கள் அச்சு ஏறின. புதிய புதிய செய்திகள் பண்டைத் தமிழனைப் பற்றியும் நாட்டைப்பற்றியும் கூறப்பட்டன. இக் காலகட்டத் தமிழாய்வாளர்களாக சுந்தரம் பிள்ளை, இராவ்பகதூர் சி. வை. தாமோதரன் பிள்ளை, வி. கனகசபைப் பிள்ளை, நாரண ஐயங்கார், வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார், மறைமலையடிகள், சுன்ஞகம் அ. குமாரசாமிப்பிள்ளை, இரா. இராகவையங்கார், மு. இராகவையங்கார் ஆகியோர் விளங்கினர். இவர்கள் காலம் அச்சுப்பதிப்பும் தமிழில் தேவையான தொண்டாகக் கருதப்பட்டதால், இவர்களில் பலர் ஆய்வுமுயற்சிகளையும், பதிப்பு முயற்சிகளையும் செய்து கொண்டிருந்தனர். இவ்வாய்வாளர்களில் ஒருவரான இரா. இராகவையங்காரின் ஆய்வுமுறைகளைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

1.1. இவருடைய ஆய்வைப்பற்றிப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் கீழ்வருமாறு கூறுகின்ருர். '' ... அதுவரை தெரியாதிருந்த பல பொருள்களைப் பற்றி ஆராய்ச்சியுரைகள் செவ்விய முறையில் எழுதிவந்தார். இவருடைய ஆழ்ந்த கல்வியும் நுணுகிய ஆராய்ச்சித்திறனும், பொருள்களை முறைப்பட பாகுபடுத்திப்பிரித்து விளக்கும் பேராற்றலும் அக்கட்டுரைகளில் புலனுகின்றன'' [1]

1.2. இனி, இரா. இராகவையங்கார் அவர்கள் தனது ஆய்வு முடிவுகளுக்கு எத்தகைய

மூலங்களைப் பயன் படுத்தினர் என்பதைக் காண்போம். அக்காலத்தில் அறிமுகமான பல் வேறு துறைக் கருத்துக்களையும் அவர் தமது ஆய்வு முடிவுகளை நிரூபிக்கும் சான்றுகளாகப் பயன் படுத்தினர். நிகண்டுகள், தமிழ் வட மொழி இலக்கியங்கள், பிறநாட்டார் பிரயாணக் குறிப்புகள், தமிழ் வடமொழி இலக்கணங்கள், தமிழக, பிறநாட்டு வரலாற்றுச் சான்றுகள், வேதங்கள், இதிகாசங்கள் சிலா சாசன ஆய்வுமுடிவுகள், அன்றைய மொழியியல் கருத்துக்கள் ஆகிய பல்வேறு துறை அறிவையும் பயன் படுத்தி இரா. இராகவையங்கார் தனது ஆய்வு முடிபுகளைக் கட்டியுள்ளார்.

## ஆய்வுத்துறைகள்

1. 3. இரா. இராகவையங்காரின் ஆய்வு தமிழின் பல்வேறு துறைகளையும் அளாவி நிற்பது வஞ்சிமாநகர், தித்தன் போன்ற வரலாற்று ஆராய்ச்சி நூல்களும், பெரும்பாணாற்றுப்படை போன்ற இலக்கிய ஆராய்ச்சி நூல்களும், தமிழர் கொள்கைகள், தமிழர் அசுரர் ஆகார், தமிழர் கந்தருவ வழக்கினர், தாயக் கொள்கை போன்ற பண்பாட்டு ஆராய்ச்சிக் கட்டுரைகளும், தமிழ் மொழியின் தனிநிலை, தமிழென்னும் பெயர், போன்ற மொழியாராச்சிக் கட்டுரைகளும், கம்பன் காலம் போன்ற காலஆராய்ச்சியும், சாகுந்தலம், கீதை போன்ற மொழிபெயர்ப்புகளும், குறுந்தொகை உரையும் இவரால் எழுதப்பட்டன. நேமிநாதம், திணைமாலை நூற்றைம்பது, ஐந்திணை ஐம்பது, முத்தொள்ளாயிரம் முதலிய நூல்களை இவர் பதிப்பித்தார்.

## சில ஆய்வு முடிபுகள்

2. 0. இவருடைய ஆராய்ச்சி முடிபுகளைப் பற்றித் (தமிழ் வரலாறு என்ற நூலுக்குக் கருத்துச் சொல்லும் போது) கீழ்வருமாறு வையாபுரிப்பிள்ளை கருதுகின்றார் ''இதில் கூறப்படும் முடிவுகளில் சிற்சில அறிஞர்காளல் கொள்ளத்தகாதனவாயிருக்கலாம்.'' இனி இரா. இராகவையங்காரின் ஒரு சில ஆய்வு முடிபுகளைக் காண்போம்.

2. 1. ''...... இத் தென்றிசை நிலத்தையே தமிழர் தம் நாடாகக் கொண்டனரென்பது விளங்கும்'' [3]

2. 2. ''சிலம்பும் (11 - ஆம் காதை) தொல்காப்பியப் பாயிரமும் கூறிய நிலந்தரு திருவிற் பாண்டியனும், கடல்கோளுக்கு முந்தியும் பிந்தியும் இருந்த முடத்திருமாறனும் ஒருவனே''[4]

2. 3. ''கடைச் சங்கத்துத் தொடக்கத்தில் ஒரு கடல்கோள் பாண்டிநாட்டுத் தென் பகுதியில் நிகழ்ந்தது......'' [5]

2. 4. தமிழ்க்கல்விச்சங்கம் ஆகிய பாண்டியனவையும் தொல் காப்பிய நூல் அரங்கேறிய காலத்துக்கு முன்பு தொட்டு உண்டாகிப் பின்னே நெடுங்காலம் இருந்தது உண்மை. [6]

2. 5. ''... தமிழர் ........ எக்காலத்தும் அசுரராகிய தஸ்யுக்கள் ஆகாரென்க.''[7]

2. 6. ''பழந்தமிழர் ஒழுக்கம் வேத வழக்கொடு மாறுபடாதியைதல் நன்கு தெளியலாகும்'' [8]

2. 7. தமிழ் வேந்தர் மூவர்க்கும் மக்கள் தாயமே உரியதாதலும் தெரிந்துகொள்க. [9]

2. 8. ''வேத கால அகத்தியர், இராமாயண கால அகத்தியர், பாரத கால அகத்தியர் எனப்பலராதல் தெளியலாம். இவர்வழியில் பாணினி காலத்தவராய் தமிழுணர்ந்தவராய் தமிழிலக்கணமும் செய்த அகத்தியர் ஒருவருண்டு'' [10]

2. 9. ''இத்தொல்காப்பியர் வேத வழக்கொடுபட்ட நெறியினராதல் ஒருதலை'' [11]

2. 10. ''வேள்குடியினன் தித்தன் என்பது தெளியப்படும்'' [12]

2. 11. ''கொங்கு குடபுலமாகும்'' [13]

2. 12. ''கொங்கிற் கருவூரே வஞ்சிமாநகர்[14]''

2. 13. ''......கயவாகு வேந்தன், செங்குட்டுவன், பரணர், கபிலம், இவரெல்லாம் ஒரு காலத்தவரென்பது துணியப்பட்டது.''[15]

இத்தகைய முடிபுகளுக்கு இரா. இராக வையங்கார் வந்துள்ளது இவருடைய நூல் களிலிருந்து தெரிகிறது. இனி இம்முடிபு களைக்கட்ட அவர் கையாண்ட ஆதாரங்களை யும், அவைகளைப் பயன் படுத்திய முறைகளை யும் ஆய்வோம்.

## இலக்கியங்களின் கால உணர்வின்மையும், பண்பாட்டுக் கால உணர்வின்மையும்

*3. 0.* இராகவையங்கார் தன் முடிபுகளுக்குச் சான்றாகக் காட்டும் இலக்கியங்களின் காலத்தை நினைவில் கொள்ளுவதில்லை சங்க கால நூல்களின் துணைகொண்டு ஆராயப்படும் ஒரு கருத்தின் வன்மையை நிறுவப் பிற்கால நூல் களில் காணப்படும் சான்றுகளைக் கையாளும் முறையை இவரிடம் காணலாம். சிலப்பதி காரம், பதினெண் கீழ்க்கணக்கு, தேவாரம், பெரிய புராணம் போன்ற நூல்களையும் சங் ககால இலக்கியங்களிலிருந்து நிறுவப்படும் முடிபை நிலைநாட்டப் பயன்படுத்துகிறார்.

*3. 1.* ''இத்துணையும் கூறியவற்றால் சங்க காலத்துக்கொங்கு சேரருடையதன்றி, பிற ருடையதன்மை நன்று தெரியலாம்''[16] என்று ஆய்வாளராலேயே சங்ககால நாடாகிய கொங்கு என்று கூறப்பட்ட கொங்குநாடுபற் றிய' ஆய்வுக்கு அவர் அருணகிரி நாதர், பட் டினத்தார் போன்றோர் கருத்துக்களைப் பயன் படுத்துதல் தெரிகிறது.[17]

*3. 2.* பெருஞ் சோற்றுதியன் சேரலாதனைக் கூறும் புறநானூறும் சோழன் வெய்யோன் வழியினன் எனக்கூறும் சிலப்பதிகாரமும் வேத நெறிப்பட்ட வாழ்க்கையினர் தமிழர் என் னும்முடிவுக்குச்சான்றுகளாகப்பயன்படுத்தப் பட்டுள்ளன. சங்கநூல்களுக்கும் சிலம்புக்கும் பலவேறுபாடுகள் உண்டு. தமிழிலக்கிய வர லாற்றின்கால உணர்வின்மைதான் ஆய்வாள ரைப் புறத்தையும் சிலம்பையும் ஒருசேர, ஒரு காலத்தின் சான்றுகளாகக் காட்டவைத்தன. சோழன் வெய்யோன் வழியினன் என்ற கருத் துச் சங்ககாலத்தில் கூறப்படாத கருத்து.[18] முதன் முறையாகச் சிலப்பதிகாரத்தில்தான் இக்கருத்துக் கூறப்படுகிறது. பிற்காலப் பண் பாட்டுக்கருத்துக்கள் தான் சிலம்பில் வருகின் றன. ஆனால் முற்காலப் பண்பாட்டைக் காட் டும் சங்க இலக்கிய நூல்களோடு சிலப்பதி காரமும் சான்றாக இவ்வாய்வாளரால் பயன் படுத்தப் படுகிறது.

*3. 2. 1.* சிலப்பதிகாரம் ஆதித் தமிழனின் பண்பாட்டைக் காட்டும் நூலென்றும் அக்கா லத்தில் பலரால் கருதப்பட்டது. இதனைக் கைலாசபதி கீழ்வருமாறுகூறுகிறார். 'சுந்தரம் பிள்ளை தமிழ் நாட்டு பண்டைவரலாற்றை அறிவதற்குச் சிலப்பதிகாரம் சிறப்பாக வேண் டப்படுவது' எனக் கருதினார். எனினும்சுந்த ரம் பிள்ளையினும் கனகசபைப்பிள்ளையேசிலப் பதிகாரத்தை மிகப்பெரிய அளவு பயன் படுத் தினார்[19] ஆகவே அன்றிருந்த பல அறிஞர் களும் சென்றவழியில் இராகவையங்காரும் சென்றுள்ளார். இவர் சிலம்பைச் சங்கச்சான் றுகள் நிறுவப் பயன்படுத்தியதால் ஏற்படும் முரண்பாடுகள் பின்னால் விளக்கப்படும்.

*3.3.* வடவர் கருத்துக்கள், பண்பாடு போன் றன தொடக்கக்காலத் தமிழ் நூல்களில் அரு கியும், பிற்கால நூல்களில் பெருகிக்கொண் டும் வருகின்றன. உதாரணமாக, மணத்தின் போது நடக்கும் சடங்குகள் பிற்காலத்தில் பெருகலாயின. இதனை வையாபுரி பிள்ளை யவர்கள் ''ஆதியில் ஆரியர் கலப்பு மிகுதி யாக இல்லாத காலத்தே மணச்சடங்குகளும் பெருகிவிட்டமையும் நன்குபுலப்படும்'' என்று கூறுகின்றார்.[20] இதுபோல பலகருத்துகளை பொறுத்தமட்டில் ஆதி காலத்துக்கும் சிலப்பதிகாரகாலத்துக்கும் உள்ள தொடர் பின்மை பொதுவாக ஏற்றுக் கொள்ளக் கூடிய ஒன்றாகும். ஆகவே பிற்கால பண்பாடு தான் சிலப்பதிகாரத்தில் வரும். இதனால் முற் காலக் கருத்தை நிலைநாட்ட பிற்கால நூலைப் பயன்படுத்தல் தவறாகும். இத்தவறு பண் பாட்டுக்கால உணர்வின்மையால் ஏற்பட்ட தாகும்.

## ஆய்வில் முரண்பாடுகள்

*4. 0.* மேற்கூறியபடி, நூல்களின் கால உணர்வின்மையும், பண்பாட்டுக்கால உணர்

வின்மையும் ஆய்வாளரிடம் இருப்பதால் இவர் ஆய்வுகளில் பல முரண்பாடுகள்காணக் கிடக்கின்றன. அவைகளில் சில காண்போம்

4. 1. 1917-இல் 'வஞ்சிமா நகர்' கட்டுரை யாக, ''செந்தமிழ்'' என்ற பத்திரிகையில் வந்தபோது பல கருத்து மோதல்களை அது ஏற்படுத்தியது.[21] அ. கந்தசாமிபிள்ளை என்பவர் எழுதிய மறுப்புக்கட்டுரை ஒன்றில் ஒரு முரண்பாட்டினைக் காட்டியுள்ளார்.[22] பெரிய புராணத்தில் வருகின்ற விறன்மிண்ட நாயனுருடைய ஊரும், கொங்கு நாட்டுத் திருப்பதியாகிய கொடிமடச் செங்குன்றூரும் ஒன்றென வஞ்சிமாநகர் கட்டுரையில் செந்தமிழின் 15-ம் தொகுதி 371-ம் பக்கத்தில் எழுதும் ஆசிரியர் அத்தொகுதியின் 494-ம் பக்கத்தில் ''செங்குன்றூர் விறன்மிண்ட நாயனுருடைய ஊர் என்று பெரியபுராணம் கூறுதலான் இது கொங்குநாட்டு சிவத்தலமாகிய கொடிமாடச் செங்குன்றூரின் வேறென்று கொள்ளினும் அமையும்'' என்று எழுதுகிறர். இது முன்னுக்குப்பின் முரணுக அமைகிறது.

4. 2. இரா. இராகவையங்காரின் கருத்துப் படி, கடல்கோளின் காலத்திலிருந்தவன், தொல்காப்பிய பாயிரத்தில் வரும் நிலந்தருதிருவிற் பாண்டியன். ஏனெனில் களவியலுரையில்வரும் முடத்திருமானென்பது இவனே என்பது அவர்முடிவு.[23] சிலம்பு 11 ம் கதையில் 'அடியிற்றன்னளவரசர்க் குணர்த்தி... என்று தொடங்கும் அடிகளில் குறிப்பிடப்படுபவன் நிலந்தருதிருவின் பாண்டியன்.[24] எனவே தொல்காப்பியப் பாயிரத்தில் வரும் நிலந்தருதிருவின்பாண்டியன் காலத்தவரே சிலம்பைப் பாடிய இளங்கோவும். ஆகவே இளங்கோ காலத்ததே தொல்காப்பியம் என்பது இரா. இராகவையங்கார் முடிபு.

4. 2. 1. இக்கருத்தை இன்னேரிடத்தில் இவ்வாய்வாளரே மறுக்கிறர். சிலப்பதிகார காலத்தே ஐந்திரவியகாரண உணர்ச்சி சிறந்ததாகக்கருதப்பட்டது. இளங்கோ காலத்தில் வியாகரண உணர்ச்சி வழக்கற்றது. எனவே ஐந்திரம் வழங்கிய காலத்திற்கும் வழக்கற்ற காலத்திற்கும் இடைப்பட்ட காலம் பேரளவினதேயாகவேண்டும்[25] என்கிறர் இராகவையங்கார். இச்சான்றிலிருந்து இளங்கோ காலத்திற்கும் தொல்காப்பியர்காலத்திற்கும் இடைப்பட்டகாலம் பேரளவினதே என்பது தானே பொருள். ஆகவே மேற்சொன்ன கருத்தை இராகவையங்கார் இங்கு மறுக்கிறர். இது முரண்பாடு.

4. 3. ''இமயம் விற்பொறித்தவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுல் பதிற்றுப்பத்து இரண்டாம் பத்தால் நன்கறிந்ததாம். அவன் கண்ணகிக்குக் கோயிலெடுத்த செங்குட்டுவனுக்குப் பல தலைமுறை முற்பட்டவன் என்பது மணிமேகலையுள் கச்சிமாநகர் புக்ககாதையில்... ... அறிந்தது'' [26] என்கிறர் இராகவையங்கார். இக்கருத்தை ஏற்றுக்கொள்கிறர்.

4. 3. 1. ஆனுல்வேறெரு இடத்தில். இக்கருத்து முரண்படுகிறது. ''பரணர் ... ... ... செங்குட்டுவனைப் பதிற்றுப் பத்து, ஐந்தாம் பத்தால் பாடியதனுல் பரணரும் குட்டுவனும் ஒத்த காலத்தினராதல் தெரிந்தது.[27] என்கிறர் ஆய்வாளர். ஐந்தாம் பத்தின் பதிகம் இரண்டாம்பத்து கூறும் இமயவரம்பனின் மகனே ஐந்தாம் பத்தில் கூறப்படும் செங்குட்டுவன் என மொழிகிறது. எனவே கண்ணகிக்கு கோயிலெடுத்த செங்குட்டுவன்இமயவரம்பனுக்குப் பல தலைமுறை முந்தியவன் என்பதையும் நம்புகிறர். இன்னெரு இடத்தில், அவர் கூற்றிலிருந்து, இமயவரம்பனின் மகன் என்பதும் தெரிகிறது. இதுவும் ஒரு முரண்பாடு.

4. 4. ''இற்றைக்கு 1800 ஆண்டுகட்கு முற்பட்டவரென்று ஆராய்ச்சியாளர் பலர் துணிந்த இளங்கோவடிகள்..''[28] என்று ஆராய்ச்சியாளர் பலர் கருத்தை ஏற்றுக் கொள்கிறர்.

4. 4. 1. இக்கருத்தை இன்னெரு இடத்தில் மறுக்கிறர். இரா. இராகவையங்கார் கருத்துப்படி தொல்காப்பியர்காலமும் இளங்கோ

காலமும் ஒன்று. எனவே நிலந்தரு திருவின் பாண்டியனென்று பெயர்கொண்ட முடத் திருமாறன் காலமும் சிலம்பின் காலமாகிய 1800 ஆண்டுகட்கு முற்பட்டகாலமே. ஆனால் இக்கருத்தையும் மறுக்கிறார் ஆய்வாளர். "கி. மு. 205க்கும் கி. மு. 161க்கும் இடைப் பட்டதென்னில் கடல் பட்டுப்போந்த முடத் திருமாறன் கடைச்சங்கம் தொடங்கியகாலம் இன்றைக்கு 2139 — 2095 ஆண்டுகட்கும் இடைப்பட்டது"[29] என்கிறார் ஆய்வாளர். இதிலிருந்து முடத்திருமாறன் இன்றைக்கு 2139—2095 வாக்கில் வாழ்ந்தவன்என்பது புரி கிறது. இது முன்னர்கூறிய காலத்தை மறுக் கிறது. மேலும் இந்த முடத்திருமாறனாகிய நிலந்தருதிருவிற்பாண்டியனைக்கூறும் சிலம்பும் 2139—2095 வாக்கில் இளங்கோவடிகளால் எழுதப்பட்டிருக்கும். எனவே இளங்கோ கால மும் 2139—2095 வாக்கில் இருக்கலாம். இது வும் முந்திய கருத்தோடு முரணுகிறது.

## ஆதாரங்களின் மென்மை வன்மை சிந்திக்காமை.

5.0. ஆதாரங்களின் மென்மை, வன்மை சிந்திக்காதபோக்கு இரா. இராகவையங்கார் ஆய்வுகளில் காணலாம். புராணங்களை எந்த அளவு நம்பலாம் அல்லது நம்பக்கூடாது என் பன இவர் சிந்தித்துள்ளதாகத் தெரியவில்லை.

5.1. தமிழ்க் கல்விச் சங்கம் அல்லது பாண்டி யனவையம் இருந்தது என்னும் முடிவுக்குப் புராணத்தன்மை வாய்ந்த இறையனார் களவி யலுரையின் பகுதிகள் பயன்படுத்தப் பட் டன. வேறுசான்றுகளையும் காட்டுகிறார். ஆனால் பலமுக்கிய செய்திகளை நிலைநாட்ட முக்கிய ஆதாரமாகப் புராணத் தன்மை வாய்ந்த களவியலுரையை நம்புகின்றார்.

5.2. ஆப்பிரிக்கக்கண்டத்தைத் தமிழ் நாட் டிலிருந்து பிரித்த கடல்கோள் மச்சாவதாரக் கடல்கோளோ வேறோ என்று துணிதற்கில்லை என்கிறார்.[30] எனவே புராணக்கதையைச் சான்றாக ஏற்றுக்கொள்பவர் இவ்வாய்வாளர் என்பது புரிகிறது. மேலும் தருமிக்காகச்சங்க மேறிய சிவனார் கதையை ஆதாரமாகக் கொள் கிறார்.[31] மேலும் பல இடங்களில் இதுபோன்ற புராணக்கதைகளைச் சான்றாகப் பயன்படுத்தி யுள்ளதைக் காணலாம். இவ்வாறு ஆதாரங் களின் வன்மை மென்மை அறியாது முடிவுக ளைக் காட்டுவது அறிவியல் வழிப்பட்ட ஆய் வாகாது.

## முடிபுகளுக்கு வேண்டிய காரணங்கள் தேடல்.

6.0. ஒரு கடல்கோள் ஏற்பட்டது என்னும் கருத்தை நிலைநாட்ட முயல்கிறார். ஆனால் கடற்கோளைப்பற்றி சான்றுதரும் இரண்டு ஆதாரங்களும் தம்முள் மாறுபடுகின்றன. ஓர் ஆதாரமாகிய அடியார்க்கு நல்லார் உரை அக்கால அரசனாக நிலந்தருதிருவிற் பாண்டி யனையும் அடுத்த ஆதாரமாகிய களவியலுரை அக்கால அரசனாக முடத்திருமாறனையும் குறிப்பிடுகின்ற காரணத்தால் ஆய்வாளர் இரண்டு அரசர்களும் ஒருவரே என்றும் தவ றான முடிபைக் காட்டுகிறார். இம்முடிவிலி ருந்து ஒரு கடல்கோளே நடந்ததென்ற அடுத்த முடிபை நிலைநாட்டுகிறார். எனவே முடிபுகளுக்குவேண்டிய காரணத்தை தேடும் போக்கு இவரிடம் காணப்படுகிறது. இது நல்ல ஆய்வுக்கு உதவாது.

## தனக்கு வேண்டிய கருத்தை மட்டும் கொள்தலும்.

7.0. தனக்குவேண்டிய கருத்தை யார் சொன்னாலும் ஏற்றுத் தன் முடிபுக்கு வேண் டாத கருத்துக்களைக் காரணமின்றித் தள்ளி விடும் பண்பு இரா. இராகவையங்காரிடம் காணப்படுகின்றது.

7.1. "காலம் உலகம் உயிரே உம்பே..." என்ற தொல்காப்பிய நூற்பாவிற் பல ஆசிரி யர்களின் உரைகளில் தெய்வச்சிலையார் உரை யையும், சேனாவரையர் உரையையும் ஆய்வா ளர் எடுத்துக்கொள்ளுகின்றார். இந்நூற் பாவில் வரும் 'சொல்' என்ற சொல்லின் பொருளை விளக்க தெய்வச்சிலையாரையும் 'பால்வரை தெய்வம்' என்ற தொடரின்

பொருளை விளக்கச் சேனாவரையரையும் எடுத்துக்கொள்ளுகின்றார் ஆய்வாளர். இதன் காரணத்தைப்பார்ப்போம். ''இந்நூல் செய்தான் வைதீக முனிவன். ஆதலின் சொல் என்பது வேதம் எனக் கொள்ளப்படும்'' எனத் தெய்வச் சிலையார் கூறியனகொண்டு இவ்வாசிரியர் கொள்கை நன்கறியலாம். சேனாவரையர்பால்வரை தெய்வம்என்பது எல்லார்க்கும் இன்பதுன்பத்துக்குக் காரணமாகிய இருவினையையும் வகுப்பது என்று உரைகூறினர்.[32] 'சொல்' என்பதற்குச் சேனாவரையர் ''நாமகளாகிய தெய்வம்''[33] என்று கூறுகிறார். இக்கருத்து தொல்காப்பியர் வைதிக சமயவாதி இராகவையங்காரின் முடிபை வலியுறுத்தவில்லை. எனவே தான் 'சொல்' என்பதற்கு சேனாவரையரின் பொருளை ஏற்கவில்லை. இதுபோல் 'பால்வரை தெய்வம்' என்பதற்கு தெய்வ சிலையார் ''ஆணும் பெண்ணும் அலியுமாகிய நிலைமையை வரைந்து நிற்கும் பொருள்''[34] என்றுபொருள் கூறுகிறார். இக்கருத்து இராகவையங்காரின் முடிபுக்குச் சேனாவரையர் கருத்தைப்போல் அதிகம் உதவாது. எனவே தெய்வச்சிலையாரை ஒதுக்கினார். ஆனால் ஒருவர் கருத்தை விட்டு விட்டு இன்னொருவர் கருத்தைத் தழுவும்போது ஏன் ஒருவர் கருத்தைவிட்டுவிட்டார் என்பதற்குக் காரணம் கூறவில்லை. 'சொல்' என்பதற்கு வேறுபொருள் இல்லை என்பது போல் எழுதிச் செல்லுகின்றார் இராகவையங்கார்.

## சமூகவியல் மானிடவியல் போன்றதுறைகளின் அறிவின்மை.

*8. 0.* சமூகவியல், மானிடவியல்போன்ற தத்கால துறைகள் ஆய்வாளரின் காலத்தில் வளர்ச்சி பெறவில்லை. ஆரம்ப கட்டத்தில் இருந்த துறைகளின் அறிவைப்பெறும் வாய்ப்பும் ஆய்வாளருக்கு இருந்திருக்க முடியாது. எனினும் பண்டைமக்களைப் பற்றிய ஆய்வுகளை இத்துறைகளின் அறிவின்றிச் செய்தால் எத்தகைய தவறான முடிபுகள் ஏற்படும் என்பதையே இப்பகுதியில் காட்டுவோம். இரா. இராகவையங்கார் சில பழக்கவழக்கங்கள் தமிழ்மக்களுக்கும் வடநாட்டாருக்கும் ஒன்றாக இருப்பதைக்காட்டி, தமிழ் மக்களும் வேதநெறிகளைப் பின்பற்றினர் என்கிறார். ''வேதகால கருத்துக்கள் பேரளவு ஆடு மாடு மேய்ப்போரது கருத்துக்களே'' என்று தேவிப் பிரசாத் சட்டோபாத்தியாயா கூறுகிறார்.[35] தமிழ்ச் சமுதாயமும் பழங்குடித் தன்மை வாய்ந்ததே. எனவே இரு பழங்குடித் தன்மை வாய்ந்த சமுதாயங்களிடைய பல போக்குகள் ஒன்றானதாகவே இருக்கும். இராகவையங்காரின் ஒரு கருத்தை விளக்குவோம்.

*8. 1.* ''இறந்தவரை பிதுரராகக் கொண்டு வழிபடும் பழக்கம் தமிழரிடம் இருந்தது''[36] என்றுகூறி, இதனால் தமிழரும் வேதநெறியின் ஒழுக்கத்தினரே என்று முடிபுக்கு வருகிறார். இம்முடிபுக்குப் பண்பாட்டு மானிடவியல் அறிவின்மைதான் காரணம். ''இறந்தவரை வணங்கல்தான் மிகப்பழமைவாய்ந்த தெய்வ வழிபாடாகும்'' என்பது மானிடவியலார் (Anthropologists) கருத்து.[37] எனவே இக் கொள்கை தமிழரிடமும் ஆரியரிடமும் மட்டும் இருந்த கொள்கையன்று. இதுபோல பல கருத்து முடிபுகள் மானிடவியல் சமூகவியல் போன்ற துறைகளில் அறிவு வெளிச்சத்தில் வலியிழப்பதாக உள்ளன.

*9 . 0* இவ்வாறு இரா. இராகவையங்கார் அக்காலப் பல்துறை அறிவையும் தம் ஆய்வுமுடிபுகளுக்குப் பயன்படுத்தினார் என்பதை அறிந்தோம். தமிழின் எல்லாத் துறைகளிலும் புகுந்து ஆய்வுகள் செய்துள்ளார் என்பது கண்டோம். கால உணர்வும், பண்பாட்டு வரலாற்றுணர்வும் இல்லாது ஆய்வுகள் அமைந்துள்ளன; பல முரண்பாடுகள் ஏற்பட்டுள்ளன; புராணங்களை முக்கிய ஆதாரங்களாகக் கொண்டுள்ளார். காரணங்களால் முடிபுக்கு வராது,முடிபுக்காகவேண்டிக் காரணங்களைத் தேடும் போக்கு இவர் ஆய்வுகளில் அமைந்துள்ளன; தனக்கு வேண்டிய கருத்தை மட்டும் எடுத்துக்கொண்டு வேறு கருத்துக்களைக் காரணம் காட்டாது கைவிடல் இவருடைய ஆய்வில் சில இடங்களில் காணப்படும்; சமூகவியல் மானிடவியல் அறிவின்மை சில முடிபுகளைப் பொய்யாக்குகின்றன; எனினும் பல்வேறு கருத்துக்கள் இரா. இராகவையங்காரின் ஆய்வுமுறை பற்றிச் சிந்திக்கும் போது தென்படுகின்றன.

## மேற்கோளும் சான்றுகளும்

1 தமிழ்ச்சுடர்மணிகள் பக். 321

2 ,, 322

3 தமிழ் வரலாறு பக். 27

4 ,, 333-35

5 ,, 44

6 ,, 55

7 ,, 69

8 ,, 127

8 ,, 165

10 ,, 317

11 ,, 283

24 ,, 330

25 ,, 354

26 ,, 349

27 பாரிகாதை முன்னுரை 19

28 தமிழ் வரலாறு 232

29 ,, 41

30 ,, 28

31 ,, 45

32 ,, 278

33 தொல், சொல் உரைக்கோவை 267

34 ,, 266

12 தித்தன் பக். 15

13 வஞ்சிமாநகர் பக்.6,8,20,42,113,118,119

14 ,, பக். 165

15 பாரிகாதை முன்னுரை. பக். 20

16 வஞ்சிமாநகர் பக். 25

17 ,, பக். 19

18 சங்க இலக்கியத்தில் செங்கதிர் ஆராய்ச்சி ஜூலை 1970.

19 அடியும் முடியும் பக். 211-212

20 காவிய காலம் பக். 231

21 செந்தமிழ் 15, 16 தொகுதிகள்

22 செந்தமிழ் 15-ஆம் தொகுதி.

23 தமிழ் வரலாறு பக். 334

35 "... the vedic ideas were the ideas of a predominantly pastoral people — Lokayata.

36 தமிழ் வரலாறு பக். 266

37 "... ancestor worship is the earliest form of worship"

— An Introduction to the study of Cultural Antnropology chapter on Religion and Magic.

---

# மலேசிய நாவல் இலக்கியம்.

**லோகநாயகி நன்னித்தம்பி,**

கோலாலம்பூர்.

[மலாய்சியாவில் 1917 முதல் தமிழ் நாவல் தோன்றி வளர்ந்து வருகிறது. பலதரப்பட்ட சமுதாயப் பகுதிகளாக வாழ்கிற தமிழரின்வாழ்க்கையைக் கருப்பொருளாகக்கொண்டு வளர்கிறது. தமிழ்நாட்டில் தோன்றுகிற நாவல்களும், அதன் இலக்கியப்போக்கும், மலாய்சிய நாவல்களின் இலக்கிய உத்திமுறைகளை பாதிக்கலாம். ஆனால் மலாய்சியத் தமிழர்கள் உறவுகொண்டுள்ள வேற்றுமொழி பேசுவோர்களது இலக்கியம் பண்பாடு இவற்றின் தாக்கங்களும், அவர்களது பண்பாட்டையும் இலக்கியத்தையும் உருவாக்குகின்றன. அதனால் தமிழ் இலக்கியத்தின் மறுபதிப்பே மலாய்சியத் தமிழ் இலக்கியம் என்று கருதுவது தவறாகும். ஆசிரியர்]

நவீன இலக்கியம் என்பதே வளர்ச்சி அடைந்து வரும் ஒரு துறையாக இருந்துவரும் இக் காலத்தில் மலேசிய நாவல் இலக்கியம் இன்னும் இளமைப்பருவத்தில் இருந்து வருகிறது என்றுதான் கூறவேண்டியிருக்கிறது. இவ்வாறு வளர்ச்சி நிலையில் இருந்துவரும் ஓர் இலக்கியத்தை மதிப்பீடு செய்வது என்பதே சிரமம். அதோடு இந் நாட்டில் இலக்கியத் துறை இருபதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலேயே தோன்றிய பொழுதிலும் இத் துறையின் முதல் நூல்கள் இன்று கிடைப்பதற்கு அரிதாகவே உள்ளன. மேலும் இங்கு எழுதி வெளியிடப்பட்ட தொடர் கதைகளில் பல நாளிதழ்களில் வெளிவந்தவையாக இருப்பதால் அவை சுலபமாகக் கிடைக்கப்பெறுவதில்லை.

ஓர் இலக்கியத்துறையை ஆராயவேண்டுமெனில் அத் துறையில் வெளிவந்த அத்தனை நூல்களையும் எழுத்துக்களையும், அத்தனை ஆசிரியர்களையும் பற்றி ஆய்ந்து திறனாய்வு செய்வதே முறை. ஆனால் இவ்வாறு செய்வதற்கான வசதிகள் இல்லாத காரணத்தால் இரண்டாம் உலகமகா யுத்தத்திற்கு முன்னர் நூல் வடிவில் வெளிவந்த மலேசிய நாவல்களை மட்டுமே எடுத்துக்கொண்டு அவற்றைத் திறனாய்வு செய்வதே இக் கட்டுரையின் நோக்கம்.

மலேசியாவில், 1917-ஆம் ஆண்டிலேயே வெங்கடரத்தினம் என்பரால் எழுதப்பட்ட ''கருணாகரன் அல்லது காதலியின் மாட்சி''[1] என்ற நாவலும், 1918-ஆம் ஆண்டில் க. சுப்

பிரமணியம் அவர்கள் எழுதிய ''பாலசுந்தரம் அல்லது சன்மார்க்க ஜெயம்'' என்ற நாவலும் வெளியான பொழுதிலும் இவ்வகை இலக்கியம் பிரபலம் அடைந்த காலம் 1930 ஆம் ஆண்டிற்கும் 1940-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலமாகவே உள்ளது. இப் பத்தாண்டு காலப் பகுதியில் ஏழு நாவல்கள் படைக்கப்பட்டுள்ளன. இந் நாவல்கள் மட்டுமல்லாமல் சமுதாய சீர்திருத்தக் கருத்துக்களையும், கலை, பண்பாட்டு மறுமலர்ச்சி எண்ணங்களையும் தாங்கிவந்த பல கட்டுரை நூல்களும், நாள், திங்கள் இதழ்களும் வெளி வந்த காலமும் இதுவேயாகும். இக் கட்டுரைகள், நூல்கள், நாவல்கள் வழி பரவிய சீர் திருத்தக் கருத்துக்களுக்கு இதே காலத்தில் எழுந்த சமுதாய சீர்திருத்தக் கழகங்களும், சங்கங்களும் ஆக்கம் தந்து நின்றன.

மேலே குறிப்பிடப்பட்ட பத்தாண்டு காலத்தில் எழுதப்பட்ட ஏழு நாவல்களில் கோ. பார்த்தசாரதி அவர்கள் எழுதிய ''தோட்டக் கொலை மர்மம் அல்லது பத்து மலைக்கள்வன்'' (1932) என்ற நூலும், மு. சீ. செல்வத்துரை எழுதிய ''கோரக்காந்தன் அல்லது தென் மலாயா கிரியில் வட இலங்கைத் துப்பாளி'' (1934) என்ற நூலும் துப்பறி நாவல்கள் அமைப்பைப் பெற்றுள்ளன. பார்த்தசாரதியின் நாவல் பொழுதுபோக்கிற்காக மட்டும் எழுதப்பட்டிருக்கிறது. ஆனால் செல்வத்துரையின் நாவல் சமுதாயச் சிந்தனையும் உள்ளடக்கி படைக்கப்பட்டுள்ளது. ஆர். இராமநாதனின் ''காந்திமதி அல்லது கலப்பு மணம்'' (1934) என்ற நூல் நாவல் என்று கருதப்பட்ட பொழுதிலும் அது ஒரு நாடக நூலாகவே வெளியிடப்பட்டுள்ளது.

இலங்கைத் தமிழர் வாழ்க்கையைச் சித்தரிக்கும் இரு நாவல்களே ''நேசமலர் அல்லது கற்றோரின் கனு'' (1936) என்பதும், க. டொமினிக்கின் ''அழகானந்த புஷ்பமும்,'' (1936) ஆகும். சுளிபுரம் சிவஞானம் என்பவரால் எழுதப்பட்ட ''நேசமலர்'' ஸ்ரீதன ஒழிப்பு, பலி கொடுக்கும் வழக்கத்தின் தீமைகள், குடி போன்றவற்றை நீக்க வேண்டிய அவசியம் பற்றி அதிகமாகப் பேசுகிறது. ''அழகானந்த புஷ்பத்தின்'' ஆசிரியரான டொமினிக் இலங்கைத் தமிழரிடையே பயின்றுவந்த பல பண்டைப் பழக்க வழக்கங்களை மறவாது காத்து வரவேண்டும் என்பதைத் தம் நூலில் வற்புறுத்துகிறார்.

கே. எஸ். பாண்டியன் என்பவரால் எழுதப்பட்ட ''மதனபூரலி'' (1931) என்ற மற்றொரு துப்பறியும் நாவலும், கதிரேசம்.பிள்ளை அவர்கள் எழுதிய ''சுயம்புநாதனும் சன்னுசியாரும் அல்லது அறிவாளி''(1935)என்ற நாவலும், அருணசலம் செட்டியார் எழுதிய ''உத்தமநாதன் அல்லது சத்தியபுரி ஜமீன் தார்'' (1938) என்ற நூலும் இன்று கிடைக்கப்பெறவில்லை.

இவை எழுதப்பட்ட காலத்திற்குப் பின்னர் இரண்டாம் உலகமகா யுத்தத்தின் தொடக்கம் இந்நாட்டில் ஓர் இலக்கிய வீழ்ச்சியை உண்டுபண்ணியுள்ளது. எனவே யுத்த காலத்தின்போதும் அதைத் தொடர்ந்துவந்த பல ஆண்டுகளின்போதும் இலக்கிய வெளியீடுகள் குன்றியே காணப்படுகின்றன. இந் நாடு சுதந்திரம் பெற்ற 1957-ஆம் ஆண்டு அளவிலேயே மீண்டும் நாவல்துறை புத்துணர்ச்சி பெற்று விளங்குவதைக்காண்கிறோம். ஆனால் சிறுகதை, கவிதை போன்ற துறைகள் அடைந்த துரித வளர்ச்சியையும் சிறப்பையும் நாவல் துறை இன்னும் பெறவில்லை.

தமிழ் நாட்டு நாவல் ஆசிரியர்கள் படைப்புக்களைப் பயின்றுவந்த மலேசிய வாசகர்கள் தம் நாட்டு எழுத்தாளர்கள் கைவண்ணத்தையும் காணும் வாய்ப்பினைச் சுதந்திரகாலத்திற்குப் பின்னரே பெற்றனர். இந்த உள்ளூர் எழுத்தாளர்களுடன் தமிழ் நாட்டு எழுத்தாளர்களும் இன்றுவரை தொடர்ந்து எழுதிக் கொண்டுதான் வருகிறார்கள். ஆனால் தமிழ் நாட்டுக் கதைகளையே இறக்குமதி செய்து கொண்டிருந்த நிலை மாறி, இத் திருப்பம் ஏற்பட்டிருப்பது வரவேற்கத்தக்கதே. மேலும் இந் நாட்டு நாள், திங்கள் இதழ்களும், எழுத்

தாளர் சங்கங்களும் நம் நாட்டு ஆசிரியர்கள் தம் திறனை வெளியிட ஏற்ற சூழ்நிலையை உருவாக்கியும், அவர்களுக்கு அதிக சந்தர்ப்பங்களை வழங்கி வருவதும் போற்றற்குரியது.

நூல் வடிவில் நாவல்களை வெளியிட்டு வாசகர் எண்ணிக்கையையோ, விற்பனையாகும் நூற் படிகளின் எண்ணிக்கையையோ உயர்த்த முடியாத ஒரு நிலை இன்னும் இருந்து வருவது வருந்தத்தக்கதே. நம் நாவலாசிரியர்களில் பலர் தமிழ் ஆசிரியர்களாகவும், பத்திரிகை ஆசிரியர்களாகவும், வானொலி போன்ற துறைகளில் ஈடுபட்டுள்ளவர்களாகவும் இருந்துகொண்டு தம் நூல்களை வெளியிடச் சிரமப்படும் நிலையும் உள்ளது. சிரமப்பட்டு வெளியிடும் நூல்களில் இருந்து அவர்களுக்குக் கிடைக்கும் ஆதாயமும் மிகக் குறைவாகவே உள்ளதால் எழுத்துத் துறையை மட்டும் தொழிலாகக்கொண்டவர் இல்லை என்றே கூறிவிடலாம்.[4] (இக் குறைபாடுகளை நிவர்த்திசெய்ய இப்பொழுது ஒரு சில வெளியீட்டு நிலையங்கள் முயற்சிசெய்து வந்த பொழுதிலும் அவை தொடக்கக் கட்டத்தில் உள்ளதால் அவைபற்றி அதிகம் கூற இயலவில்லை.)

இனி நூல் வடிவில் வெளிவந்துள்ள நாவல்களை எடுத்துக் கொண்டோமேயானால் நாவல் இலக்கியத்தின் வளர்ச்சி இரண்டு கூறாக உள்ளது. இரண்டாம் உலக யுத்தத்திற்கு முன்னர் எழுதப்பட்டவை, சுதந்திர காலத்திற்குப் பின்னர் எழுதப்பட்டவை என்று அவற்றைப் பிரிக்கலாம். இவற்றில் 1930-ஆம் ஆண்டிற்கும் 1940-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்ட நாவல்களில் ''கோரக்காந்தன்'' என்ற நாவலைத் தவிர மற்றவற்றை மலேசியத் தமிழ் நாவல்கள் என்று கூறுவது முறையா என்ற கேள்வி எழுகிறது. ஏனெனில் அவற்றில் ''கோரகாந்தன்'' என்ற நாவல் மட்டுமே மலேசியப் பின்னணியுடன் எழுதப்பட்டுள்ளது. ''தோட்டக் கொலை மர்மம்'' என்ற நாவலும் மலேசிய இடப் பெயர்களும், சம்பவச் சூழ்நிலைகளும்பயன்படுத்தப்பட்டிருந்த பொழுதிலும் இந் நாட்டு மக்கள் வாழ்க்கையோ, பழக்க வழக்கங்கள் போன்றவையோ சித்தரிக்கப்படவில்லை. மற்றும் நாவல்கள் அனைத்தும் தமிழ் நாட்டையோ, இலங்கையையோதான் பின்னணியாகப் பெற்றுள்ளன. ஆனால் மலாயாவில் அக்காலத்தில் வாழ்ந்துவந்த தமிழ், இலங்கை மக்களுக்கு இவை ஓரளவு பொருத்தமாக எழுதப்பட்டுள்ளன என்று சொல்லலாம். அக்காலத்தைச் சேர்ந்த எழுத்தாளர்கள் அனைவரும் தமிழ் நாட்டையும், இலங்கையையும் சேர்ந்தவர்களாகவும், இங்கு வந்து குடியேறியவர்களாகவும் இருந்த காரணத்தால் அவர்கள் தாம் அறிந்த சூழ்நிலைகளை வைத்துக் கொண்டே கதையை அமைத்துள்ளார்கள்.

---

3. இந் நிலை நாவல்கள் வளர்ச்சியில் தொடக்க காலத்திலும் இருந்து வந்ததை நேசமலர் அல்லது கற்றோரின் கனு என்ற நாவலுக்கு அணிந்துரை எழுதியுள்ள ஆர். இராமநாதன் என்பவர் மூலம் அறியக் கிடக்கின்றது. அவர் கூறுவதாவது: 'தமிழில் வெளிவந்திருக்கும் நூல்கள் விரல்விட்டு எண்ணத்தக்கவை. தமிழர்களின் வாங்கும் சக்தி மிகவும் குறைவானதால் ஆசிரியர்கள் நூல்களெழுதத் துணிவதில்லை. அப்படி எவரேனும் எழுதத் துணிந்தாலும் தமிழ் மக்கள் ஆசிரியருக்கும் போதிய ஆதரவளிப்பதில்லை. இது அனுபவத்தில் நாம் கண்ட உண்மை.'

இரண்டாம் உலகயுத்தத்திற்கு முன்னர் எழுதப்பட்ட இந் நாவல்களில் இரண்டு நாவல்கள் துப்பறியும் நாவல் அமைப்பைப் பெற்றவை என்றுகண்டோம். இந்திய இலக்கியப் படைப்புகளையே பெரிதும் விரும்பிப் படித்த அக்காலவாசகர்கள் தம் சமகாலத்தில் மிகவும் பிரபலம் அடைந்திருந்த துப்பறியும் நாவல்களில் அதிக ஈடுபாடு காட்டி வந்தனர். வெளிநாட்டு இலக்கிய ஆசிரியர்களோடு போட்டியிட வேண்டிய இச் சந்தர்ப்பத்தில் உள்ளூர் நாவலாசிரியர்களும் மக்கள் விரும்பிப் படித்த இலக்கிய வகையையே உருவாக்க வேண்டித் தம் நாவல்களைத் துப்பறியும் நாவல்களாகவே படைத்தனர்.

இவ்விரண்டு துப்பறியும் நாவல்களில் ''தோட்டக் கொலை மர்மம்'' எந்த ஒரு சிறந்த குறிக்கோளையும் கொண்டு எழுதப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. பொதுவாகத் துப்பறியும் நாவல்கள் பொழுது போக்கிற்கும், விறுவிறுப்பை உண்டுபண்ணுவதற்குமே படைக்கப்படுகின்றன. இதே முறையில் பல திடுக்கிடும் சம்பவங்களுடன் 'தோட்டக் கொலை மர்மம்' உருவாக்கப்பட்டுள்ளது. பொன்னம்பலம் என்ற கிராணிவேலைபார்த்த ஒருவன் பெரும் கொலைகாரனும், கொள்ளைக்காரனும் ஆவான். அவன் தம் கும்பலுடன் சேர்ந்து பலரைக் கொலை செய்தும் ஜமீன்தார் ஒருவரைச் சிறை செய்தும் பணக்காரன் ஆகிறான். அதுபற்றித் துப்பறிந்த நியூட்டன் என்ற போலீஸ் அதிகாரி அவனைத் தேடி அலைந்து பிடித்து, ஒழிப்பது பற்றியதே கதை.

நாளிதழில் தொடர்கதையாக முதலில் வெளிவந்து இந் நாவல் தொடர்கதைகளுக்கு வேண்டிய விறுவிறுப்பையும், மேலும் படிக்க ஆவலைததூண்டும் பாங்கையும், நிகழ்ச்சிக் கோர்வையையும் பெற்றே அமைந்துள்ளது. 87 பக்கங்கள் கொண்ட இந் நாவல் முதல் நூல்களில் தோன்றக்கூடிய நீண்ட வர்ணனைகளோ, சலிப்பு ஊட்டும் கிளைக் கதைகளோ கொண்டில்லாமல் சுருக்கமாகவே அமைந்துள்ளது. ஆசிரியரே கதையைக் கூறிவரினும் ஆங்காங்கே கதை மாந்தரும் பேசும் வாய்ப்பைப் பெற்றுள்ளனர்.

தமிழ் நாட்டைச் சேர்ந்த இந் நாவலாசிரியர் பார்த்தசாரதி தம் நாவல் மலேசியப் பின்னணிகொண்டு விளங்க முயற்சி செய்திருப்பினும் நூலில் தமிழ்நாட்டின் சாயலும் இல்லாமல் இல்லை. கோனார், முதலியார் போன்ற பெயர்களும், கதை ஓட்டத்தில் இடம்பெறும் நிகழ்ச்சிகள் சிலவும் நமக்குத் தமிழ்நாட்டுக் கதை என்பதைக் காட்டி நிற்கின்றன. மொழி அளவிலும் பல வடமொழிச் சொற்களையும், ஆங்கில வார்த்தைகளையும் தாராளமாகவே பயன்படுத்தியுள்ளார். ஆங்கில துப்பறி நாவல்களிலும், வடுவூர் துரைசாமி ஐயங்கார் போன்றோர் துப்பறி நாவல்களிலும் காணப்படும் பொறி வகைகள் துப்பாக்கிப் பிரயோகம் போன்றவை இந் நாவலிலும் இடம் பெற்று அதற்கே இயல்பான உருவம் தந்து நிற்கின்றன.

இரண்டாவது துப்பறி நாவல் முதல் துப்பறியும்நாவலுக்கு இரண்டே ஆண்டுகளுக்குப் பின் எழுதப்பட்டிருந்த பொழுதிலும்பலவேறுபாடுகளுடன் தோன்றியுள்ளது. இந்தஇரண்டாம் துப்பறியும் நாவலாகிய கோரகாந்தனின் ஆசிரியர் குறிக்கோளே பெரும் மாற்றம் அடைந்துள்ளது. அவர் தம் நூலைப் பொழுது போக்கிற்கு மட்டுமல்லாமல், மக்களுக்குப் பல கருத்துக்களை உணர்த்தவும், அறிவுரைகள் கூறும் நோக்கத்துடனும் எழுதியுள்ளார். எனவே இது ஒரு சமூகத் துப்பறியும் நாவல் என்றே அழைக்கலாம். ஆசிரியரது இந்நோக்கத்தை அவரது நூலுக்கு மதிப்புரை எழுதியுள்ள கே.ரு.ச. சுந்தரம் அவர்கள், 'யாழ்ப்பாணத்திலும் (ஏன் இந்தியாவில் இருந்தும் கூட) மலாய் நாட்டிற்கு வந்து வேதா விருத்தியின் காரணம்பற்றி தங்கிய இளந் தமிழ்மக்களின் வாழ்க்கைகள் எவ்வித முறையில் சீரழிவு பெறுகின்றனதென்பதை 'கோரகாந்த'னில் தெற்றெனப் பரக்கக் காணலாம்' என்று கூறியுள்ளார்.

பார்த்தசாரதி போன்றே இந் நாவலாசிரியர் செல்லத்துரையும் தம் நாவலுக்கு மலேசியப் பின்னணியையே பயன்படுத்தி எழுத முயன்றுள்ளார். ஆனால் இவர் பார்த்தசாரதியைவிடத் தம் முயற்சியில் அதிக வெற்றி பெற்றுள்ளார் என்றே கூறவேண்டும். யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த இவர் இலங்கை மக்கள் மலாயா வந்து குடியேறியதையும், இவ்விரு நாடுகளுக்கும் இருந்த தொடர்புகளையும் மட்டுமல்லாமல், அக்காலத்தில் மலாயாவில் வாழ்ந்த மலாய்க்காரர் வாழ்க்கையையும், நகர்ப்புற மலாய்ப்பெண்கள் வாழ்க்கைமுறையையும், நாட்டின் பொருளாதார நிலை போன்றவற்றையும் தம் நூலில் வேண்டிய இடங்களில் புகுத்தி நூலின் அமைப்பிற்கும், கருவிற்கும் ஓர் இயற்கைத் தன்மையை வழங்கியுள்ளார்.

கொள்ளையர் கூட்டம் ஒன்றைச் சேர்ந்த கோரகாந்தன் என்பவன் பத்துலோல்பான் என்ற பகுதியில் வாழ்ந்து வருகிறான். அவன் தம்பியைப்பிடித்துச்சிறை சென்ற துரைராசா என்ற போலீஸ் அதிகாரியைப் பழிவாங்கும் நோக்கத்தோடு ரெங்கசாமி என்ற ஒரு கடை முதலாளியிடம் சென்று பணத்தைக் கொள்ளையடிக்கிறான். இந்தக் கொள்ளை துரைராசாவின் காதிற்கெட்டவே அவர் தாம் இறந்ததாகப் பாசாங்கு செய்து முகம்மது சாகிப் என்று தம் பெயரை மாற்றி அமைத்துத் தாம் சிங்கப்பூரைச்சேர்ந்த ஒரு துப்பறியும் நிபுணர் என எல்லோரையும் நம்பவைத்துக் கோரகாந்தன் மறைவிடத்தைக் கண்டுபிடித்து வெற்றிபெறுவதே கதை.

இக் கதைக்கிடையே இந்தியாவிலிருந்தும், யாழ்ப்பாணத்திலிருந்தும் வந்துள்ள இளைஞர் எவ்வாறு மது அருந்துதல், விலை மாதரிடம் செல்லுதல் சூதாட்டம் போன்ற தீய பழக்கங்களைக் கைக்கொண்டு தம் பணத்தையும், வாழ்க்கையையும் அழித்து வந்தனர் என்பதைத் தெளிவாக் சித்தரிக்கின்றார். இப் பழக்கங்களில் ஈடுபடுவதால் இவர்கள் தம் நாட்டைப் புறக்கணித்து வாழ்ந்து வந்ததையும் வருத்தத்தோடு எடுத்துக் கூறுகிறார்.

இவ்வாறு அறிவுரைகள் கூறுவதோடு மட்டுமல்லாமல் இராமாயணக் கதை மாந்தர்களையும் புராணக் கதைகளில் இடம் பெறும் உருத்திரன், சித்ரகுப்தன் போன்றோரையும், துறவிகளையும் அங்கத முறையில் நகைச்சுவை தோன்றப் படைத்துள்ளார். பிராமணர் எதிர்ப்பும், புராணநூல் எதிர்ப்பும் தோன்றிய இக் காலக் கருத்துக்களையே இந் நூலாசிரியர் படைப்பு பிரதிபலிக்கின்றது.

பொதுவாக முதல் நூல்களில் காணப்படும் குறை இந் நாவலிலும் காணப்படுகிறது. அதாவது ஆசிரியர் மது, சூது போன்றவை பற்றிக் கூறவேண்டிய செய்திகளைத் தாமே ஆற்றும் ஒரு நீண்ட சொற்பொழிவாகவே அமைத்துள்ளார். கதை மாந்தர்வாயிலாகவோ, உரையாடல் வழியாகவோ இக்கருத்துக்கள் வெளிப்படுத்தப்படவில்லை. இம்மாதிரியான பொருள்கள் பற்றிப் பேசி முடித்ததும் ஆசிரியர் 'இனி கதையைத் தொடர்வோம்' என்று வெளிப்படையாகவே கூறியுள்ளார். இம்மாதிரி அமைந்த நீண்ட உரைகள் சலிப்பை ஏற்படுத்துவதுடன் கதையின் விறுவிறுப்பையும் குறைக்கின்றன. கதையோடு தம் கருத்துக்களை வெளியிட முயலும் ஆசிரியர் அவற்றைப் பிணைத்துத் தருவதில் வெற்றி கொள்ளவில்லை. அவர் கருத்துக்கள் கதையிலிருந்து தனித்தே நிற்கின்றன. கதைக்கு அவர் கருத்துக்கள் எவ்வகையிலும் உதவுவதாகவும் தெரியவில்லை. மேலும் தம் புராண எதிர்ப்பைத் தெரிவிப்பதற்கென இராமன், சீதை என்ற கதை மாந்தரையும், சித்ரகுப்தன் போன்றவர்களையும் படைக்கிறார். இவர்கள் கதைக்கு வேண்டாத கதை மாந்தர்கள். குழந்தை வளர்ப்பு பற்றியும், பாவ புண்ணியம் பற்றியும், உயிர்கள் ஆவி உலகம் செல்வது பற்றியும் ஒரு நீண்ட அத்தியாயமே அமைத்துள்ளார். இவை கதையோடு தொடர்பு அற்றவை. நிகழ்ச்சிகளில் கட்டுக்கோப்பு இருந்த பொழுதிலும் ஒரு சில இடங்களில் நிகச்சிகள் செயற்கையாக அமைந்து விடுகின்றன. சான்றாகத் துப்பறியும் நாவல்களில் பரபரப்பை உண்டுபண்ணுவதற்கெனப் பொதுவாக இடம் பெறும் வேடம் மாறுதல் போன்றவற்றைக் கூறலாம்.

பழைய நூல்களில் காணப்படும் மற்றொரு இயல்பும் இந் நாவலில் காணப்படுகிறது. பழமொழிகள், பாடற்பகுதிகளில், நீதிநூற் கருத்துக்கள் போன்றவை பல எடுத்தாளப்பட்டுள்ளன. ஆனால் ஆசிரியர் அந்தந்தக் கதை மாந்தர்க்குரிய மொழி வேறுபாடுகளுடன் உரையாடல்களை அமைத்துள்ளார். ஆசிரியர் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தவராகையால் கதை கூறிச் செல்லும்பொழுது யாழ்ப்பாணத்தமிழ் தெளிவாகவேஅமைந்துள்ளது. ஆனால் வேலையாட்கள் பேசுகின்றபொழுது அவர்கள் பேச்சு வழக்கையும் மற்றும், தமிழர் மலேயாக்காரர், சீனர்களோடு பேசும்பொழுது தமிழ் கலந்த மலாய் நடையையும் மிக

வும் சிறப்பாகக் கையாண்டுள்ளார். இம்மாதிரி, சாதாரணப் பேச்சு வழக்கைப் பயன்படுத்தி இருப்பதால் நூல் ஒரு யதார்த்தத்தன்மையையும் பெறுகிறது. மேலும் மலாய் நாட்டில் வழங்கக்கூடிய உணவு வகைகள் போன்றவற்றிற்கு மலாய்ப் பெயர்களையே பயன்படுத்துகிறார். சுக்கியாக்கி, மீகன், ரொக்ரோ, மண்டூர், தருக்கே பேச்சா போன்றவை சான்றுகள். தாம் பயன்படுத்தும் ஆங்கில வார்த்தைகளைத் தமிழாக்கம் செய்து வந்துள்ளதும் இந் நூலில் கணப்படும் மற்றொரு சிறப்பியல்பு.

சான்றுகள் :

Car — இரதம்
bicycle — துவிச்சக்கர வண்டி
cheque book — உண்டியல் புத்தகம்
office — உத்தியோக சாலை
fancy dress ball — முக மூடி கேளிக்கை
lawyer — நியாய துரந்தரர்
cut throat — முடிச்சறுத்தான்

கதையின் இறுதியில் கதையின் சிக்கல்களை அவிழ்ப்பதும் அக்காலத் துப்பறியும் நாவல்களின் இயல்பாக இருந்தது. இதே முறையைப் பின்பற்றிச் செல்லத்துரை அவர்களும் கதையில் நடந்த நிகழ்ச்சிகள் அத்தனைக்கும், துணைக் கதைகளுக்கும் விளக்கம் தந்துள்ளார். இதனால் திரும்பத் திருப்பக் கூறுகிறார் என்ற எண்ணமும், கதை பற்றிச் சிந்திக்கச் சந்தர்ப்பமும் இல்லாமல் போகிறது.

கதை மாந்தர் படைப்பிலும் முதல் நூல்களின் சாயல் இந்நாவலில் படிந்துள்ளது. அதாவது நாவலின் தொடக்க காலத்தில் ஆசிரியர்கள் தம் கதை மாந்தரில் நல்லவர்களை மிகவும் நல்லவர்களாகவும், கெட்டவர்களை மிகவும் கொடியவர்களாகவும் படைப்பது வழக்கம். அதே முறையில் இங்கு எல்லாக் கதை மாந்தர்களும் அவ்வாறு படைக்கப்படாத பொழுதிலும் கதைத் தலைவர், தலைவியரிடம் இவ்வியல்பு தென்படுகிறது. துரைராசா ஒரு பெரும் துப்பறி நிபுணராகவும், எந்த முயற்சியிலும் வெற்றிபெறுபவராகவுமே படைக்கப்பட்டுள்ளார். கோரகாந்தனின் படைப்பு ஒரு கொள்ளைக்காரனுக்குரிய பல பண்புகளோடு இயற்கையாக உருவாக்கப்பட்டுள்ளது. துப்பறியும் கதையாகையால் பலவகைக் கதை மாந்தர் கதையை அணிசெய்து நிற்கின்றனர். ஆனால் தேவையற்றவர்கள் என்று இவர்களைக் கூறிவிடமுடியாது. இவரது பெண் கதை மாந்தர்களில் மோகனசுந்தரத்தைத் தவிர வேறு எந்தப் பெண்ணும் நல்ல குணம் உள்ளவளாகப் படைக்கப்படவில்லை. பெண்களுக்கு இழிவு கற்பித்த புராண எதிர்ப்புக் காலத்தில் இவ்வாறு பெண்கள் படைக்கப்பட்டிருப்பது வியப்பிற்குரியது.

இக்காலத்தைச்சேர்ந்த துப்பறியும் நாவல்கள்போல் அல்லாது இக்காலச் சமுதாய நாவல்கள் இரண்டும் இலங்கைத் தமிழரால் எழுதப்பட்டுள்ளதால் யாழ்ப்பாணத்தையே மையமாக கொண்டு எழுதப்பட்டுள்ளது. சீர்திருத்தவாதியாக சிவஞானம் 'நேசமலர்' என்ற நமது நாவலில் உண்மைக் காதலின் மாட்சியைச் சித்தரிப்பதோடு ஸ்ரீதனம் போன்றவற்றின் தீமைகளையும் எடுத்து விளக்கியிருக்கின்றார். இந்நாவலின் கதை முழுவதும் யாழ்ப்பாணத்திலேயே நடைபெறுகிறது. மணியம் மகாலிங்கம் என்பவர் தமது மகளை விஜயரத்தினம் என்ற வக்கீல் ஒருவருக்கு ரூ 70.00 ஸ்ரீதனம் கொடுத்து மணம் முடிக்க நிச்சயிக்கிறார். ஆனால் அவர் மகள் நேசமலர் விஜயரத்தினத்தின் துர்நடத்தைகளை அறிந்தவளாகையால் அத்திருமணத்திற்கு மறுத்துத் தான் விரும்பிய நேசகமலன் என்ற விவசாயியின் மகனையே மணமுடித்து இன்பமாக வாழ்வதையே கதை விவரிக்கிறது.

ஆசிரியரின் முக்கிய குறிக்கோள் சமுதாய சீர்திருத்தம். ஆகையால் கதையின் இடையே அடிக்கடி ஆசிரியர் குறுக்கிட்டுப் பல குட்டிக் கதைகளையும், அறிவுரைகளையும் நல்குகிறார். ஸ்ரீதனம், கல்வி போன்றவை பற்றிய கருத்துக்கள் கதையோடு தொடர்பு பெற்று வருகின்றன. ஆனால் பலிகொடுத்தல், விலைமகளிடம் செல்லும் வழக்கம், அரசியல்,

மேல்வகுப்பார் செய்யும் தீமைகள் பற்றிய செய்திகள் கதையோடு நல்ல முறையில் இணைக்கப்படவில்லை.

ஆசிரியர் தாமே கதையைக் கூறிச் சென்ற பொழுதிலும் கதை மாந்தர் வழியும் ஆசிரியரது கருத்துக்கள் பல வெளியாகின்றன. இவர் கதையின் இடையில் அறிமுகப்படுத்தும் பல கிளைக் கதைகள் கதைக்கு எந்த வகையிலும் உதவுவதாகத் தெரியவில்லை. கதையை நிறுத்தி ஒரு கிளைக்கதையையோ அல்லது சமுதாயச்சிந்தனைகளையோ எடுத்துச்சொல்லும் முறை கதை ஓட்டத்தைத் தடைப்படுத்துகிறது.

இந்தக் குட்டிக் கதைகள், அறிவுரைகளோடு, பல பழமொழிகளும், இலக்கியப் பாடல் மேற்கோள்களும், நீதி நூல் கருத்துக்களும் துப்பறியும் நாவல்களில் கையாளப்பட்டுள்ளதைவிடச் சிறிது அதிகமாகவே இந்நாவலில் காணப்படுகின்றன. இந்த இலக்கிய மேற்கோள்கள் ஆசிரியரின் இலக்கியப்பயிற்சியைக் காட்டுவதுடன்[5], சொல்லும் கருத்தை உறுதி படுத்தினும் இன்றைய நிலையில் இவை பயில்வோர் சுவையைக்குறைக்கின்றன. இம்முறை அக்கால நாவல்களில் பயின்றுவந்த வழக்காகவே காணப்படுகிறது.

கதை நடைபெறும் ஊராகிய சுளிபுரம் காளியம்மன் விழா, உள்ளூர் அரசியல்வாதிகளைப் பற்றிய செய்திகள் அனைத்தும்நூலுக்கு ஒரு வட்டாரத் தன்மையைக் (local colour) கொடுக்கிறது.

இக்கால நாவல்களில் இந்நூல் ஒன்றில் மட்டுமே நூலின் ஒவ்வொரு பக்கத்தின் அடியிலும் ஒரு நீதி புகட்டும் பாடலையோ உரையாடலையோ பழமொழியையோ, கேள்வி பதிலையோ சேர்த்து எழுதும் முறை பயன்படுத்தப்பட்டுள்ளது. இவை நல்ல சிந்தனையைத் தூண்டும் அறிவுரைகளாக இருந்தபொழுதிலும் கதையோடு தொடர்பு இல்லாமலும் கதையைப் பயிலும்பொழுது கவனத்தை ஈர்க்கும் சாதனமாகவும் அமைந்துவிடுகிறது.

இந்த நாவலில் இடம்பெறும் முக்கிய கதைமாந்தர் கதை சொல்லும் பாங்கோடு ஒன்றி அமைக்கப் பட்டுள்ளார்கள். இது நாவல்வளர்ச்சியில் முற்பகுதியிலேயே எழுதப்பட்ட நாவலாக இருந்தபொழுதிலும் கதை மாந்தரை மிகவும் நல்லவர்களாகவோ, மிகவும் கெட்டவர்களாகவோ படைக்காமல் நாம் அன்றாட வாழ்க்கையில் காணக்கூடியவர்களாகவே தத்தம் குணதிசயங்களுடன் தோன்றுகிறார்கள் (Block characterisation) என்று ஆங்கிலத்தில் கூறப்படும் முறையில் அறிமுகமாகும் கதை மாந்தர் நிகழ்ச்சிகள் வழியும் உரையாடல் மூலமும் கதையில் தோன்றுகிறார்கள். (Block characterisation) என்பது ஒரு கதை மாந்தர் தோன்றும் முதல் சந்தர்ப்பத்திலேயே அவரைப் பற்றிய வர்ணனை, அவர் பண்புகள் பற்றிய செய்திகள் அனைத்தையும் கூறிவிடுவதாகும். இம்முறை கதை மாந்தரைக் கதையின் ஓட்டத்தோடு வளரச்செய்யும் சந்தர்ப்பத்தைக் கொடுக்காததால், ஆசிரியர் அவர்களை உரையாடல் வழியும், அவர்கள் பங்குபெறும் நிகழ்ச்சிகளையும் கொண்டு அறிமுகப் படுத்துவது இக்குறையை நிவர்த்திசெய்துவிடுகிறது. ஏனெனில் இந்நாடக முறையில் அவர்கள் தம் சொந்தக் கருத்துக்களையும், எண்ணங்களையும் வெளிப்படுத்தப் பல வசதிகளைப் பெறுகிறார்கள்.

இக் கதைமாந்தர்களிடையே நடைபெறும் உரையாடல்களில் நல்ல நகைச்சுவையும், சில இடங்களில் அங்கதம் சேர்ந்த கேலியும், தீமையை நேரடியாகச் சுட்டிக் காட்டும் திறமும் வெளிப்படுகிறது. ஒவ்வொரு கதைமாந்தருக்கும் பொருந்தும் வகையிலும், அவர்கள்பண்புகள்வெளிப்படும் முறையிலும், உரையாடல்களில் மொழி பேச்சுத்தன்மை போன்றவை வேறுபடுகின்கின்றன. ஆங்கிலக் கல்வி கற்றவர்கள் பேசுகையில் ஆங்கிலச் சொற்கள் கலந்த ஒரு நடையும், கிராமப் பெண்ணான நேசமலர் பேசும்பொழுது அவர்களுக்குரிய வட்டார வழக்கும், கொச்சையும்,பணிப்பெண்ணுடன் பேசும்பொழுது அவர்கள் மொழியாகிய சிங்

ருஹும் எந்த ஊரிலும் அதே மனித மந்தை தான். கோர சொரூபங்கள்தான். தன் உள்ளமும் உடலும் ஆத்மாவும் சர்வமான்ய அக்கிரகாரத்துக் கட்டுப்பாடுகளிலிருந்து விடுபட வேண்டுமென்று சாமா விரும்பினான். அவன் மனமும் அறிவும் விடுபட்டு விட்டன. ஆனால் பரிபூர்ண சுதந்திரத்திற்கு அதுமட்டும் போதாது.''

7.2.2 'பொய்த்தேவு' கதையில் சோமு முதலியாருக்கு 'ஞானம்' பிறந்த விதத்தை 'கலாபூர்வமாக' க. நா. சு. இவ்வாறு விவரிக்கிறார்.[19]

''எழுந்து ஜன்னலண்டைபோய் நின்று பார்த்தார். வெளியே நிர்மலமாக நிலவு பெய்துகொண்டிருந்தது. நிசப்தமாக, நிச்சலமாக இருந்தது. கோயில் மணிச் சத்தம் வெளியேயிருந்து வரவில்லை.

அவருடைய உள்ளத்திலேதான் எழுந்து ஒலித்து அலைமோதி அடங்கிக் கொண்டிருந்தது.

இந்த அனுபவத்திற்குப் பிறகு அவர் உள்ளத்திலே அந்தக் கோயில் மணி அடிக்கடி ஒலிக்கத் தொடங்கிவிட்டது.

ஆனால் அப்படி அது ஒலிப்பதன் அர்த்தத்தைக் கண்டுகொள்ள அவருக்குச் சிலநாள் பிடித்தது.

சாத்தனூர் கோயில் மணியை வார்த்து உருவாக்கி அதிலே அந்த ஒலியை ஏற்றிவைத்தவன் மகான் — கலைஞன்; சந்தேகமே இல்லை.

அந்த ஒலி மனிதனுடைய உள்ளத்திலே புகுந்து என்றென்றும் நிலைத்துத் தேவையாகிறபோதெல்லாம் அலை எழுப்பக்கூடிய சக்தி வாய்ந்தது.

தனி ஒரு மனிதனுடைய உள்ளத்திலே எழக்கூடிய சக்திகளையும் உணர்ச்சிகளையும், போராட்டங்களையும் ஆட்கொண்டு தானே ஆட்சி செய்ய வல்லமையுள்ளது.

அந்தத் தனி ஆட்சியின் விளைவுகள் என்ன ஆகும் என்பது அவர்களுடைய உள்ளங்களையும், தன்மைகளையும் தரங்களையும் பொறுத்தது.''

சாமிநாதனும், சோமசுந்தர முதலியாரும் 'சமூகத்திலிருந்து சுதந்திரமடைய வேண்டும்' என்று துடிப்பவர்கள். அவர்களது இயக்கத்தைக் 'கணங்களும், விநாடிகளுமே' நிர்ணயிக்கின்றன.

மேலை நாட்டு எக்ஸிஸ்டென்ஷியலிஸம் கூறுகின்ற (Border line situtіon) எல்லை நிலையும், சோமசுந்தர முதலியார் ஞானம் பெற்ற நிலையும் ஏறத்தாழ ஒப்புமை உடையவை. இதனால் க. நா. சு. வின் நாவல்களில் எக்ஸிஸ்டென்ஷியலிஸத்தின் பாதிப்பு உள்ளது என்பது நிதரிசனமாகிறது.

8.1 ஆனால் அதே சமயம் க. நா. சு. இந்திய வேதாந்தத் தத்துவங்களில் — குறிப்பாக அதன் உலக மறுப்புத் தன்மையில் — ஈடுபாடுடையவர் என்பது அவரது நாவல்களில் காணக்கிடைக்கிறது. அதனால்தான் மேலை நாட்டுத் தத்துவ ஞானிகளின் நூல்களில் ஈடுபட்ட 'பசி' சாமிநாதன் கடைசியில் சந்தேக விளக்கத்திற்காகச் சாம்பமூர்த்தி ராயரை அடைகிறான். அவர் கீதா ரகசியத்திலிருந்து மேற்கோள் காட்டி அவனது சந்தேகத்தை நீக்கி விடுகிறார்.

8.1.1 அது மட்டுமின்றி அவரது மேற்குறிப்பிட்ட நாவல்களில் இரண்டில் சாம்பமூர்த்தி ராயர் வருகிறார். தெய்வஜனனம் சிறுகதைத்தொகுப்பிலும் இந்த ராயர்வருகிறார். இவர் (moral) ஒழுக்கம் என்ற நிலையிலிருந்து (immoral) ஒழுக்கமற்றது என்ற நிலைக்கு மாறிக் கடைசியில் ஒழுக்கம், ஒழுக்கமற்றது என்ற நிலைகளுக்கு அப்பாலுள்ள (amoral) நிலையை அடைந்தவர். க. நா. சு. வின் லட்சியக் கதாபாத்திரம் இவர்தான் என்பதில் ஐயமில்லை. இவர், இந்திய வேதாந்தம் கண்ட முடிவைக்காட்ட உருவகப் படுத்தப் படுத்தப்பட்ட பாத்திரம் என்றால் மிகையாகாது.

8.2 இந்திய வேதாந்தத்தின் உலக மறுப்புப் பகுதியின் உச்சக் கட்டமான அத்வைத

வேதாந்தத்தைக் க. நா. சு. பற்றி நிற்பவர் என்பது காஃப்காவின் நூல்களைப்பற்றி இலக்கிய வட்டக் கூட்டம் ஒன்றில் அவர் படித்த கட்டுரை ஒன்றுலிருந்தும் தெரியவருகிறது. அவர் கூறுகிறார்:- [20]

''காஃப்கா மத்ய ஐரோப்பாவிலே ஒரு ஏமாற்றமும் ஏக்கமும் தோன்றியகாலத்திலே தோன்றியவர். அந்த ஏமாற்றமும் ஏக்கமும், அவரது எழுத்திலே தொனிக்கின்றன. காஃப்காவின் நோக்கு பிரத்யேகமானது — அவருக்கே உரித்தானது — வேறு யாரிடமும் காணக் கிடையாதது — உள்ளதையும் கனவையும் கலக்கிற அவர் பாணி, இந்தியர்களுக்கு — வேதாந்தத்தில் அவஸ்தாத்ரயத்தில் நம்பிக்கையுள்ளவர்களுக்கு — சுலபமாகவே புரியும்.''

8.2.1 இங்கே இவர் குறிப்பிடும் அவஸ்தாத்ரயம் என்பது அத்வைத தத்துவத்தின் அடிப்படைக் கல்லாகும். மனிதனது விழிப்பு நிலை, கனவு நிலை, ஆழ்துயில் நிலை ஆகியவற்றின் உண்மையை விசாரித்து உலகமே மாயையென்று நிறுவும் தத்துவமாகும் இது.

8.2.2 இதைச் சற்றுச் சுருக்கமாக விளக்குவோம். மனித வாழ்க்கை விழிப்பு நிலை, கனவு நிலை, ஆழ்துயில் நிலை என்ற மூன்று வாழ்நிலைகளிலே அடங்கும் என்று அத்வைதிகள் நம்புகிறார்கள். இம் மூன்று நிலைகள் எவ்வாறு தோன்றுகின்றன ? அவற்றிடையே உள்ள வேறுபாடு என்ன ?

விழிப்பு நிலைக்கும் ஆழ்துயிலுக்கும் இடையே அடிப்படையானதொரு வேறுபாடு உண்டு. விழித்திருக்கும் பொழுது 'நான் விழித்திருக்கிறேன்' என்ற உணர்வு மனிதனிடம் இருக்கிறது. ஆழ்துயிலிலோ இந்த 'நான்' இல்லை. அதாவது 'நான் தூங்குகிறேன்' என்று யாரும் சொல்ல முடியாதல்லவா ?

ஆழ்துயில் நிலையில் விழிப்பு நிலையில் உள்ள 'நான்' இல்லை. அதனால் புற உலகம் பற்றிய உணர்வும் இல்லை. எனவே புற உலகை உண்டாக்குவதே இந்த 'நான்' தான். அதாவது புற உலகம் மனித சிந்தனையால் உண்டாக்கப் படுவதுதான். எனவே அது உண்மையல்ல. அது மாயை.

கனவு நிலையிலோ இந்த 'நானும்' நானற்றதும் கலந்து காணப்படுகின்றன.

தத்துவார்த்தச் சொற்களில் அத்வைதிகள் இம் மூன்று நிலைகளையும் இவ்வாறு விளக்குகிறார்கள்.

விழிப்பு நிலையில் அசித் எனப்படும் நான் சித் என்ற பிரம்மத்தின் மீது கற்பிதம் (Superimpose) செய்யப் பட்டிருக்கிறது. ஆழ்துயில் நிலையில் சித்தில் 'நான்' எனப்படும் அசித் மறைந்துவிடுகிறது. கனவு நிலையில் இரண்டுமே கலந்து காணப்படுகிறது.

9.1 காணுகின்ற இவ்வுலகம் உண்மை யல்ல என்ற கருத்து இந்தியாவில் தோன்றி வளர்ந்த விதத்தை தேவி பிரசாத் சட்டோ பாத்யாயா அவர்கள் மிக விரிவாக ஆராய்ந்திருக்கிறார்கள். ஜூலை 69 ஆராய்ச்சி இதழில் வேலைப் பிரிவினை தோன்றிய உபநிஷத காலம் முதல், நாகார்ஜுனர், சங்கரர் காலம் வரை இப்போக்கு எவ்வாறு வளர்ந்தது என்பதை விளக்கிக் காட்டியிருக்கிறார்கள்.

உழைப்பைவிட்டு விலகிய தத்துவவாதிகள் இத்தகைய உலக மறுப்புத் தத்துவங்களை உருவாக்கினார்கள். இத்தத்துவங்கள் ஆளும் வர்க்கத்தினருக்குச் சாதகமானதாக இருந்ததால் மேலும் மேலும் வளர்க்கப்பட்டு நுண்மை பெற்றன என்பதை ஐயத்துக்கிடமின்றி தேவிப் பிரசாத் விளக்கியிருக்கின்றார்.

உலகம் உண்மையல்ல என்ற அறிவே சுத்த ஞானம். அந்த உண்மையை பரமார்த்தீக ஸத்யம் என்று அவர்கள்அழைத்தார்கள். உலகத்தைப் பற்றிய அறிவு (தாழ்ந்த உண்மை) ஸம்விருத்தி ஸத்யம் என்றழைக்கப் பட்டது.

9.2 நிலவுடைமைச் சமுதாயத்தின் இந்தச் சிந்தனை இந்தியாவைப் பொறுத்தமட்டில்,

இன்றைக்கும் நமது அறிவாளிகளைப் பற்றித் தொடருகிறது என்பதில் ஐயமில்லை. அதற்குரிய காரணம் இந்த நாட்டில் முதலாளித்வ வளர்ச்சி ஏற்பட்டாலும்கூட அவ்வளர்ச்சி நிலவுடைமைச் சமுதாயத்தை முற்றிலும் அழித்துவிடும் திறன் பெற்றதாக வளர்ந்து விடவில்லை என்பதாகும். இவ்வாறு நிலவுடைமைச் சமுதாயம் தொடர்ந்து நீடிக்கும் பொழுது அதன் பண்பாடு பற்றிய மதிப்புக்களும் நீடித்தல் இயல்பே அல்லவா? இத்தகைய இரண்டுங்கெட்டான் நிலையை நமது நாவலாசிரியர்களிடத்தும் நாம் காண்கிறோம். அதனாலேயே மேலை நாடுகளில் முதலாளித்வத்தின் தேய்வுக் காலத்தில் தோன்றிய எக்ஸிஸ்டென்ஷியலிஸம் போன்ற தத்துவங்களையும், இந்தியத் தத்துவ மரபில் வளர்ந்த உலக மறுப்புத் தத்துவத்தையும் இணைக்கும் போக்கும் அவர்களிடையே உள்ளது என்று கூறுவது மிகையாகாது. இப்போக்குகளுக்கு உதாரணமாகவே க. நா. சு-வின் நாவல்கள் விளங்குகின்றன.

முடிவுரை

10.0 புற உலகம் உண்மையல்ல என்ற இத்தகையதொரு தத்துவ நோக்கு ஏற்பட்டவுடன் புறஉலகும் புறஉலகில் நிகழ்கின்ற அநீதிகளும், அவற்றை எதிர்த்து நடக்கும் போராட்டங்களும் மனிதாபிமான உணர்ச்சியும் மாயைகளாகவும், அற்பங்களாகவும் ஆகிவிடுகின்றன. அத்தோடு இப் பிரச்சனைகள் பற்றி எழுதப்படும் இலக்கியங்கள் எல்லாம் அற்பமாகி, இலக்கியத் தரத்தைக் குறைப்பதாகக் கருதப்படுகிறது.

எனவேதான், க. நா. சுப்ரமண்யத்திற்குச் சீர்திருத்தக் கதைகளில் நம்பிக்கை இல்லை; பெண்களுக்குச் சம உரிமை வழங்குவதில், விதவா விவாகத்தில் நம்பிக்கை இல்லை; காதலில் நம்பிக்கை இல்லை; மதத்தில், நல்லது — தீயது என்பனவற்றில், சம தர்மத்தில் நம்பிக்கை இல்லை.

இக்காரணத்தினால்தான் வ. ரா.-வும் பாரதியும்கூடச் சிறந்த இலக்கிய கர்த்தாக்களாக அவருக்குப் படவில்லை.

இந்நம்பிக்கை வறட்சி என்ற எதிர்மறைப்போக்கே அவரது நாவல்களில் ஆட்சி செலுத்துகிறது.

வாசகனுக்கும் இலக்கிய ஆசிரியனுக்கும் தொடர்பேதுமில்லை, இலக்கியஆசிரியன் வாசகனுக்கு அளிக்கக்கூடிய செய்தி (message) எதுவும் இல்லை என்று அவர் கூறினாலும்கூட உலக மறுப்புத் தத்துவத்தை வாசகனுக்குக் கூறவே அவர் நாவலைப் பயன்படுத்தியிருக்கிறார் என்பதும் தெரிகிறது.

**மேற்கோள்கள்**


1 க. நா. சுப்ரமண்யம் — இலக்கிய விசாரம் — அமுத நிலையம் பிரைவேட் — சென்னை 18—ஜனவரி 1959. முன்னுரை.

2 அதே புத்தகம் — பக்கம் 10.

3 அதே புத்தகம் — பக்கம் 30.

4 அதே புத்தகம் — பக்கம் 33.

5 அதே புத்தகம் — பக்கம் 38—39.

6 க. நா. சுப்ரமண்யம் — படித்தீர்களா? - அமுத நிலையம் பிரைவேட் — லிட் செப் 1958. (சுந்தரி பற்றி)

7 அதே புத்தகம் — பக்கம் 160—161.

8 க நா. சுப்ரமண்யம் — ஏழு பேர்—சூறுவளி பிரசுரங்கள் — மார்ச் 1947 - பக்கம் 132—133.

9 அதே புத்தகம் — பக்கம் 134 - 135.

10 டி. கே. துரைஸ்வாமி - இலக்கிய வட்டம் - இதழ் 17 - 3.7.64 - பக்கம் 25.

11 அதே இதழ் - அதே பக்கம்.

12 க. நா. சுப்ரமண்யம் - படித்திருக்கிறீர்களா II பக்கம் 160 - 161.

13 அதே புத்தகம் - அதே பக்கம்.

14 க. நா. சுப்ரமண்யம் - பொய்த்தேவு - நாவல் பக்கம் 299 - 300.

15 க. நா. சுப்ரமண்யம் - ஏழு பேர் - பக்கம் 122.

16 க. நா. சுப்ரமண்யம் பசி - மார்ச் 1955 பக்கம் 67.

17 நா. வானமாமலை-தாமரை ஜனவரி 1969 இதழ்-பிராய்டிஸம் கட்டுரை பக்கம் 36.

18 க. நா. சுப்ரமண்யம் - பசி - பக்கம் 105

19 க. நா. சுப்ரமண்யம் - பொய்த்தேவு - பக்கம் 298 - 299.

20 இலக்கிய வட்டம் - இதழ் - 1/22-11-'63 பக்கம் 2.

# நீலகிரி கசவா பழங்குடி மக்கள்

வே. சிதம்பரநாத பிள்ளை எம். ஏ.

நீலகிரி மாவட்டத்தில் கசவா எனும் இப் பழங்குடி மக்கள் கூடலூர் பகுதியிலுள்ள ஆனைக்கட்டி, வாழைத்தோட்டம், சிறூர், மாயார், தெங்கு மாரோடா, அள்ளிமாறு, மாவனல்லா, அரக்கோடு, கெர்க்கோலா, ஆசுனூறு, திம்பா, புளிஞ்சோறு, குண்டத்திபட்டி, கதரப்பட்டி. அதரப்பட்டி, இதியனப்பட்டி, உதகரைப்பட்டி, ஜகாலி கதவு, கத்தனப்பள்ளி, அரைக்கடவுபட்டி, முதலியவிடங்களில் வாழ்கின்றனர். 1961-ஆம் ஆண்டு கணக்குப்படி இவர்களது மக்கள் தொகை சுமார் நானூறு ஆகும். இவர்கள் தடித்த உதடும் கூர்மையான கண்ணும் சுருண்ட மயிரும் கறுப்பு நிறமுமுடையவர்கள். ஆண்களோடு ஒப்பிடுமிடத்து பெண்களது முகம் வட்ட வடிவமாகவும் மூக்கு பந்துபோன்றும் உள்ளன. கறுப்பாக இருப்பினும் பார்ப்பதற்கு அழகாகவே இருக்கின்றனர். ஆண்கள் நம்மைப்போன்று வேஷ்டியும் சட்டையும் அணிகிறுர்கள். சில வருடங்களுக்கு முன்னுல் வாழ்ந்த பெண்கள், தங்கள் இடுப்பின் கீழ் தனியான சிறிய துணியையும் இடுப்பின்மேல் வேறு சிறிய துணியையும் அணிந்து இருந்தார்கள். ஆனுல் இன்றைய பெண்கள், கிராமப்புற மக்கள் உடை அணிவதைப் போன்று அணிகிறுர்கள். பெண்கள் தங்கம், வெள்ளி, பித்தளை இவைகளில் செய்த ஆபரணங்களை அணிகிறுர்கள். இவர்கள் மைசூரில் இருந்து வரவில்லை என்று சொன்னுலுங்கூட, இவர்களது ஆபரணங்களை வைத்து, இவர்கள் மைசூரிலிருந்து வந்தவர்கள் என பிலோ இருதயநாத் அவர்கள் தமது நூலில் குறிப்பிட்டு இருக்கிறுர். ஆனுல் ஒரு சிலர் தங்களை இருளர்கள் என்றே கூறிக்கொள்கிறுர்கள். ஒரு சிலர் தங்கட்கும் இருளர்கட்கும் தொடர்பில்லை என்றும் கூறுகிறுர்கள். எனவே, இது பற்றி இனவியலாளர்களும் (Ethnologists) உருவத்தோற்ற மானிடவியலாளர்களும் (Physical Anthropologists) இவர்களது உடலமைப்பு, இரத்த அமைப்பு (Blood groups) முதலியவற்றை ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வரவேண்டும். ஆந்திரர்கள், இவர்களை 'ஏனுதியர்கள்' என அழைக்கிறுர்கள். இருளர்களுக்கும் ஆந்திராவிலுள்ள ஏனுதியர்கட்கும் செஞ்சுக்களுக்கும் உருவ அமைப்பில் ஒற்றுமை உண்டு என்ற உருவத்தோற்ற மானிடவியலார் கருத்து இவண் குறிப்பிடத்தக்கதாகும்.

இவர்கள் தங்களது குடிசைகளை 'அஞ்சுப்புல்' என்ற புல்லினுல் அரைவட்ட வடிவமாக வேய்ந்து இருக்கிறுர்கள். குடிசையினைச் 'சேரி' என குறிப்பிடுகிறுர்கள். மண் சுவர்களுக்குப்

பதிலாக குட்டையான மூங்கிலையும் ஏனைய காட்டுக் கம்புகளையும், நட்டு இருக்கிறார்கள். சிலரது வீடுகள் பல அறைகளைக் கொண்ட தாக உள்ளன. தட்டி வைத்துப் பல அறை களாகப் பிரித்துள்ளனர். வீட்டைச் சுற்றி லும் வாழை, மற்றும் சில காய்கறிச் செடி களையும் பயிரிடுகிறார்கள். சேரியின் முன்பக் கத்தில் மாடு, கன்றுகளைக் கட்டி வைத்துள் ளனர். இது நாகாலாந்திலுள்ள நாகா பழங் குடி மக்கள் வீட்டிற்கு முன்பு பன்றிகளை அடைத்து இருப்பதுபோன்று உள்ளது. ஒவ் வொரு சேரியிலும் தாம்பாளம், கும்பா, தவலை, உரல், உலக்கை. தொட்டி, அகப்பை குந்தாணி, அகப்பைசெருகி, செம்பு,கெண்டி, பானை, குடம், சட்டி, உறி, விளக்குமாறு, பாக்குவெட்டி முதலியவைகளைக் காணலாம். இவைகளைத் தவிர அழுக்குப்படிந்த கோணி களையும் (bags) சிறிய மரக்கட்டைகளையும், மூங்கில் குழாய்களையும் காணலாம். சிலர் இச்சிறிய மரக்கட்டைகளை தலையணையாக உபயோகிக்கிறார்கள். மேலும் மண்வெட்டி, அரிவாள், பிக்காசு, கயிறு முதலியவற்றையும் காணலாம். சிலர் வண்டியும் வைத்து இருக் கிறார்கள்.

இவர்கள் காட்டுப்பொருட்களைச் சேகரிக் கின்றனர். சிலர் தேன் சேகரிக்கின்றனர். சில ஆண்களும் பெண்களும் எஸ்டேட்டுகளில் வேலை செய்கிறார்கள். காட்டில் கன்று காலி களை மேய்க்கச் செல்லும்போது கழுத்தில், அனுமதிச் சீட்டு (Licence), பீடி, வெற்றிலை முதலியவை அடங்கிய மூங்கில் குழாயினைத் தொங்கவிட்டிருப்பர். காட்டு மிருகங்களால் ஆபத்து ஏற்பட்டு இறக்க நேர்ந்தால், தான் யார் என்பதைப் பிறர் அறிந்துகொள்வதற் காகவே இப்படிச் செய்கிறார்கள். சிலர் கேப் பை பயிர் செய்கிறார்கள். இரவு நேரங்களில் காட்டு மிருகங்களால் பயிர் அழிந்துவிடாத படி பாதுகாக்க மரத்தின் மீது உயர்ந்த மாடங்கள் கட்டி அதன் மீதிலிருந்து தகரத் தை அடித்து ஒலி எழுப்பியும் கூக்குரலிட்டுக் கொண்டும் இருப்பார்கள். கேரளத்திலுள்ள ஊராளிப் பழங்குடி மக்களும் காட்டு மிருகத் தினின்றும் தங்களைப் பாதுகாக்க மாடங்கள் அமைத்தே தங்கியுள்ளனர் என்பது இங்கு குறிப்பிடத்தக்கதாகும். மிகச்சிலரே சொந்த நிலம் வைத்துள்ளனர். இப்பழங்குடி மக் களும் காட்டு நாயக்கர்களும் பெரும்பாலும் காய்கறியே பயிரிடுகிறார்கள். பெட்டக்குறும் பர்களும், பனியர்களும், குறும்பர்களும், காட்டுக்குறும்பர்களும், இருளர்களும், கசவர் களும் பெரும்பாலும் கூலி வேலை செய்தே பிழைக்கின்றனர். எனவே இவர்களது வருமா னம் எவ்வளவு என்று திட்டவட்டமாக கூறு வதற்கில்லை. கைத்தொழிலைப் போதிக்க இவ்வாதிவாசிகளுக்குக் கைத்தொழிற் கூடங் கள் அமைக்கப்பட்டு உபகாரச் சம்பளமும் அளிக்கப்படுகிறது. ஒரு கசவரது வருட வருமானம் ரூ. 572 என்று சமூக — பொருளா தார புள்ளி விபரம் தெரிவிக்கிறது.

குழந்தைகள் (15 வயதிற்குக் குறைவான வயதை உடையவர்கள்) வேலை செய்யும் விகி தாச்சாரத்தை மாநில அளவில் நோக்கும் போது பனியர், கசவர், முள்ளுக்குறும்பர் இவர்களின் குழந்தைகளே அதிகமாக வேலை செய்கிறார்கள். இதனை நோக்கும்போது, இவ்வாதிவாசிகளின் பொருளாதார நிலை எத் துணை அளவு தாழ்ந்த நிலையில் இருக்கிறது என்பதை அறிந்து கொள்ளலாம்.

இப்பழங்குடி மக்களிடையே ஐவர் கொண்ட பஞ்சாயத்து அமைப்பு உண்டு. இவர்களின் தலைவருக்கு ''மூப்பன்'' என்று பெயர். ஏனைய நான்கு பேரும் இவருக்கு உதவியாக இருப்பர். ஊரில் நடக்கும் எல்லா காரியங்களும் இவர்கள் அனுமதியுடனே நடைபெறும். அவர்களுக்கிடையே ஏற்படும் வழக்குகளை இப்பஞ்சாயத்தார் தீர்த்து வைக்கிறார்கள். அபராதம் விதிக்கவேண்டிய நிலை ஏற்படின் அபராதம் விதிக்கப்படும். மூப்பன் சொல்லிற்குக் கட்டுப்பட்டே நடப்பர். கிராமப் பஞ்சாயத்தில் தேர்தல் நடப்பது போல இங்கும் தேர்தல் நடந்து அங்கத்தினர்களைத் தேர்ந்து எடுத்தாலும், இவர்களது பரம்பரையினர் செய்ததுபோல் இவர்களால் தேர்ந்து எடுக்கப்பட்ட ஐவர் கொண்ட பஞ்சாயத்தே இவர்களது நிர்வாக

மாகும். யாரேனும் யாரையாவது கொலை செய்தால், இவர்கள் பிரச்சினையைத் தீர்த்து வைப்பர். முடியாத நிலை ஏற்படின், நீதிமன்றத்தை நாடுவர். கொலை செய்பவனைத் தங்களினத்தை விட்டு நீக்கவோ, சேர்த்துக் கொள்ளவோ பஞ்சாயத்திற்கு உரிமை உண்டு.

இவர்கள் பேசும் மொழி தமிழும் மலையாளமும் கன்னடச் சொற்களும் நிறைந்த மொழியாகும். எனது கள ஆய்வுகளினின்றும் (Field work), இது கன்னடத்தின் கிளை மொழியெனத் தெரியவருகிறது.

இவ்வாதிவாசிகளில் ஆண், பெண் இருபாலரது பெயர்களை நோக்கின், இவர்கள் இந்து மதங்களைச் சார்ந்தவர்கள் போலத் தெரிகிறது. ஆனால் காட்டுத்தேவைகளையும் (Forest deities) வணங்குகிறார்கள். அவைஇந்து மதத்தெய்வங்கள் அல்ல. அக்டோபர் மாதத்தில் திருவிழா நடத்துகிறார்கள். ஒருநாள் மட்டுந்தான் இத்திருவிழா நடைபெறுகிறது. திருவிழா வன்று காலையில் தேங்காய் நீரில் கலக்கப்பட்ட மஞ்சள் நீரோடு சீயக்காய் கலந்த நீரையும் கலந்து தெய்வத்தைக் குளிப்பாட்டுகிறார்கள். பின் மாலைகளை அணிவித்து, பால், பழம், தேன் இவற்றைப் படைக்கிறார்கள். பிறகு தீபாராதனை நடக்கும். இத்தீபாராதனையை நடத்துபவர் லிங்காயத்து வகுப்பைச் சார்ந்த பிராமணர் ஆவர். இதனை அடுத்து பல காரணங்களுக்காகத் தெய்வத்தை வேண்டி நேர்ச்சை நேர்ந்தவர்கள் மேள தாளங்களுடன் ஆற்றிற்குச் சென்று நீராடி, வரும் வழியில் செவ்வகவடிவில் உள்ள அனற்குழியில் இறங்கி தங்கள் நேர்ச்சையை (நேர்த்திக்கடனை) நிறைவேற்றுவர். இதற்கு ''கொண்டமிதி'' என்று பெயர். அதன்பின் இவ்வாதிவாசிகளால் நியமிக்கப்பட்ட பூசாரி தீபாராதனை செய்வார். திருவிழா அன்று மொத்தம் நூற்றொன்று தீபாராதனைகள் நடக்கும். கடாக்களை வெட்டி தெய்வத்திற்கு பலியிட்டு விருந்து பரிமாறப்படும். பின் நடைபெறும் நடனத்தில் ஆண்களும் பெண்களும் கலந்துகொண்டு ஆடுவார்கள்.

வருடத்திற்கு மூன்று தடவைகள் பூஜை நடத்தப்படும். மார்ச்சு மாதந்தான் இவர்களுடைய வருடப்பிறப்பாகும். வருடப் பிறப்பு அன்று நடக்கும் பூஜைக்கு ''உகாதிப் பூஜை'' என்று பெயர். அக்டோபர் மாதத்திலும் டிசம்பர் மாதத்திலும் நடத்தப்படும் பூஜைகளுக்கு முறையே ''கௌரி பூஜை'' ''கார்த்திகைப் பூஜை'' என்று பெயர்.

பொங்கலன்று நான்கு பானைகளை நான்கு திசைகளில் வைத்து நடுவில் ஒரு பெரிய பானையையும் வைத்துப் பொங்கலிடுவார்கள். இவர்கள் தீபாவளியைக் கொண்டாடுவது கிடையாது.

அம்மை நோய் வந்தவர்களைத் தனி வீட்டில் தங்கும்படி செய்வர். அம்மை நோய் வந்தவர்கள் இறக்கமாட்டார்கள் என்றும், அதற்குக் காரணம் தெய்வத்தின் கருணை எப்போதும் உண்டு என்றும் நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள். குணம் அடைந்தபிறகு தெய்வத்திற்குப் பால்பொங்கல் படைப்பர்.

கசவப்பெண்ணைப் பருவமடைந்தவுடன் தனி வீட்டில் வைக்கின்றனர். அவ்வீட்டின் முன்பு பந்தல் போடப்படும். வீட்டுவாசலில், பேய் பிசாசுகள் வராமலிருக்க இரும்புத் துண்டையும் செருப்பையும் கட்டி தொங்க விடுவர். இப்பெண், வைக்கோல் விரிக்கப்பட்ட படுக்கையில்தான் தூங்கவேண்டும். இரவில் இவளுக்குத் துணையாக வயதான பெண்ணொருத்தி இவளுடன் தூங்குவாள். தினமும் குளித்தபிறகே உணவு கொடுக்கப்படும். பன்னிரண்டாவது நாளன்று, தாய் மாமன் பொழுது விடிவதற்கு முன் இவள் தங்கியிருந்த வீட்டின் முன்பாகத்தில் உள்ள பந்தலை அழித்துவிடுவான். பின் அப்பெண் குளித்துவிட்டு புத்தம் புதிய ஆடையணிந்து வீட்டு வாசலின் முன்பு வந்து பெரியோர்களை வணங்கி வீட்டினுள் செல்வாள். அன்று விருந்தும் நடனமும் நடைபெறும்.

ஒரு காலத்தில் இவர்களிடையே குழந்தைத் திருமணம் (Child marriage) இருந்

ததாக அறிகிறோம். பெற்றோர்கள் பார்த்து நிச்சயிக்கப்பட்ட திருமணமே பெரும்பாலும் நடைபெறுகிறது. பையன் வீட்டாரே பெண் பார்க்கச் செல்லவேண்டும். ஞாயிற்றுக் கிழமையன்று பெண்பார்க்கச் செல்லுகிறார்கள். மாப்பிள்ளையின் உறவினர்களில் ஐந்து பெரியவர்கள் செல்வார்கள். சோற்றுடன் சர்க்கரை கலந்த கலவையில் ஐந்துஉருண்டைகளோடு பழம், வெற்றிலைமுதலியவற்றை எடுத்துக்கொண்டு மேளதாளங்களோடு செல்வர். பின் பெண்ணின் தந்தையிடம் திருமணத்தைப் பற்றிப்(சீதனம் முதலியவைகள்) பேசி முடிப்பர். அதன்பிறகு விருந்து நடைபெறும். திருமணத்தைப்பற்றி தன் உறவினர்களுக்கு ஆள்மூலம் செய்தி அனுப்புவர்.

குறிப்பிட்ட நாளில் மாப்பிள்ளை வீட்டார், தங்கள் உறவினர்களையும் வேண்டியவர்களையும் அழைத்துக் கொண்டு பெண்ணுக்குரிய சேலை, ரவிக்கை, பரிசப்பணம் (தங்கள் வசதிக்கு ஏற்றவாறு) முதலியவற்றை எடுத்து கொண்டு மேளதாளங்களுடன் மணப்பெண் வீடுவந்து சேருவர். மணப்பெண்ணின் வீட்டின் முன்பு துணியாலான பந்தல் போடப்பட்டு தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கும். மாப்பிள்ளைவீட்டார் கொண்டுவந்த புதுச் சேலையையும் ரவிக்கையையும் மணப்பெண் அணிந்து கொள்வாள். பெண்ணிற்குரிய சில சடங்குகளும் மாப்பிள்ளைக்குரிய சில சடங்குகளும் நடந்தபிறகு, வந்த உறவினர்கட்கு விருந்தளிக்கப்படும். பின் நடனம் நடைபெறும். மாலையில் மணமக்கள் மாப்பிள்ளை வீட்டிற்கு வருவர். பெண்ணையும் மாப்பிள்ளையையும் தனித்தனி வீட்டில் தங்கச் செய்வர். மறுநாள் அதிகாலையில் ஐந்து சிறு குடங்களில் ஆற்றிலிருந்து நீரை மொண்டுவந்து சூடாக்கி வெந்நீரில் மாப்பிள்ளையை முதலில் குளிக்கச் செய்வர். இதே போன்று மணப்பெண்ணையும் குளிக்கச் செய்வர். தம்பதிகளாகப்போகும் இவர்கள் புத்தாடைகளை அணிந்து கொள்வர்.

வீட்டின் முன்பக்கத்திலுள்ள முற்றத்தில் ஐந்து அடி நீளமுள்ள ஒரு பலகை வைக்கப்பட்டிருக்கும். இப்பலகைக்கு 'அசமணிப் பலகை' என்று பெயர். இப்பலகையின் ஒரு பக்கத்தில் மஞ்சள் பொடி கலந்த அரிசியுள்ள தட்டையும் மறுபக்கத்தில் கரிப்பொடி கலந்த அரிசியுள்ள தட்டையும் வைப்பர். இவை இரண்டிற்கும் இடையே உள்ள இடத்தில் பழம், பலசரக்கு (உப்பைத் தவிர) சாமான்கள் முதலியவைகளை வைப்பர். பின் மாப்பிள்ளையைப் பலகையின் முன் வடக்கு திசையை நோக்கி நிற்கும்படி செய்து, நான்கைந்து பேர் ஒரு துணியினை மாப்பிள்ளையைச் சுற்றிப் பிடித்துக்கொள்வர். மணப்பெண், மாப்பிள்ளையைச் சுற்றி மூன்று முறை வலம்வந்து எதிரே வந்து நிற்பாள். இந்நிலையிலும் பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்குமிடையேதுணி கட்டப்பட்டிருக்கும். பின், மாலை போல் முடிந்து வைத்திருக்கும் கண்ணாடி மணிகளைக் கொண்ட(வசதி உடையவர்கள், தங்கத்தால் மங்கலநாண் செய்கிறார்கள்) தாலியினைமணப் பெண்ணின் கழுத்தில் மணமகன் கட்டுவான். பெண்ணை மாப்பிள்ளையின் இடப்பக்கத்தில் நிற்கச் செய்வர். மாப்பிள்ளையும் மணப் பெண்ணும் பெரியோர்களின் கால்களில் விழுந்து வணங்கி ஆசீர்வாதம் பெறுவார்கள் பிறகு விருந்தும் நடனமும் நடைபெறும். திருமணம் முடிந்தபிறகு பெண்ணின் வீட்டில் தம்பதிகளுக்கு மூன்று நாட்கள் விருந்து நடைபெறும். பெண்ணின் வீடு அருகாமையில் இருந்தால், தினமும் உணவு அருந்திவிட்டு வந்துவிடவேண்டும். அதிக தூரத்தில் இருந்தால் மூன்று நாட்கள் தங்கியிருந்து விருந்து முடித்துவிட்டு வந்துவிடவேண்டும்.

சனிக்கிழமையைத் தவிர ஏனைய நாட்களை நல்ல நாட்களாக கருதுகிறார்கள். இருந்தபோதிலும் ஞாயிற்றுக் கிழமையைத் தான் தாலி கட்டும் நாளுக்கு முந்திய சிறந்த நாளாகக் கருதுகிறார்கள். பெண் வீட்டில் நடைபெறும் வைபவத்தன்றும் மாப்பிள்ளையின் வீட்டில் நடைபெறும் வைபவத்தன்றும் மாப்பிள்ளை தன் தாய்மாமனுக்கும் அவர் மனைவிக்கும் தனித்தனியே ஆடைகளும் ஒன்றரை ரூபாயும் கொடுக்கவேண்டும்.

திருமணத்திற்கு முன்பு இருவரிடையே தொடர்பு ஏற்பட்டு, கர்ப்பம் உண்டாயின், அதற்குக் காரணமானவனே அப்பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள வேண்டுமென பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூறுகிறார்கள். பிற இனத்திலுள்ள வர்களைத் திருமணஞ் செய்து கொண்டால், தம்மினத்திலிருந்து நீக்கிவிடு வர். தம்மினத்தோடு சேர்க்க வேண்டுமென் றால் ஆண்களுக்கு பஞ்சாயத்தார்குறிப்பின்படி குறிப்பிட்ட அடியும் உதையும் கொடுத்து அபராதம் விதிப்பர். பின் ஆண் பெண் இருவ ரும் பூசாரியால் மந்திரம் ஓதப்பட்டு புனிதப் படுத்தப்பட்டுத் தம்மினத்தாரோடு சேர்த் துக்கொள்ளப்படுவர். இருபத்திமூன்றுவயதிற் குமேலான மணமாகாத பெண்களை இவர்களி டையே காணமுடியாது. ஆனால் ஆண்களுக்கு இருபத்திமூன்று வயதிற்கு மேல்தான் திரு மணம் நடக்கும். விதவை மறுமணம் இவ் வினத்தாரிடையேயும் உண்டு. ஒரு பெண் ணின் கணவன் இறந்தால், இறந்தவனின் அண்ணன்மார்களுக்கு விருப்பம் இருந்தால் விதவையான அவளை மறுமணம் செய்து கொள்ள உரிமை உண்டு. ஆனால் இறந்தவ னின் தம்பிமார்கள், விதவையான அண்ணி யைத் திருமணஞ் செய்துகொள்ளக் கூடாது. அவளைத் தன் தாயாருக்கு ஒப்பாகவே மதிக்கி றார்கள். மனைவியை இழந்தவர்கள் மறுமணம் செய்துகொள்ளலாம். விதவையும் பொட்டு வைத்துக்கொள்ளலாம். விவாகரத்தும் இவ் வாதி வாசிகளிடையே அனுமதிக்கப்படுகிறது.

கருவுற்ற பெண்ணை ஏழாவது மாதத்தி லேயே அவளது பிறந்த வீட்டிற்கு அழைத்து செல்வார்கள். குழந்தை பிறந்தவுடன் தாயையும் குழந்தையையும் வேறு வீட்டில் தனியாகத் தங்கும்படி செய்வர். அல்லது வீட்டோடு சேர்ந்து இருக்கும் தனியறையில் தங்கும்படி செய்வர். இவர்கள் இருக்கும் இடத்திற்குப் பெண்ணின் வீட்டில் உள்ளவர் களோ அல்லது மாப்பிள்ளையின் வீட்டிலுள்ள வர்களோ செல்லக்கூடாது. வெளியே நின்று கொண்டுதான் தாயையும் குழந்தையையும் பார்க்கவேண்டும். ஆண்குழந்தை பிறந்தால் ஆறாவது நாளிலும், பெண்குழந்தை பிறந் தால் மூன்றாவது நாளிலும் தொட்டிலில் படுக்கவைப்பார்கள். ஊர்ப் பூசாரியே தன் விருப்பம்போல் குழந்தைக்குப் பெயரிடுவார் பெயரிடும் அன்று, உறவினர்களுக்கும் தம் முடன் வந்தவர்களுக்கும் விருந்து கொடுக்கப் படும். ஒரு மாதம் கழித்து தாய் குழந்தை யுடன் தன் கணவன் வீட்டிற்கு வருவாள். இரண்டாவதாகவும் அதற்கு பின்னும் பிறக் கும் குழந்தைகளுக்கும், பெண் வீட்டார் வசதி உடையவராயின் அழைத்துச் செல்வர். ஆனால் கட்டாயம் கிடையாது.

பெரும்பாலும் நோயினால் இவர்கள் இறப்பது கிடையாதாம். காட்டு மிருகங் களால்தான் இவர்களுக்குச் சாவு ஏற்படு கிறது. ஆனால் பிரசவ சமயத்தில் சில பெண் கள் இறக்க நேரிடுகிறதாம். இறந்தவுடன் இறந்தவரின் கால்களை உடனே மடக்கிவிடு கிறார்கள். இறந்தசெய்தியினைத்தம் உறவினர் களுக்கும் பஞ்சாயத்திற்கும் ஆள் மூலம் தெரி வித்து விடுகிறார்கள். பின் பிணத்தைப் பாடையில் வைத்து எடுத்துச் செல்கிறார்கள். எடுத்துச் செல்லும்போது உறவினரும் ஊரா ரும் உடன்வருவர். பின் பிணத்தைச் சவக்குழி யினுள் வைத்து உறவினர்கள் குழியைச்சுற்றி வலம் வருகிறார்கள். இறந்தவரின் மூத்த மகனாவது அல்லது உறவினர்களின் ஆண் களில் மூத்தவராவது பிணத்திற்குச் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்வார். பின் பிணத்தை மூடி, நரிபோன்று காட்டு மிருகங் கள் தோண்டாமலிருக்க அதன் மீது மிகப் பெரிய பாராங்கல்லை. வைத்துவிடுகிறார்கள் இக்கல்லிற்கு ''கோட்டைக்கல்'' என்று பெயர். பின்பு விருந்து நடைபெறுகிறது. மூன்றாவது நாளன்று பிணத்தைப் புதைத்த இடத்தில் ஒரு கல்லை நட்டு அதற்கு வெற்றிலை பழம் முதலியவற்றைப் படைக்கின்றனர்.

இப்பழங்குடி மக்கட்கு, விவசாயம் செய் வதற்கு வேண்டிய நிலங்களும் பண வசதியும் அளித்து விவசாயத் துறையில் முன்னேற்று விப்பதும், காட்டு இலாக்காக்களில் அதிக வேலை வாய்ப்பு அளிப்பதும், காலனிகளைக் கட்டிக்கொடுப்பதும் அரசினரின் கடமை யாகும்.

## Selected Bibliography


1 Damodaran G. R. 1962 "A socio-economic Survey of the Tribes of the Nilgiri District"., P. S. G. School of Social work, Coimbatore.

2 Irudayanath, Philo 1969 Kasabas In Kaattilen Piraayanam காட்டில் என் பிரயாணம். Madras.

3 Sakthivel, S: 1970 "Bibliography of Nilgiri Tribes. Centre of Advanced study in Linguistics, Annamalai University. and Anthropological Survey of India, Calcutta-13.


---

# முரியா பழங்குடிகளும் கோட்டுல் அமைப்பும்

சு. சக்திவேல் M.A.

[இனக்குழு மக்களிடையே இளைஞர்கள் தங்க குடியிருப்புகளின் அருகில் இளவட்டஞ் சாவடி என்ற தனிக் கொட்டகைகள் இருக்கும். சில இனக்குழு மக்கள் குடியிருப்பில் ஆண்கள் மட்டும் இரவில் இங்கு வந்து உறங்குவர். வெளியார்களை அழைத்து வந்தாலும் இங்கேயே தங்க வைப்பர். மானிடவியலார் இதனை bachelor's sheds என்றழைப்பர். இது குழு ஒற்றுமைக்கும், பண்பாட்டு நிகழ்ச்சிகளுக்கும் துணை நிற்கும் ஓர் நிறுவனமாக இருக்கிறது. இது ஓய்வு மாளிகை மட்டுமல்ல. இது இளைஞர்களிடையே குழு விசுவாசத்தையும், நட்பையும், வீரத்தையும் வளர்க்கும் பள்ளியாகவும் பயன்படுகிறது. இந்திய இளவட்டஞ் சாவடிகளைப் பற்றி ஆராய்ந்தவர்களுள் தலை சிறந்தவர் வெர்ரியல் எல்வின் ஆவார்.

இத்தகைய சாவடிகளில் ஆணும் பெண்ணும் சேர்ந்து உறவு கொள்ளுகிற கோட்டுல்களைப்பற்றி அவர் விரிவாக எழுதியுள்ளார். அவரைத்தவிரமாலினுவ்ஸ்கி போன்ற வேறுமானிடவியல் ஆய்வாளர்களும் இந்தஅமைப்பை விவரித்துள்ளார்கள். முரியா என்ற இனக்குழு மக்களிடையே. இந்தகோட்டுல் அமைப்பு நிலை பெற்றுள்ள விதத்தை நமது ஆய்வாளர் விவரிக்கிறார். கோட்டுலில் நிகழும் ஆண் பெண் உறவுகள் எவ்வாறு ஒருதார, ஒரு கணவர் மண உறவு முறைகளுக்கு முந்தியது என்பதை மார்க்கனும், எங்கல்சும் தெளிவுபடுத்தியுள்ளனர். இம்முறையை குழு மணமறையின் எச்சமாக அவர்கள் கருதுவார்கள். இவ்வாய்வாளர் இரு வகையான கோட்டுல் முறைகள் முரியா மக்களிடத்து இருப்பதையும், ஒன்றைவிட ஒன்று வளர்ச்சியடைந்த நிலையில் இருப்பதையும் கண்டு ஒன்றிலிருந்து ஒன்று தோன்றியிருக்க வேண்டுமென்றும் ஊகம் செய்கிறார். இது மானிடவியல், சமுதாயவியல், சமுதாயவரலாறு ஆகிய துறைகள் சந்திக்கும் நிலையாகும் — ஆசிரியர்]

1. 0 முரியா பழங்குடி மக்கள் மத்தியபிரதேசத்திலுள்ள பஸ்தார் பகுதியில் வாழ்கின்றனர். இவர்களுடன் குன்றுமரியா, ஜோரியா, இராஜ்முரியா, துர்வா, பத்ரார்லா தொலர்ா போன்ற பழங்குடிமக்கள் வாழ்கின்றனர். 'முரியா' என்பது 'முர்' (வேர்) என்ற சொல்லினின்றும் பிறந்ததாகும். 'முரியா' என்பதனை 'முதுபழங்குடி மக்கள்' என்ற பொருளிலும் வழங்குகிறார்கள். இவர்கட்கும் குன்றுமரியாக்களுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. இவர்கள் குள்ளமான உருவமும் நீண்ட தலையும் அகன்ற கன்னங்களும் தட்டையான மூக்கும் தடித்த உதடும் கரும் நீல நிறமும் உடையவர்கள். இவர்கள் பழைய ஆஸ்திரேலிய இனத்தைச் சார்ந்தவர்கள்.

### 1. 1 கால்வழி அமைப்பு

முரியாக்களிடையே கால்வழி அமைப்பு (Clan system) முறை உண்டு. இஃது கோட்டுல் வாழ்க்கையை ஒழுங்குபடுத்துவதற்கும் திருமண உறவுமுறையை வரையறுப்பதற்கும் பயன்படுகிறது. ஒரு காலத்தில் ஒரு கிராமத்திற்கு ஒரு கால்வழி என்ற அமைப்பு இருந்தது. இவர்களிடையே நக்வன் (பாம்பு) கச்சிம் (ஆமை) பக்ரா (ஆடு) பக் (புலி) போத்மிங் (மீன்) என்ற ஐந்து பெருங்கால்வழிகள்[1] இருந்தன! நக்வன் கால்வழியினர் தங்களுக்குள் திருமணம் செய்துகொள்ள மாட்டார்கள். ஒரே கால்வழியைச் சார்ந்தவர்களை 'தாதாபாய்' என்றழைக்கின்றனர். திருமண உறவுடையவர்களை 'அகோமாமா' என்றழைக்கின்றனர். அகோமாமா உறவில்தான் திருமணம் செய்ய வேண்டும். அந்தந்தக் கால்வழியினர் அவர்களது குலக்குறிப் பிராணிகளைக் கொல்லவோ அல்லது உண்ணவோ கூடாது. குடும்பமும் கால்வழியும் முரியாக்களின் சமூக வாழ்க்கையில் பெரும்பங்கு வகிக்கிறது. இஃது புறமண அமைப்பாகச்செயல் படுகிறது.

### 2. 0 வாழும் இடங்கள்

முரியாக்களின் வீட்டைச் சுற்றி தோட்டங்கள் உள்ளன. மூங்கிலைப் பின்னி மண்சுவர் வைத்து வீடுகட்டியுள்ளார்கள். வீட்டிற்குப் பக்கத்திலே பன்றிக்கூடுகளையும் கொட்டகைகளையும் காணலாம். ஆனால், கிராமத்தை எப்பொழுதும் சுத்தமாக வைத்துள்ளனர்.

### 2. 1 தொழில்கள்

முரியாக்கள் பெந்தா, திப்பா, பர்கா என்ற முறைகளைப் பின்பற்றி விவசாயம் செய்கிறார்கள். பெந்தா[2] என்ற முறையில் மலைகளின் நடுவேயுள்ள மரங்களை வெட்டி, தீயிட்டு, மழை பெய்தவுடன் விதைக்கின்றனர். உழுவது கிடையாது. அடுத்து திப்பா என்ற முறையில் சமதளமான நிலத்தைத் தேர்ந்தெடுத்து, சாம்பலைப் பரப்பி மழை பெய்தவுடன் உழுது பயிரிடுவதாகும். பர்கா என்பது வேறு இடங்களிலிருந்து மரங்களைக் கொண்டு வந்து தீயிட்டு சாம்பலாக்கி நிலத்தை உழுகிறார்கள். மலைச் சரிவினிடையே வாழும் முரியாக்கள், பெந்தா முறையையும் மற்ற முரியாகள் திப்பா, பர்கா முறையையும் பின்பற்றுகிறார்கள். பயிர் செய்யும் காடுகளிலே குடிசைகளை அமைத்துத்தங்குகிறார்கள். வீட்டிற்கருகிலுள்ள திலங்களில் நெல் பயிரிடுகிறார்கள். அறுவடை செய்தபிறகு காலேலே மிதித்து நெல் சேகரிக்கிறார்கள். அன்று கிராம தேவதைக்கு பூஜை நடத்துகின்றனர். கோட்டுலுக்கென தனியே நிலம் உண்டு. பையன்களும் பெண்களும் வேலைசெய்து அவற்றில்விளையும் தானியத்தைகொண்டு கிராம மக்களுக்கு விருந்தளிக்கிறார்கள். இரவில் தேன் சேகரிக்கச் செல்கின்றனர். வேட்டையாடுவதற்கு வில்லையும் அம்பையும் பயன்படுத்துகிறார்கள். பருந்து போன்றவற்றை வளர்த்துப் பழக்கி வேட்டையாடுகிறார்கள். நாய்களின் உதவியால் கீரி பிடிக்கிறார்கள். வானத்தில் இடி இடித்தால் மீன்கள் பெருகும் என நம்புகிறார்கள். தூண்டில் போட்டும் வலைபோட்டும், மீன் பிடிக்கிறார்கள். நீரை விஷமாக்கியும், மீன் பிடிக்கிறார்கள். முதலில் பிடிக்கும் மீனை நீரிலே விட்டுவிடுவர். நிறைய மீன் கிடைத்தால் நீர்த் தேவதைக்குப் பன்றியை பலியிடுகிறார்கள்.

2.2 பேயினின்றும் விடுபட, காட்டின் நடுவில் வெள்ளைப் புள்ளியிட்ட கருப்புப் பானையைத் தொங்கவிடுகிறார்கள்.[3]

### 3. 1 உணவுப் பழக்கம்.

இறைச்சியையும் மீனையும்தான் விரும்பிச் சாப்பிடுகிறார்கள். மொகுவ மலரையும் உணவாகப் பயன்படுத்துகிறார்கள். அனைவரும் தவளை, எலி, பல்லி முதலியவற்றை விரும்பிச் சாப்பிடுகிறார்கள். மாட்டிறைச்சியை விரும்பி உண்ணுகிறார்கள். பன்றி இறைச்சியைமசாலுடன் சேர்த்து வடிகஞ்சியில் போட்டு சமைத்து உண்கின்றனர். ஆனால், இவர்களுக்கு பால் பிடிக்காது; பாலையோ, பாலிலிருந்து கிடைக்கும் பொருள்களையோ உண்ண மாட்டார்கள்.

3 . 2 . மதுபானங்களைக் குடிக்காத முரியாக்களைக்காண்பது அரிது. மனைவியைக்காட்டிலும் மதுவைத்தான் அதிகம் விரும்புகிறார்கள். தெய்வத்திற்கும் படைக்கின்றனர்.

3 . 3 ஆண் பெண்கள்—தொழிற்பிரிவுகள்

இப்பழங்குடி மக்களிடையே ஆண்கள் அரிசி குத்தக்கூடாது; பெண்களுடைய துணியைத் துவைக்கக் கூடாது. பெண்களும் பையன்களுடைய தலைப்பாகையைத் தொடக்கூடாது.

3 . 4 பருவப்பெண்கள் திருமணத்திற்கு முன் பச்சை குத்திக் கொள்ள வேண்டும். பச்சை குத்தாமல் இறந்தால் மேலுலகில் தண்டனை கிடைக்கும் என எண்ணுகிறார்கள்.

4 . 0 திருமணம்: திருமண விஷயமாக, பையனின் பெற்றோர்கள்தான் முயற்சிசெய்ய வேண்டும். திருமண விஷயமாகப் புறப்படும் பொழுது சகுனம் பார்க்கிறார்கள். பையனின் பெற்றோர் உறவினர்களுடன் மதுவகைகளைக் கொண்டு பெண் வீட்டிற்குச் செல்கிறார்கள். பெண்ணின் தந்தை வந்த காரியம் என்ன என்று வினவுவார். அதற்கு இவர்கள் அந்த வீட்டில் ஒரு மலர் மலர்ந்துள்ளதாகவும்அதை பறிக்க வந்துள்ளதாகவும் கூறுவர். பெண்ணின் தந்தை சகுனங்கள் சரியாகவிருந்தனவா என்று கேட்பார். பின்பு பெண்ணின் சம்மதத்தைக் கேட்கிறார்கள். பெண் சம்மதித்த பின்பு தான் மாப்பிள்ளை வீட்டார் கொண்டுவந்த மதுபானத்தைக் குடிப்பர். இரண்டாவது முறை செல்லும்பொழுது கூடை நிறைய அரிசியையும் மதுவகைகளையும் எடுத்துச் செல்கிறார்கள். மதுவைக் கொண்டு பெண்ணின் காலைக்கழுவி பெண்ணுக்கு மோதிரம் பரிசளிக்கிறார்கள். அப்பொழுதே பரிசப்பணம் பற்றியும் முடிவு செய்யப்படுகிறது. அன்றுமுதல் அவள் கணவனின் கால்வழியைச் சார்ந்தவளாகிறாள்.

## ஆறு வகைத்திருமணங்கள்

1. ஒஸ்தசானு மர்மி

4 . 1 இத்திருமணத்தில் பெண்ணின் பெற்றோர்கள் பெண்ணுக்கு மஞ்சளைப்பூசி மாப்பிள்ளை வீட்டிற்கு அனுப்புகிறார்கள். திருமணச் சடங்கு பெரும்பாலும் மாப்பிள்ளை வீட்டில் நடைபெறும்.

4 . 2 2. தல்கதய்னு இத் திருமணமானது மாப்பிள்ளை வீட்டிலோ அல்லது மணப்பெண்ணின் வீட்டிலோ நடைபெறும்.

3 அர்விதானு

4 . 3 பெற்றோர்க்குத் தெரியாமல் ஓடிப்போய் நண்பரது வீட்டில் திருமணம் செய்துகொள்ளுதல். ஆனால், எல்லாச் சடங்குகளும் நடத்தப்படுகின்றன. செலவனைத்தும் மாப்பிள்ளையே ஏற்றுக்கொள்ள வேண்டும்.

4 ஹெய்வர்க் வாத்

4 . 4 பெண் தன் வீட்டை விட்டு வெளியேறிக் காதலனைக் கட்டாயப்படுத்தி திருமணம் செய்துகொள்ளல்.

கோட்டுலைச் சார்ந்த பையன்களை ''செவிக்'' என்றும் பெண்களைக் ''மோட்டியாரி'' என்றும் அழைப்பர். இத்திருமணத்தில் செவிக்குகளும் மோட்டியாரிகளும் சேர்ந்து மணப்பந்தல் போடுவார்கள். மணமக்களை அவற்றில் உட்காரவைத்துத்தலையில் கிரீடம் சூட்டுகிறார்கள். மணமக்கள் மணப்பந்தலை ஏழு முறை வலம் வருகிறார்கள். அவர்கள் மீது மஞ்சள் நீரைத் தெளிப்பதுடன் திருமணம் முடிவடைகிறது.

5. திகாதசானு:

4 . 5 இஃது பெரும்பாலும் மனைவியை இழந்தவர்கட்கும் விதவைகளுக்கும் நடைபெறுவதாகும். விவாகரத்து செய்தவர்களும் கள்ள உறவுடையோரும் இத்திருமணம் செய்துகொள்ளுவது உண்டு. மணமக்களை அமரச்செய்து உறவினர்கள் நெற்றியில் திலகமிடுவார்கள். மூத்த சகோதரனின் மனைவியை இளைய சகோதரன் தான் பெரும்பாலும் மணந்து கொள்ளுகிறான்.

6. ஏர் தோசானு மர்மி

4 . 6 இதனை அவசரத் திருமணம் என்று கூறலாம். பெண் கர்ப்பிணியாகயிருப்பின் உடனே திருமணம் நடந்தாகவேண்டும்.

பெண்ணை மணப்பது மட்டுமின்றி குழந்தை யையும் ஏற்றுக்கொண்டால், ''புல்பிகோவ்'' என்று கூறுகிறார்கள். கர்ப்பம் ஏற்படுவதற் குக் காரணமாகவிருந்த பையனே மணப்பின், அதனை ஏர்தோசானு மர்மி (நீர் தெளிக்கும் கல்யாணம்) என்பர்.

## மணச் சடங்குகள்

5.0 கிராமத்துப் பெரியோர்கள் அனை வரும் பெருந்தனக்காரரின் வீட்டில் கூடி மது அருந்துகிறார்கள். பின்பு மணப்பெண்ணை அழைத்து வருகிறார்கள். பின்பு மாப்பிள்ளை வந்தவுடன் மணமக்கள் இருவரும் அமர்கின் றனர். அவர்கள்மீது மஞ்சள்தண்ணீர் ஊற்று வதும் உண்டு. பெண் பையனைத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொள்வாள். மாப்பிள்ளை யின் காலைக் கழுவி நெற்றியில் திலகமிடுகிறார் கள். பெண்ணின் தாய்க்குத் துணிமணியும் தந்தைக்கு மோதிரமும் அளிக்கப்படுகிறது. மணப்பெண் மாமனார் மடியிலும் மாப்பிள்ளை தன்னுடைய மாமனார் மடியிலும் அமர்கிறார் கள். பின் மாப்பிள்ளை மணப்பெண்ணுக்கு மோதிரம் அளிக்கிறான். பின்பு மாப்பிள்ளை அண்ணியின் மடியில் அமரவேண்டும். பெண் கள் மாப்பிள்ளை முகத்தை மூடி, மஞ்சள் பூசு கிறார்கள்.

5.1. மூன்றாவது நாளன்று காலையில் பெண் ணைச் சார்ந்த மோட்டியாரிகள் மாப்பிள்ளை யுடன் நடனமாடுகிறார்கள். மணப்பந்தலில் மேடையெழுப்பி நான்குபக்கமும் விளக் கேற்றி வைக்கிறார்கள். மீண்டும் மாப்பிள்ளை யின் மீது மஞ்சள் பூசுகிறார்கள். மணப்பெண் ணின் சகோதரனின் மனைவி மாப்பிள்ளையை நோக்கி, ''எங்களை மறவாதீர்கள்; தங்கள் மீது எங்கட்கு அன்பு உண்டு. எங்கள் பெண்ணை அன்பாகநடத்துங்கள்.அவள் உலக மறியாதவள், எங்களைப்பார்க்க அவளை அனு மதியுங்கள்''என அன்பு வேண்டுகோள் விடுக் கிறாள். நீர்க் குடத்தில் நெல்லைப் போட்டு, நெல்முனையோடு முனை சந்திப்பின் திருமணம் வெற்றிபெறும் என நம்புகிறார்கள். அன்றிரவு முழுதும் விருந்தும் இசையும் நடனமும் நடை பெறும். மாப்பிள்ளையின் உறவினர்கள் உடம்பு முழுவதும் எண்ணெய் பூசிக்கொள் ளுகிறார்கள். மாப்பிள்ளை கையில் அம்புவைத் திருக்கவேண்டும். இதைப் போன்று மணப் பெண்ணுக்கும் செய்யப்படுகின்றது.

5.2. பெண்ணுடன் பிறந்த மூத்த சகோ தரியின் கணவர் மணப்பெண்ணைத் தோளில் தூக்கிவைத்துக்கொண்டு வெளியே வருவார். மாப்பிள்ளையின் உறவினர் மாப்பிள்ளையைத் தூக்கிவைத்துக்கொண்டுவருவர். மணப்பந்த லையடைந்தவுடன் மணமக்கள் மணப்பந்தலை ஏழுமுறை வலம்வருகிறார்கள். மணப்பெண் ணின் மூத்த சகோதரர்களும் மற்றவர்களும் சேர்ந்து மணமக்கள்மீது மஞ்சள்நீர் ஊற்று கிறார்கள். திருமணத்தில் இதுதான் முக்கியச் சடங்காகும். இச்சடங்கிற்குப் பின்புதான் அவர்கள் கணவன் மனைவியாகிறார்கள். பின்பு மாப்பிள்ளை வீட்டிற்குச் செல்லுகிறார்கள். பெரியோர்கள் வாழ்த்தி நெற்றியில் திலக மிடுகிறார்கள். மாப்பிள்ளையின் தாய் மண மக்களது காலைக்கழுவி அந்நீரைக் குடிப்பாள். பின்பு மணமக்கள் முன்னோர்கட்கு அமுது படைக்கின்றனர்.[4]

5.3 நான்காவது நாளன்று மணமக்கள் இரு வரும் வெளியே வந்து பாயின்மீது நிற்பர். மாப்பிள்ளை பயன்படுத்திய பல்குச்சியை மணப்பெண்ணும் பயன்படுத்த வேண்டும். அப்பொழுதுதான் மணமக்களிடையே ஓர் பிணைப்பு உண்டாகுமாம். பின்பு மணமகன் தனது பலத்தைக் காட்டக் குச்சிகளடங்கிய விறகுக் கட்டினை ஒடிக்கவேண்டும். கடைசி முறையாக மணமக்கள் இருவரும் கோட்டு லுக்குச் சென்று திரும்பவேண்டும். எல்லாச் சடங்குகளும் முடிந்தபிறகு கிராம தேவதைக் குப் பூஜை நடத்துகிறாகள்.

## கோட்டுலில் ஆண் — பெண் உறவு

6.0. பருவப் பெண்களும் மணமாகாத முரியா பையன்களும் இரவில் தங்கும் விடுதி தான் கோட்டுல் எனப்படும். முரியா பை யன்கள் பெண்களிடையே உடலுறவை அனு மதிப்பதுதான் இக்கோட்டுலின் முக்கிய அம் சமாகும். இதனைப் பண்பாட்டின் சின்னமாக

வும் கருதுகிறார்கள். போர், வேட்டையாடு தல் முதலியவற்றிற்குப் பயிற்சியளிக்கும் கூட மாகவும் கன்னிப் பெண்களிடம் உடலுறவு கொள்வதற்கு வாய்ப்பளிக்கும் இடமாகவும் இது பயன்படுகிறது.

6. 1. மெலெனேசியா, நியூகினியா போன்ற இடங்களில்ஆண்களுக்கெனத்தனியேமணமா தார் கூடங்கள் உள்ளன. பாலினேசியா, நீயூ கினியா, மைக்ரோனேசியா முதலியவிடங் களிலுள்ள கூடங்களில் ஆண்களும் பெண்க ளும் உடலுறவுகொள்வதற்கு எவ்விதத்தடை யும் கிடையாது. ஆப்பிரிக்காவிலே உள்ள சிலபழங்குடி மக்களிடையேயும் இதுபோன்ற கூடங்களைக் காணலாம். அஸ்ஸாம் பழங்குடி மக்களிடையேயும் நாகாப் பழங்குடி மக்களி டையேயும் மணமாகாதார் கூடங்களைக்காண லாம். ஒரிஸாவிலுள்ள ஜுவாங்க், பூய்யா, கோண்ட், போண்டா, டிட்டை, சவரா போன்ற பழங்குடி மக்களிடையேயும் மற்றும் தென்னிந்தியப் பழங்குடிகளான முதுவன் மன்னன், பளியர்களிடையேயும் மணமா காதார் கூடங்களைக் காணலாம். ஆனால் இப் பழங்குடி மக்களிடையே எல்லாம் பையன் களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியே கூடங்கள் உண்டு. இது தமிழ்ப் பழங்குடி களில் பளியர், மலையரசர் போன்ற குடிகளி லும் உண்டு.

6. 2. சமூக, மதச் சடங்குகளின் நிலையமா கவும் சமூகப்பயிற்சியளிக்கும் கூடமாகவும் இது பயன்படுகிறது. முதலில் கிராமமக் கள் அனைவரும் ஒன்றாக வாழ்ந்தனர். பின்பு தனித்தனி வீடமைத்துவாழ முற்பட்டனர். மற்றும் குடும்பங்களில் ஏற்படும் தகாப்புணர் சியைத் தடுப்பதற்காகவும் பெற்றோர்களது உடலுறவைப்பற்றி பிள்ளைகள் அறிதல் நல்ல தல்ல என்ற நோக்கத்தோடும் இஃது நிறுவப் பட்டது. விருந்தினர் தங்கும் இடமாகவும் பயன்படுகிறது. வயதொத்த ஆணும், பெண் ணும் கோட்டுலிருப்பதால் பொதுக் காரி யங்களுக்கு அவர்களைப் பயன்படுத்திக் கொள் ளலாம். ஆப்ரிக்கா, அஸ்ஸாம் போன்ற விடங்களில் மணமாகாதார் கூடங்களின் முக்கியநோக்கம் போர்ப்பயிற்சியாகும். பெற் றோர்கட்கும் பிள்ளைகட்கும் நல்ல உறவு இருப் பதற்கு கோட்டுல் ஒரு முக்கியகாரணமாகும். குழந்தைகள் முன்பு பெற்றோர்கள் உடலுறவு கொள்வது பாவம் என்று முரியாக்கள் கருது கின்றனர்.

6.3 பருவமடைந்த பெண்களும் மணமாகாத வாலிபர்களும் கோட்டுலின் அங்கத்தினர்க ளாவர். அங்கத்தினராவதற்குப் பல பயிற்சி களும் உண்டு. பையன்களின் தலைவனுக்கு ''சர்தார்'' என்று பெயர்; பெண்களின் தலை விக்கு ''பெலோஸோ'' என்று பெயர். பையன்களை ''செலிக்'' என்றும் பெண்களை ''மோட்டியாரி'' என்றும் அழைப்பர். இவர் கள் வாழ்க்கைக்குத் தேவையான கலைகளை இங்கு பயில்கின்றனர்.

## இருவகை கோட்டுல்கள்

6.4 முதல் வகை கோட்டுல் இரண்டாவது வகை கோட்டிலின்றும் முற்றிலும் வேறுபட்ட தாகும். இங்கே மோட்டியாரிக்கும் செலிக்கு க்கு மிடையே நிரந்தர உறவு கிடையாது. குறிப்பிட்ட பெண்ணின்மீது யாரும் தனி உரி மை கொண்டாடக்கூடாது. ஒரு பையன் ஒரு பெண்ணுடன் மூன்று நாட்களுக்கு மேல் தொடர்ந்து உறவு கொள்ளக்கூடாது. கட் டுப்பாடு, சமூகக் கடமை இவற்றில் மட்டும் இவ்விரண்டு கோட்டுல்கட்கும் வேறுபா டில்லை.

6.5 இம்மக்களிடையே இரு விதக் கோட்டுல் கள் இருந்தன. இரண்டாவது வகைக் கோட் டுலில் ஒருதார மண அடிப்படையில் உறவு கொள்ளுகிறார்கள். ஒவ்வொரு செலிக்குக்கும் ஒரு மோட்டியாரி உண்டு. இவர்களிடையே மலரும் காதல் திருமணத்தில் முடிவடைகின் றது. ''ஒருவனுக்கு ஒருத்தி'' என்ற கோட் பாட்டினை இவர்கள் பின்பற்றுகின்றனர். இதனை மீறுபவர்கள் கடுமையான தண்டனைக் குள்ளாவார்கள்.

6.5 இரண்டாவது கோட்டுலை ஜோரியா முரியாக்கள் தான் பின்பற்றுகிறார்கள். இந்த

இரண்டாவது கோட்டுலில் தொடர்பு கொண்டவர்கள் வாழ்க்கையிலும் கணவன்-மனைவிகளாகிறார்கள். பால் உணர்வு அடிப்படையில் தான் உறவு கொள்ளுகிறார்கள். ஒரு பெண்ணுடன் ஒருவர் தொடர்பு கொண்டிருந்தால் மற்றவர்கள் தொடர்பு கொள்ளக்கூடாது. இக்கோட்டுல் திருமணங்கள் மூலம் சில உறவு முறைகள் பின்பற்றப்படுகின்றன. மூத்த சகோதரரும் இளைய சகோதரரும் ஒரே அறையில் தங்கக்கூடாது. மூத்த சகோதரன் இளைய சகோதரனின் மனைவியிடம் எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ளக்கூடாது. ஆனால் இளைய சகோதரன் மூத்த சகோதரனின் மனைவியிடம் தொடர்புகொள்ளலாம்.[6]

6.6 கோட்டுலில் ஒரு பெண் தன்னுடைய சகோதரன் முன்னிலையிலே மற்ற பையன்களுடன் உடலுறவு கொள்கிறாள். அதைப் போன்று சகோதரியின் முன்பு சகோதரனும் மற்றப் பெண்களுடன் உடலுறவு கொள்ளுகிறான். கோட்டுலில் சந்திக்கும் பெண்களுடன் ஓடிப்போவதுமுண்டு.

6 7 இரண்டாவது கோட்டுலுக்கும் முதற் கோட்டுலுக்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. முதல் கோட்டுலில் பையனுக்கும் பெண்ணுக்கும் நீடித்த உறவு கிடையாது. எந்தப் பெண்ணிடமும் தனிப்பட்ட உரிமை கொண்டாட முடியாது. தனிப்பட்ட பெண்ணின் மீது அன்புசெலுத்தினால் ''அப்பெண் கோட்டுலின் பொதுஉடமை'' என்று அறிவுறுத்துகிறார்கள். புதிய கோட்டுலில் எல்லாப் பெண்களும் எல்லாப் பையன்களுக்கும் மனைவிகளாவர்.[7] அதனால் பொறாமையுணர்ச்சிக்கே இடமில்லை. கோட்டுல் முறைகள் இடத்திற்கு இடம் மாறுபடுகிறது. சிலவிடங்களில் புதன், வியாழன், ஞாயிறு மட்டும் செலிக்கும் மோட்டியாரியும் உடலுறவுகொள்வார்; சிலவிடங்களில் பஜார் தினத்தன்று மட்டும் தான் உடலுறவு கொள்வார்; சிலவிடங்களில் முன்னிரவில் பையன்களின் உடம்பை தேய்த்துவிட்டு உடலுறவு முடிந்தபிறகு ஏதேனும் ஒரு விதவை வீட்டிற்குச்சென்று படுப்பர்; நடனம், திருவிழா, மணவிழா நாட்களில் நிச்சயம் உடலுறவு உண்டு.

6 8 திருமணத்திற்குப் பின்பு பெண்கள் கோட்டுல் வாழ்க்கையை மறக்கவேண்டும். கோட்டுல் தோழமையை நினைக்கமுடியாது. கோட்டுல் பெயரையும் வைத்துக் கொள்ள முடியாது. பெண் இல்லத்தின் தலைவி. ஆனால் ஆண்கள் திருமணத்திற்குப் பின்பும் கோட்டுலுக்குச் செல்லலாம். காலப்போக்கில் கோட்டுல் செல்வதை நிறுத்தி, வாழ்க்கையில் நாட்டம் செலுத்துகிறான். கோட்டுலை திருமணத்திற்குரிய பயிற்சிக் கூடமாகவும் கருதுகிறார்கள். பெரும்பாலும் 'செலிக்' கோட்டுலில் பழகும் மோட்டியாரியை மணப்பதில்லை. பெரும்பாலும் தாய்மாமன் மகளையே மணம் செய்கிறார்கள்.[8] நிச்சயதார்த்தம் செய்யப்பட்ட ஆணும் பெண்ணும் ஓடிப்போவதுமுண்டு. பெற்றோர் சம்மதத்துடன் நடக்கும் திருமணங்களே அதிகம். மாமன்—அத்தை மகள் திருமணத்தை 'குதபல்' என்கிறார்கள். ஒரே பெண்ணாகவிருந்தால், அப்பெண்ணை மணப்பவர் அவ்வீட்டில் வேலை செய்து, பின் திருமணம் செய்வார். பரிசப்பணம் கொடுக்க இயலாதவர்களும் மாமனார் வீட்டில் வேலை செய்து திருமணம் செய்வதுண்டு.

பொதுவாகப் பழங்குடி சமுதாயத்தில் ஒவ்வொரு பெண்ணும் திருமணம் செய்தாக வேண்டும். கன்னியாக இருப்பவர்களைக் காணமுடியாது. விதவைகளும் மறுமணம் செய்து கொள்ளலாம். இவர்களிடையே காமக்கிழத்தியரைக் காண முடியாது. பல தார மணம் வழக்கத்திலுள்ளது. பெண்கள் அதிகமிருப்பதே இதற்குக் காரணமாகும்.

முரியா பழங்குடி மக்களிடையே விவாகரத்து குறைவு எனலாம். துன்பங்களுக்கும் துயரத்திற்குமிடையே வாழ்க்கைப் படகை நன்கு ஓட்டிச் செல்லுகிறார்கள். திருமணத்திற்குப் பின்பு கணவன்-மனைவியரிடையே மனக்கசப்பு ஏற்படினும், கடந்த கால கோட்டுல் வாழ்க்கையைக் குறிப்பிடமாட்டார்கள். முரியாக்களிடையே விலைமகளிர் என்ற பிரிவினர் இல்லை.

நமது பண்பாட்டை மனதில் நினைத்துக் கொண்டு மற்ற பண்பாட்டில் புகுத்தி

அவற்றை மதிப்பிடக்கூடாது. உடலுறவானது தங்கட்கு விருப்பமானவர்களுடன் விருப்பமான நேரத்தில் விருப்பமான இடத்தில் அனுபவிப்பதாகும். எனவே இதனைக் குற்றமாகக் கருதமுடியாது. செலிக்கும் மோட்டியாரியும் தங்கட்கு விருப்பமானவர்களுடன் உறவு கொள்கிறார்கள். கோட்டுல் பெண்கள் வெளியாட்களுடன் தொடர்பு கொள்வதில்லை. அப்படி உறவுகொள்வது தான் ஒழுக்கக் குறைவாகக் கருதப்படும்.

7. 4 கோட்டுலிலும் பலவிதி முறைகளைக் கையாளுகிறார்கள். வேட்டைக்குச் செல்லுங் காலத்தும் புஸ்கோலங் நடனமாடுங் காலத்தும் உடலுறவு கொள்ளக்கூடாது. உடலுறவானது உடல்களின் களியாட்டமென்றும் காதலர்கள் அணைப்பில் நிகழும் ஊஞ்சலாட் என முரியாக்கள் வருணிக்கின்றார்கள். பொது நலச் சேவை குறித்தும் போதிக்கப்படுகின்றது. கோட்டுல் அங்கத்தினர்கள் திருமணம், ஈமச்சடங்கு, சாலைஅமைத்தல், போன்ற, கிராமத்திற்குரிய பொதுக்காரியங்களைச் செய்கின்றனர். முரியாப் பையன்களும் பெண்களும் இழிவான காமஉணர்ச்சிக்குப் பலியர்கிறார்கள் என்றே கூறமுடியாது. குழந்தைத் திருமணத்தை இவர்களிடையே காணமுடியாது. அதற்கு முக்கிய காரணம் கோட்டுல் அமைப்பேயாகும். மற்ற பழங்குடி மக்களிடையே சர்வசாதாரணமாகக் காணப்படும் விவாகரத்து, பெண்சோரம், ஆண்சோரம் முதலியவற்றை முரியாக்களிடையே அதிகம் காணமுடியாது. இதற்குக் காரணம், மணமுற்காலப் பாலொழுக்கமே. அதற்கு இளைஞர்கள் அளிக்கும் முக்கியத்துவம் குறைந்துபோகிறது.

முரியாக்களின் கோட்டுல் சமூக பழக்க வழக்கங்களையும் சமூகத்தில் நடந்துகொள்ள வேண்டிய முறைமைகளையும் கற்றுக் கொடுக்கும் சமூக, பண்பாட்டு வாழ்வின் பல்கலைக் கழகம்.

## அடிக் குறிப்புகள்

1. இனக்குழுப் பழங்குடிமக்களின் சிறு பிரிவுகள் ஒவ்வொன்றும் ஒரு விலங்கு, பறவை அல்லது செடிகொடிகளின் பெயரால் தம்மை அழைத்துக் கொள்வதுண்டு. இதனை 'Totem' என்று கூறுவர் (Totem — குலக்குறி)

2. இனக்குழுப் பழங்குடிகளில் வளர்ச்சியடைந்த ஏர் முதலியவற்றை பயன்படுத்துவோரை விட பின்தங்கிய கருவிகளையே உழவுத் தொழிலுக்குப் பயன் படுத்துகிறார்கள்.

3. பேய் நம்பிக்கையும் அதை விரட்டும் வழிமுறைகளும் அவர்களது ஆன்மீகப்பண்பாட்டின் அம்சங்களாகும்.

4. முன்னோர்களது ஆவிகளை நினைவுகூர்வதும் வணங்குவதும் இனக்குழு வாழ்க்கையில் தோன்றி இன்னும் நம்மிடையே நிலவுகிறது.

5. மணமாகாத இளைஞர்கள் இரவில் உறங்கச்சில இனக் குழுக்குடியிருப்புகளில் ஒரு சாவடி இருக்கும் இதற்கு இளவட்டஞ்சாவடி என்று தமிழ் இனக்குழுவினர் பெயரிட்டிருக்கிறார்கள். ஆணும் பெண்ணும் இரவில் பால் வாழ்க்கைவாழ வசதிசெய்துதரும் அமைப்புகள். இந்திய இனக்குழுக்களில் உண்டு என வெரியர் எல்வின் கண்டுரைத்தார். ஆனால் அவர் ஆய்ந்த மக்களுடையே இதற்கென்று ஒரு இடம் கிடையாது. வானவெளியில்தான் ஆணும் பெண்ணும் சேர்ந்து உறங்குவார்கள். இக்கோட்டுல் அதனிலும்வேறுபட்டது. எப்பொழுதும் ஒரு இடத்தில் பாலின்பம் துய்ப்பதற்கு ஒரு கோட்டுல் அமைத்துக் கொண்டுள்ளார்கள் முரியாமக்கள்.

6 குழுவிலுள்ள ஆண்களனைவரும் பெண்களனைவரோடும் பாலுறவு கொள்ளலாம் என்றிருந்த உரிமை முறை படிப்படியாகக் குறைந்து சில உறவினரிடையே பாலுறவு தடுக்கப்பட்டது. தாயிடமும் சகோதரிகளிடமும் தடுக்கப்பட்டது.

7 இதனை மானிடவியலார் group marriage என்பர்.

8 இந்த இனக்குழுவில் தாய்மாமன் மகளை ஒருவன் மணக்கிறான். இம்முறை சொத்துரிமை வளர்ச்சியுற்ற பின்னரே நிகழ்ந்திருக்க முடியும்.

9 பணி செய்து திருமணம் செய்கின்ற முறை குடகு, மஹாராஷ்டிர மாநிலத்தில் ஹொலயா, அஸ்ஸாம் முதலியவிடங்களில் நிலவுகிறது. மாமனார் வீட்டில பணி செய்பவரை 'கஹானியா' என்கிறார்கள்.

சிறப்புப் பகுதி

# தமிழ் பயிற்றுமொழியானல்.........

# (சங்கப்பலகை)

நா. வானமாமலை

[தமிழ் பயிற்சிமொழியாக வேண்டும் என்று பல கல்வி வல்லுநர் குழுக்கள் ஆய்வுரை கூறியுள்ளன. ஆனல் பல காரணங்களால் இன்னும் தமிழ் தமிழ் நாட்டில் பயிற்றுமொழியாவதற்குப் பல எதிர்ப்புகள் தெரிவிக்கப்பட்டுள்ளன. அவ்விதம் எதிர்ப்போர் கூறும் ஐயங்களுக்கு விளக்கமும் வினக்களுக்கு விடையும் அளிப்பதற்காக நான் மூன்று முறை அழைக்கப்பட்டேன். முதல் முறை 31--12—70 அன்று தஞ்சையிலும், இரண்டாவது முறை 10—1—71 அன்று குன்றக்குடியிலும் 16—1—71 அன்று கோவில்பட்டியிலும் சங்கப் பலகை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. ஏறக் குறைய 20 வினக்களுக்கு விடையளித்தேன். இவ் விடைகளைக் கேட்ட தஞ்சை நண்பர்கள், தஞ்சை ராமமூர்த்தி, இளங்கோவன், பாரதிப்பித்தன் முதலியோரும், குன்றக்குடி அடிகளாரும், கோவில் பட்டி நண்பர் ஆசிரியர் கூட்டணித் தலைவர் அ. முத்துசாமி, பேராசிரியர் மா. பா. குருசாமி முதலியோரும் இவற்றை எழுதி வெளியிட வேண்டிக்கொண்டனர். பயிற்றுமொழிப் பிரச்சினை சிந்தனையுலகிலிருந்து விலகி, அரசியல் உணர்ச்சி— வட்டங்களுக்குச் சென்றுவிட்டது. இன்று அதனை ஆராய்ச்சி உலகிற்குக் கொணர்ந்து உண்மையைப் புலப்படுத்த வேண்டியது அவசியமாகிறது. எனவே சில முக்கியமான வினக்களுக்கு உளவியல். கல்வி-மெய்ஞ்ஞானம், சமுதாயவியல் முதலிய விஞ்ஞானத் துறைகளின் முடிவுகளையும் கல்வி வல்லுநர்களின் கூற்றுக்களையும் அடிப்படையாகக் கொண்டு விடையளிக்க முயலுவேன். —ஆசிரியர்]

## கல்வித்தரம்

**1) ஆங்கிலத்தைப் பயிற்று மொழியாகக்கொண்டு பயிலாவிட்டால் கல்வியின் தரம் குறைந்து விடாதா?**

இக்கேள்வியில் இரு கூறுகள் அடங்கியுள்ளன. ஆங்கிலத்தின் மூலம் பாடத்தைப் படிப்பதால் பாடத்தின் தரம் குறைகிறது. ஆங்கில மொழியறிவின் தரம் குறைகிறது. இவற்றில் எது உண்மை? இரண்டுமே உண்மையா?

1965-ல் கோவைக் கல்லூரியொன்றில் நடைபெற்ற (Pilot scheme) முன்னுய்வுத் திட்டம் ஒன்றின் முடிவுகளைக் காண்போம். அங்கு பி.ஏ., பட்டவகுப்புக்கள் ஒன்றில் (A) ஆங்கிலம் பயிற்று மொழியாகவும், மற்றென்றில் தமிழ் பயிற்று மொழியாகவும் இருந்தது. மூன்ருவது பாடமான பொருளாதாரத்தையே இருபிரிவினரும் பயின்றனர்.

முடிவில் தேர்வுகளில் A பிரிவு மாணவர்கள் முதல் பாகமான ஆங்கிலத்தில் 19 மாணவர்களில் 9 மாணவர்கள் தோல்வியடைந்தனர். மூன்ருவது பாகத்தில் 8 மாணவர்கள் தோல்வியடைந்தனர். இவர்கள் ஆங்கிலத்தைப் பயிற்றுமொழியாகக் கொண்டவர்கள் என்பதை நினைவில் வைக்கவேண்டும்.

B பிரிவு மாணவர்களில், முதல் பாகமான ஆங்கிலத்தில் 19 மாணவர்களில் 18 மாணவர்கள் தேரினார்கள். 3-ம் பிரிவிலும் 18 பேர் தேரினார்கள்.

ஆதித்தனர் கல்லூரியில் இரண்டு மூன்று ஆண்டுகள் தமிழ் ஆங்கிலப்பிரிவுகள் இருந்த காலத்து தேர்வு முடிவுகளும் இதுபோன்றே இருக்கின்றன. பட்டவகுப்பில் இருபயிற்று மொழிப் பிரிவுகள் இருக்குமிடங்களில் எல்லாம் தமிழில் மூன்ருவது பாகத்தைப்பயிலும் மாணவர்களில் மிகப்பெரும்பாலோர் முதல் பாகமான ஆங்கிலத்தில் தேறுகிருர்கள். ஆங்கிலத்தில் மூன்ருவதுபாகத்தை பயிலுவோரை விடத்தமிழில்மூன்ருவதுபாகத்தைக்கற்போர் முதல்பாகமான ஆங்கிலத்தில் அதிகசதவிகிதம் தேருகிருர்கள். அதேபோன்று தமிழில் பொருளாதாரம் கற்போர் ஆங்கிலத்தில் பொருளாதாரம் கற்போரைவிட அதிக சதவிகிதம் தேருகிருர்கள்.

இதுபோன்ற பலபாடங்களிலும் தேர்வு விகிதங்களை ஆங்கிலத்தில் பயில்வோருக்கும் தமிழில் பயில்வோருக்கும் ஒத்துப்பார்த்தால் தமிழில் பயில்வோரது தரம், முதல் பாகத்திலும், இரண்டாவது பாகத்திலும் ஆங்கிலத்தில் பயில்வோரது தரத்தைவிட அதிகமாயிருப்பதைக் காணலாம். இதுவரை வெளியிடப்பட்ட முடிவுகளிலிருந்து இந்த முடிவுக்கே வரமுடிகிறது.

1936க்கு முன் உயர்நிலைப் பள்ளிகளில் ஆங்கிலமே பயிற்று மொழியாக இருந்தது. அதன் பிறகு தமிழ் பயிற்று மொழியாயிற்று. இதனால் மாணவர் தரம் உயர்ந்திருக்கிறதா, தாழ்ந்திருக்கிறதா என்று ஆராய்ந்த லட்சுமணசுவாமி முதலியார் குழுவும், சென்னைச் சட்டசபைக் குழுவும், தமிழில் பயின்ற மாணவர்களின் அறிவுத்தரம் உயர்ந்திருக்கிறதாகவே முடிவு கூறினர். இதுபோலவே பயிற்றுமொழி மாற்றம்பற்றி ஆராய்ந்த பல மாநிலக் குழுக்களும், தாய்மொழி பயிற்று மொழியானதால், மாணவர் தரம் உயர்ந்திருப்பதாகவே முடிவு கூறியுள்ளன. சென்னை சர்விஸ் கமிஷன் தேர்வுகள் ஆங்கிலத்திலேயே நடைபெற்றன. இப்பொழுது சில ஆண்டுகளாகத் தமிழில் நடைபெறுகின்றன. ஆங்கிலத்தில் எழுதுவோர், தமிழில் எழுதுவோர், இருவர் தரத்தையும் ஒப்பிட்டு, தமிழில் எழுதுவோர் ஆங்கிலத்தில் எழுதுவோரைவிட சராசரி மதிப்பெண்கள் அதிகமாக பெறுகிருர்களென்றும், எண்ணிக்கையில் அதிகமாகத் தேர்வு பெறுகிருர்களென்றும் சர்விஸ் கமிஷன் கூறியுள்ளது. எனவே தாய்மொழி மூலம் கல்விப் பயிற்சியளிப்பதால் கல்வித்தரம் உயருமேயன்றி குறையாது என்பதே இதுவரை நடந்து வந்திருக்கும் ஆய்வுகளின் முடிவாகும்.

### உலகத்தொடர்பு

ஆங்கிலம் இல்லாவிட்டால் உலகத் தொடர்புக்கு என்ன செய்வது?

உலகத்தில் உள்ள பல நாடுகளோடு நம் நாடு தொடர்பு கொள்ளவேண்டியது அவசியம். இது இருவகையாக இருக்கிறது. ஒன்று அரசும் அரசும் கொள்ளும் தொடர்பு. மற்ருென்று இரு நாட்டு மக்களும் கொள்ளும் பண்பாட்டுத் தொடர்பு.

உலக நாடுகள் 120க்கு மேல் உள்ளன. இவற்றில் ஐந்து நாடுகளில் ஆங்கிலம் தாய்மொழியாக உள்ளது. ஆங்கிலம் பேசும் நாடுகள் அடிமைப்படுத்தி வைத்திருந்த நாடுகளில் மிகப்பல இப்பொழுது விடுதலை பெற்றுவிட்டன. அந்நாடுகள் கல்வி, அரசாங்கம், ராஜீய உறவுகள் ஆகிய துறைகளில் தங்கள் தங்கள் நாட்டு மொழிகளையே பயன்படுத்துகின்றன. இவை தவிர ஐரோப்பிய நாடுகளில் ரஷியன், பிரெஞ்சு, ஜெர்மன் மொழிகளை, ஆங்கிலத்தைவிட அதிகமாக மக்கள்

கற்றுவருகிறார்கள். ஆங்கிலத்தின் செல்வாக்கு 1940ல் இருந்தது போல் இன்றில்லை. உலகத் தொடர்புக்கு ஆங்கிலம் மட்டும் போதாது.

ஒவ்வொரு நாட்டிலும் ராஜீயத் தொடர்பு கொள்ள நாட்டு மக்களில் படித்தவர்களது தொகையில் மிகக் குறைந்தவர்களே, அந்நிய நாடுகளுக்குச் செல்கிறார்கள். அங்கு அந்நிய நாட்டு மொழிகளைக் கற்றுக்கொள்ளுகிறார்கள். எனவே அவ்வந்நாட்டு மொழிகளிலேயே தொடர்பு கொள்ளுகிறார்கள். இல்லாவிட்டால், தங்கள் மொழியும் அந்நாட்டு மொழியும் அறிந்த மொழி பெயர்ப்பாளர்கள் மூலம் தொடர்பு கொள்ளுகிறார்கள். நம் நாட்டிலிருந்து சோவியத் நாட்டிற்குச் சென்றிருக்கும் தூதுவர் அலுவலகத்தில் ஊழியர்கள் இந்தி அல்லது ஆங்கிலம் பேசுகிறார்கள். ஆனால் இம்மொழிகளில் அவர்கள் சோவியத் அலுவலர்களோடு தொடர்பு கொள்ள முடியாது. அவர்கள் ரஷ்ய மொழி பெயர்ப்பின் மூலம்தான் தங்கள் கருத்தை, சோவியத் அலுவலர்களுக்குத் தெரிவிக்க முடியும்.

உலகத் தொடர்புக்குப் பல மொழிகள் கற்ற மிகச்சிலர் தேவை. இம்மொழிகளை அந்நாடுகளுக்குச் செல்லத் தேர்ந்தெடுக்கப்படுபவர்களுக்கு மொழிக் கல்லூரிகள் அமைத்துக் கற்றுக் கொடுக்கலாம். இவ்வாறு பல நாடுகளில் அந்நிய நாட்டில் பணிபுரியச் செல்வோருக்குப் பயிற்சியளிக்கிறார்கள். உதாரணமாக மாஸ்கோவில் அயல்நாட்டுத்துறை அலுவலகத்தில் 100 மொழிகள் கற்பிக்கப்படுகின்றன. அவற்றுள் தமிழும் ஒன்று. அயல் நாடுகளில் பணிபுரியச் செல்லும் பத்தாயிரத்தில் ஒருவருக்காக, பத்தாயிரம் பேரும் ஆங்கிலம் கற்கவேண்டும் என்பது பொருந்தாத பேச்சாகும்.

## ஆங்கிலமும் உயர்நிலைக் கல்வியும்

**ஆங்கிலம் இல்லையேல் மேல்நிலைக் கல்வியை எப்படிப் பெறமுடியும் ?**

முன்னர் கூறியபடி, ஆங்கிலேயர் ஆட்சி செய்த பல நாடுகள் இப்பொழுது விடுதலை அடைந்துள்ளன. அங்கெல்லாம் தாய்மொழியிலேயே மேல்நிலைக் கல்வியைப் கற்பிக்கிறார்கள். மேல்நிலைக் கல்விக்கும், ஆங்கில மொழிக்கும் பிரிக்கமுடியாத தொடர்பு எதுவுமில்லை. உலகில் பெரும்பான்மையான நாடுகளில் தாய்மொழியில்தான் உயர்கல்வியைக் கற்பிக்கிறார்கள்,

இலங்கையில், பல குழப்பங்களுக்குப் பின் இப்பொழுது சிங்களத்திலும், தமிழிலும் மேல்நிலைக் கல்வியைக் கற்பிக்கிறார்கள்.

சோவியத் நாட்டில் 1924க்கு முன் கிர்கிஸியன், துர்க்மீனியன், சுக்சி, காகேசியன் போன்ற மொழிகள் வரிவடிவம் இன்றியிருந்தன. சோவியத் அரசு பல மொழியியலாளர்களை அம்மொழிகள் பேசும் பகுதிகளுக்கு அனுப்பி அம்மொழிகளுக்கு இலக்கண நூல்கள் எழுதி, வரிவடிவமும் அமைத்துக்கொடுத்தது. 1924ல் வரிவடிவம் பெற்ற மொழிகளில் இன்று மேல்நிலைக் கல்வியை அம்மொழிகளைப் பேசும் மக்கள் பெறுகிறார்கள். ஆண்டுதோறும் நூற்றுக்கணக்கான நூல்கள் ரஷியன், ஆங்கிலம் ஜெர்மன், பிரெஞ்சு முதலிய மொழிகளிலிருந்து இப்புதிய வரிவடிவம் பெற்ற மொழிகளில் மொழி பெயர்க்கப்படுகின்றன. இம்மொழிகளிலேயே பல நூல்களும் எழுதப்படுகின்றன.

இஸ்ரவேல் நாடு பல நாடுகளில் பல நூற்றாண்டுகள் வாழ்ந்த யூதர்களைக் குடியேற்றி அமைக்கப்பட்ட நாடு. அவர்களுடைய ஆதி மொழியான 'ஹீப்ரு'. பலகாலம் இம்மக்கள் வாழ்ந்த நாட்டு மொழிகளின் கலப்பால் சிதைந்துவிட்டது. இவ்வாறு பல நாடுகளில் வாழ்ந்த யூதர்கள்,பலவிதமாக ஹீப்ரு மொழியைப் பேசியும், எழுதியும் வந்தனர். இம்மொழியை மொழியியலாளர்கள் செம்மை செய்து, கடந்த 30 ஆண்டுகளாக மேல்நிலைக் கல்வியளிக்கப் பயன்படுத்தி வருகிறார்கள்.

இவ்வாறு பலவீனங்களுள்ள வளர்ச்சியடையாத மொழிகளை, வளர்த்து, அவற்றின்

மூலம் மேல்நிலைக் கல்வி யளிக்கமுடியும் என்பதை உலகில் பல நாடுகளின் அனுபவங்கள் நிரூபித்திருக்கின்றன.

2000 ஆண்டுகள் இலக்கிய வளர்ச்சியடைந்து தொடர்ச்சியாகப் பேச்சுவழக்கிலும் எழுத்து வழக்கிலும் பழகிவந்திருக்கும் தமிழ் மொழி, மேல்நிலைக் கல்வி கற்பிக்கத் தகுதியற்றது என்று ஆங்கிலேயர்கள் கூறிவந்ததை இன்றும், மனச்சோம்பல் கொண்டவர்கள் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். பல துறைகளிலும் சிந்தனைகளை வெளியிடும் வாய்ப்பு ஏற்பட்டால்தான் ஒரு மொழி வளரும். வளர்ந்து அவ்வத்துறைகளில், சிறந்த சிந்தனைகளின் கருவியாகப் பயன்படும்.

## ஆங்கிலமும் விஞ்ஞானமும்

பல விஞ்ஞானத் துறைகளில் நூல்கள் ஆங்கிலத்தில்தானே அதிகமாக வெளிவருகின்றன? அம்மொழி பயிற்றுமொழியாக இல்லாவிட்டால் இந்நூல்களைப் பயன்படுத்த முடியாதே!

50 ஆண்டுகளுக்கு முன்பு ஆங்கிலத்தில் தான் பல துறைகளைச் சார்ந்த விஞ்ஞான நூல்கள் வெளிவந்தன. ஆனால் இன்று நிலைமை மாறிவிட்டது.

உலகத்தில் முக்கியமான மொழிகளில் வெளிவந்த நூல்களின் விவரப்பட்டியலும், அவற்றில் விஞ்ஞான-தொழில் நுட்பவியல் நூல்களின் பட்டியலையும் பார்த்தால், ஆங்கிலத்தில்தான் விஞ்ஞான, தொழில் நுட்பவியல் நூல்கள் பெரும்பான்மையாக வெளியாகின்றன என்ற கூற்று உண்மையல்ல என்பது விளங்கும்.

### எல்லாத் துறைகளிலும்
### புத்தக வெளியீட்டு எண்ணிக்கை

| மொழி | தலைப்புகள் |
|---|---|
| ரஷ்யன் | 58,100 |
| ஆங்கிலம் | 42,000 |
| ஜெர்மன் | 33,000 |
| ஜப்பானி | 25,000 |
| பிரெஞ்சு | 16,000 |
| ஸ்பானிஷ் | 15,000 |
| இத்தாலியன் | 13,000 |
| போர்த்துகீஸ் | 8,000 |

மேற்கண்ட விவரங்களிலிருந்து தெரிய வருபவை: நூல் வெளியீட்டு எண்ணிக்கையில் முதல் இடம் பெறுவது ரஷ்ய மொழியே. ஆங்கிலம் இரண்டாவது இடத்தைப் பெறுகிறது. ஜப்பானில் வெளிவந்த நூல்களின் எண்ணிக்கை குறிப்பிடத்தக்கது.

இன்னுமொரு பட்டியலைப் பார்ப்போம். இப்பட்டியல், விஞ்ஞானம், தொழில் நுட்பம் பற்றிய நூல்களின் எண்ணிக்கையைக் கூறுகிறது.

(தொழில் நுட்பம், விஞ்ஞானம் பற்றிய நூல்கள் மட்டும்)

| | |
|---|---|
| ரஷ்யன் | 28,000 |
| ஆங்கிலம் | 9,200 |
| ஜெர்மன் | 6,200 |
| ஜப்பானி | 4,000 |
| இத்தாலியன் | 2,300 |
| பிரெஞ்சு | 2,200 |
| ஸ்பானிஷ் | 1,800 |

உலகில் வழங்கிவரும் பிற முக்கிய மொழிகளைக் காட்டிலும், ரஷ்ய மொழியிலேயே தொழில் நுட்பவியல் விஞ்ஞானவியல் பற்றிய நூல்கள் ஏராளமாக வெளிவந்துள்ளன என்பதை மேற்கண்ட பட்டியல் காட்டுகிறது. ஆங்கிலத்தை விட ரஷ்யனில் மூன்று மடங்குக்கும் அதிகமான விஞ்ஞான நூல்கள் வெளிவந்துள்ளன. பிற மொழிகளிலும் கணிசமான எண்ணிக்கையுடைய நூல்கள் வெளியாகின்றன. அதனால் பிற மொழி நூல்களை தாய்மொழியில் மொழிபெயர்ப்பதே உலக விஞ்ஞான அறிவை தமிழருக்கு எட்டச் செய்வதற்குரிய வழி. ஆங்கிலம் மூலம் கற்பதால் உலக அறிவில் ஆறில் ஒரு பகுதியைக் கூடப் பெறமுடியாது என்பதே இன்றைய நிலைமை.

எனவே, ஆங்கில மொழிக்கு உலகின் பல பாகங்களிலும் தோன்றும் அறிவையெல்லாம் வெளியிடும் தனி உரிமை எதுவுமில்லை. தவிர ஆங்கிலத்தை ஒரு மொழியாகக் கற்று

அதன் மூலமாக அம்மொழியில் வெளியிடப்படும் அறிவை அறிந்துகொள்ள முடியும். ஆங்கிலம், ரஷ்யன் ஆகிய இரண்டு மொழிகளைக் கற்றுக் கொண்டால் உலகில் வெளியாகும் விஞ்ஞான நூல்களில் 75 சதவிகிதத்தைக் கற்றுக் கொள்ளலாம். அதற்கு ஆங்கிலத்தையோ, ரஷ்யனையோ பயிற்று மொழியாக்க வேண்டியதில்லை. அவ்வாறு அயல் மொழிகளின் மூலம் பாடங்களைக் கற்கும் பொழுது மொழிச்சுமையால், கற்க வேண்டிய பாடங்களை அதிகமாகக் கற்க முடியாது. தாய்மொழியில் கற்பதால் என்ன நன்மை? 16 மணி நேரம் ஆங்கிலத்தின் மூலம் பயிலும் பாடங்களை 10 மணி நேரத்தில் பயில முடியும் என்று மகாத்மா காந்தி கூறுகிறார். இதனையே பல கல்வி வல்லுநர்களும் கூறியுள்ளனர். அவ்வாறாயின் ஒரு மணி நேரத்தில் ⅜ மணி நேரம் வீணாகிறது. காந்தியடிகள் குறிப்பிட்ட காலத்திலிருந்து இக்காலத்து மாணவர்களின் ஆங்கிலத்தின் தரம் குறைந்துள்ளது. எனவே பாதி நேரம் ஆங்கில மொழிச்சுமையால் வீணாகிறது. நம்முடைய கல்லூரிகளில் 4 வருஷம் பயிலும் பாடங்களைத் தமிழில் கற்பித்தால் 2 வருஷங்களில் கற்பிக்க முடியும். மிச்சமுள்ள 2 ஆண்டுகளில் மூன்றாவது பாகப் பாடங்களின் அளவை உயர்த்தலாம். தற்காலம் நமது பட்டப்படிப்பின் தரம், மேனாடுகளின் பட்டப்படிப்பின் தரத்திற்கு மிகவும் தாழ்ந்துள்ளது. அங்கு பட்ட மேற்படிப்பு (M.A.) படிக்கச் செல்லுமுன் இங்கு பட்டப்படிப்புப் படித்தவர்கள் மேலும் 6 மாதங்கள் புதிதாகப் பல பாடங்களைப் படிக்க வேண்டியதிருக்கிறது. நம் பல்கலைக்கழகப் பயிற்சிகளில் பல பாடங்கள் மிகவும் பழமையானவையாக இருக்கின்றன. நமது பாடத் திட்டங்களை நவீனப்படுத்த வேண்டும். நவீனப் படுத்துவதற்குள்ள தடை, ஆங்கிலத்தின் மூலம் கற்பிப்பதுதான். இப்பொழுதுள்ள குறைந்த அளவிலுள்ள பாடத்தையே நடத்த முடியவில்லை. தமிழில் கற்பித்தால் அதிக அளவிலும், நவீனத் தலைப்புகளை அதிகரித்தும் கற்பிக்கமுடியும். இப்பொழுது ஆங்கில மொழியறிவைப் பெறச் செலவழிக்கும் நேரம், பௌதீகம், ரசாயனம், தரையியல், உயிரியல், பொறியியல் போன்ற பொருள் பாடங்களைக் கற்பதில் செலவிடப்பட்டால், பொருளறிவு மிகும்.

ஆங்கில, ரஷ்ய, அமெரிக்கப் பல்கலைக் கழக மேல்நிலைப் படிப்போடு நமது மாணவர்களின் படிப்பை ஒப்பிட்டால், நமது மாணவ மாணவியர்கள் கற்கும் பாடத்திட்டம் மிகக் குறைவாகவே உள்ளது. தமிழில் போதித்தால் பொருளறிவு மிகுதியாகப் பாடத்திட்டத்தில் சேர்க்கப்படலாம். இதற்கு தற்கால உயர்நிலைப்பள்ளிப் பாடத் திட்டத்தைக் குறிப்பிடலாம். உயர்நிலைப்பள்ளிப் பாடத் திட்டத்தில் பௌதீகம், ரசாயனம், தாவர இயல் முதலிய பாடங்கள் விருப்பப் பாடங்களாக (Elective) ஆக உள்ளன. அவை தமிழில் கற்பிக்கப்படுகின்றன. அவற்றைக் கல்லூரிப் புகுமுக வகுப்பில் உள்ள பாடங்களோடு ஒப்பிட்டால், சிறிது அதிகமாகவே இருக்கின்றன. புகுமுக வகுப்பில் ரசாயனம் முதலியவிஞ்ஞான பாடங்களை, உயர்நிலைப் பள்ளியில் படித்த அளவை விடக் குறைவாக ஆங்கிலத்தில் படிக்கிறார்கள். ஆங்கில மொழியில் படிக்கவேண்டுமென்பதற்காக, உயர் நிலைப் பள்ளிப் பாடத் திட்டத்தில் காணப் படுவதைவிட குறைந்த அளவு பாடங்களைக் கற்க வேண்டியதிருக்கிறது. தமிழிலேயே புகுமுக வகுப்பு பாடங்களைக் கற்றால் உயர் நிலைப்பள்ளி பாடத்திட்டத்தில் இருப்பதை விட அதிகமாகவும், புதியதாகவும் உள்ள தலைப்புக்களைச் சேர்த்துக் கற்பிக்கலாம்.

ஐ. ஏ. எஸ் முதலிய தேர்வுகளும் ஆங்கிலமும்: ஐ. ஏ. எஸ். தேர்வுகளில் தமிழ் இளைஞர்கள் அதிகமாகத் தோல்வி அடைவதற்கு ஆங்கிலத் தரக்குறைவுதான் காரணமா ?

மத்திய அரசு வேலைகளுக்கான தேர்வுகளைச் சில ஆண்டுகளாக இந்தியிலும், ஆங்கிலத்திலும் எழுத அனுமதிக்கப்பட்டுள்ளது. இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள், ஆங்கிலம்தவிர மற்றபாடங்களில் அதிக மதிப்பெண்கள் பெறுகிறார்கள். ஆங்கிலத்

தில் எழுதும் தென்னிந்தியர்கள் ஆங்கிலத்தி லும், ஆங்கில மொழியின்மூலம் விடையெழு தும் பிறபாடங்களிலும், குறைந்த மதிப்பெண் கள் பெறுகிருர்கள். எவ்வளவுதான் ஆங்கில அறிவைத் தென்னிந்தியர்கள் விருத்திசெய்து கொண்டாலும், இந்திபேசுபவர்களின் இந்தி அறிவுக்கு ஒப்ப ஆங்கில மொழியறிவு பெற முடியாது. எனவே அதிக மதிப்பெண்கள் பெற தமிழர்கள் தமிழிலேயே விடையெழுத வேண்டும். சென்ற ஆண்டிலிருந்து நமதுதேசிய மொழிகள் அனைத்திலும் விடை எழுத அனும திக்கப்பட்டுள்ளது. தமிழில்எழுத வசதியிருக் கும்பொழுது ஆங்கிலத்தில் விடையெழுதி குறைந்த மதிப்பெண்கள் பெற்றுத் தொல்வி யடைவது ஏன்? மத்திய அரசு தேர்வுகளை நம் தாய்மொழியிலேயே எழுதுவதற்குத் தடையென்ன?

மத்திய அரசுத்தேர்வுகளில் தமிழ்நாட்டு இளைஞர்கள் போதிய அளவு வெற்றிபெருத தற்கு இதுமட்டும் காரணமன்று. நமது பல் கலைக் கழகங்களில் சில, புகுமுகவகுப்பை இரண்டு ஆண்டுகளாகவும், பட்டப் படிப்பை மூன்று ஆண்டுகளாகவும் வைத்திருக்கின்றன. இங்கு மொத்தப் பட்டப்படிப்புக்காலம் ஒரு ஆண்டு குறைவு. பட்டப்படிப்பில் பல பல்கலை கழகங்கள் ஆங்கிலத்தையும், தாய்மொழியை யும் குறைத்து, மூன்ருவது பாகத்தில் இரண்டு மேஜர் பாட அளவுக்குக் கற்பிக்கிருர்கள். ஆகவே இரண்டு பாடத்தில் அவர்களுக்குப் போதிய பொருள் அறிவு உண்டாகிறது. சென்னை, மதுரைப் பல்கலைக் கழகங்களில் தமிழ், ஆங்கிலம் ஆகிய மொழிகளைப் பயில் வதிலேயே அதிகநேரம் செலவாகிறது. என வே மூன்ருவது பாகத்தில் உள்ள பாடங்க ளுக்கு நேரம் போதவில்லை. எனவே வடநாட் டுப் பல்கலைக்கழகப் பட்ட பயிற்சிக்குரிய பாடத்திட்டத்தை விட நமது பாடத்திட்டம் குறைவானது. அதிலும் அவர்கள் இரண்டு மேஜர் பாடங்களைப் பட்டப்பயிற்சிக்கு வைத் திருக்கும் பொழுது, நமது பல்கலைக்கழகங் கள் ஒரு மேஜர் பாடத்தையே வைத்திருக் கின்றன. எனவே மொழிப்பயிற்சிக்கு ஒதுக் கப்பட்ட நேரத்தினுல். மூன்ருவது பாகத்திற் குப் போதியநேரம் கிடைக்கவில்லை. எனவே நம்முடைய மாணவர்கள் மூன்ருவது பாகத் தில், வடநாட்டு மாணவர் கற்பதற்கு பாதிக் கும் குறைவாகவே கற்கிருர்கள். முக்கிய மாக நமது மாணவர்கள் மத்திய அரசு வேலை களுக்கான தேர்வுகளில் தோல்வியுறுவதற் குக் காரணம் இதுவே. புகுமுக வகுப்பிற்கு மேல், மொழிப் பயிற்சிக்கான நேரத்தை பாதியாகக் குறைத்தால் மூன்ருவது பாகத்தி லுள்ள பாடத்திட்டத்தை அதிகமாக்கலாம். இதனுல் பட்டம் பெறுபவர்களின் பொரு ளறிவு அதிகமாகும். இந்தியா முழுவதற்கும் ஒரேவிதமான பாடத்திட்டம் அவசியம். இல்லாவிட்டால் இத்தகைய எற்றத் தாழ்வு கள் ஏற்படும்.

## ஆங்கிலமும் மொழிச்சிறுபான்மையினரும்

ஆங்கிலம் பயிற்றுமொழியாக இல்லா விட்டால் மொழிச் சிறுபான்மையினரின் நலன்கள் பாதிக்கப் படாதா?

சிறுபான்மையினருடைய நலன்கள் பாது காக்கப்படவேண்டும். அதைக்காரணமாகக் காட்டிப் பெரும்பான்மையினருடைய முன் னேற்றத்தைத் தடுக்கக் கூடாது. சிறுபான் மையோர் மைசூர் ராஜ்யம், ஆந்திரப்பிரதே சம், கேரளம் ஆகிய மூன்றுமாநிலங்கள் தமிழ் நாட்டோடு கொண்டுள்ள எல்லையில்தான் இருக்கிருர்கள். அங்கு இருமொழிகள் பேசு வோர்உள்ளனர். அங்கு சிலஊர்களில் உயர் நிலை பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் இரு மொழிகளும் பயிற்றுமொழியாக இருத்தல் வேண்டும். கேரள எல்லையில் இவ்வாறுதான் இருக்கிறது. இப்பொழுது வேலை கிடைக்க வேண்டும் என்பதற்காக எல்லையில் வாழும் மலையாளிகள் தமிழ்கற்க ஆரம் பித்திருக்கிருர்கள். மலையாளப் பிரிவுகளில் மாணவர் எண்ணிக்கை குறைந்து வருகிறது. எனவே, தமிழ்நாட்டில் வேலைவேண்டுமென்று எண்ணுபவர்கள் தங்கள் நலனுக்காகத் தமிழ் படித்துவிடுவார்கள். இதற்காக தமிழர்கள் அனைவரும் ஆங்கிலத்தில் படித்து அரைகுறை யான, தெளிவற்ற பொருளறிவு பெற்ருல் போதும் என்று கூறுவது சரியாகாது.

## அறிவும் மொழியும்

அறிவுதானே முக்கியம், அது எந்த மொழியில் இருந்தால் என்ன?

ஒரு குழந்தை தமிழ் நாட்டில் பிறந்து வளர்ந்தால் அது மூன்று வகையான சூழல் களில் வளர்கிறது. முதலாவது, இயற்கைச் சூழல். தமிழ்நாட்டின் தட்பவெப்பம், காற்று, மழை, மலை, கடல், முதலியனகொண்ட பூகோளச் சூழ்நிலை. இதற்கேற்ப அதன் உடலமைப்பு பரம்பரையாக அமைகிறது. இரண்டாவது, சமூகச் சூழ்நிலை. இது சரித்திர ரீதியாக வளர்ச்சி பெற்று ஓர் குறிப்பிட்ட நிலையை அடைந்திருக்கிறது. இச்சமூகம், சமுதாய வளர்ச்சி விதிகளுக்கேற்ப மாறுபாடடையும். இதனையும் குழந்தை மாற்ற இயலாது. இச்சமுதாயத்தில் வாழும்பொழுது மனிதன் சிந்தனைகளையும் கருத்துக்களையும் படைத்துக் கொள்ளுகிறான். அவற்றை வெளியிட மொழியைப் படைக்கிறான். அம்மொழி பிறந்தபின் இலக்கியம் தோன்றுகிறது. இவ்வாறு அமையும், சிந்தனை, கருத்து, இலக்கியம், தத்துவம் ஆகிய சிந்தனைச் சூழலுக்குப் பண்பாட்டுச் சூழல் என்று பெயர். இவையும் சமுதாய மாறுபாடுகளோடு ஒத்து மாறுபடுகின்றன. இவற்றையும் நினைத்தபடி குழந்தை மாற்றமுடியாது. இவற்றில் ஒன்றுதான் மொழி.

நாம் இயற்கைத் தூண்டுதலுக்கு அளிக்கும் பிரதிபலிப்பு, ரிஃப்ளெக்ஸ் (Reflex) என்று கூறப்படும். ஒரு பொருளுக்கு ஒலி உருவமாக நிற்கும் அடையாளம் (Symbol) எனப்படும். சிந்தனை பல பொருள்களின் தன்மைகளின் சாரமாக மனத்தில் தோன்றுவது. இது secondary symbol எனப்படும். தாய்மொழி secondary symbols ஆல் நமது நரம்பு மண்டலமும், மூளையின் ஒரு பகுதியான கார்டெக்சும் செயல்புரிந்து பொருள் கொள்ளுகின்றன. ஐந்தாறு ஆண்டுகளாக இந்த நரம்பு மண்டலத்தின் வழியே செயல்புரியும் தூண்டுதல், பிரதிபலித்தல், பதிவு, பதிவு நிலைத்தல் முதலிய செயல்கள் பழக்கமான ஒலிக்குறிப்புகளால் நடைபெறுகின்றன. இவையே தொடர்ந்து கல்விப் பயிற்சியில் பயன்படுத்தப்படுமாயின் நரம்பு மண்டலத்திற்கும், மூளைக்கும் சிரமமில்லாமல் இருக்கும். 15, 16 வயதில் திடீரென்று ஒலிக்குறிப்புகள் மாறி, அவை, பொருள்கள் சிந்தனைகளோடு, நரம்புமண்டலம், மூளை வழியாகத் தொடர்பு பெறும்பொழுது, இவ்வுறுப்புக்கள் களைப்படைகின்றன. இவ்வித உளவியல் இணைப்புகள் (Psychic Connections) மாறும் பொழுது நரம்புமண்டலச் சோர்வு உண்டாகிறது. (Brain fatigue)

இதன் காரணமாகவே, நமது பல்கலைக்கழகங்களில் பயின்று பட்டம் பெற்றவர்கள் எத்துறையிலும் படைப்பாற்றல் மிகுந்தவர்களாகவோ, சிந்தனை மிக்கவர்களாகவோ இருப்பதில்லை.

தாகூர், போஸ், ராமன் முதலியவர்கள் ஆங்கிலத்தில் இலக்கியத்தையும், அறிவியலையும்படித்தவர்கள் தானே! அவர்கள்ஆங்கிலத்தைப் பயிற்சி மொழியாகக் கொண்ட கல்வித் திட்டத்தால் உருவானவர்கள் தானே! இவ்வாறு சிலர் கேட்கலாம்.

கடந்த 150 ஆண்டுகளில் இத்தகைய மேதைகள் மிகச் சிலரே தோன்றியுள்ளனர். அவர்களில் தாகூர் வங்காளியில் தான் முதலில் எழுதினார். வங்காள இலக்கியமும், வங்காள நாட்டுச் சூழலும், இந்திய இலக்கியத் தத்துவ மரபும் அவரை உருவாக்கின. ஆங்கிலம் அவருடைய இலக்கிய மேதையை வெளியிடத் துணைக்கருவியாகவே இருந்தது. அவருடைய பெரும்பாலான கவிதைள் வங்காளியில் எழுதப்பட்டு, பிறரால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டவையே.

போஸும், ராமனும் சிறந்த மேதைகள். தாவரத்திலும், பௌதிகத்திலும் ஆய்வுகளில் ஈடுபட்டவர்கள். இயற்கையின் இரகசியங்களை அறிய தங்கள் மேதையைப் பயன்படுத்தியவர்கள். சுய சிந்தனை இயற்கையிலேயே பிறரை விட அதிகமுடையவர்கள். அவர்கள் மொழித்தடையையும் மீறி சுயசிந்தனையினால் பெரும் ஆய்வுகளைச் செய்தவர்கள். ஆனால்

சாதாரணமான சுய சிந்தனையுடையவர்களை ஆங்கில மொழிச்சுமை வளர்ச்சியடையாமற் செய்து, பிறர் செய்வதைப் பார்த்துச் செய்கிற போலிகளாக மாற்றுகிறது. தங்கள் தாய் மொழியைச் சிந்தனைக்குத் துணையாகக் கொள்ளும் ஜப்பானியர், ரஷ்யர், இஸ்ரேலியர் போன்று பல்கலைக்கழகங்களில் பயிலும் மிகப்பலர் படைப்பாற்றல் மிக்கவர்களாக இங்கு உருவாவதில்லை.

இதனை மகாத்மா காந்தி தமது நேரடியான சோதனைகளின் மூலம் அறிந்து வெளியிட்டிருக்கிறார்.

## பண்பாடு, அறிவியல் இவற்றிற்கும் மொழிக்கும் உள்ள தொடர்பு.

பண்பாட்டு வளர்ச்சிக்குத் தமிழ், அறிவை வளர்க்க ஆங்கிலம் என்ற கோட்பாட்டைப் பின்பற்றினால் என்ன தீமை?

ஆங்கில மொழியின் வளர்ச்சி வரலாற்றைப் படித்தால் இவ்வினாவிற்கு விடை காணலாம். ஐரோப்பிய மறுமலர்ச்சிக் காலத்தில் இங்கிலாந்தில் லத்தீன் மொழி பரவியது. ஆக்ஸ்போர்டு, கேம்ப்ரிட்ஜ் பல்கலைகழகங்களிலும், லத்தீன் ஆதிக்கம் செலுத்தியது. லத்தீன் மொழியே பண்பாட்டு மொழியாகவும், அறிவியல் மொழியாகவும் ஆயிற்று. சாஸர், பென்ஜான்சன், ஸ்பென்ஸர் முதலியோர் அதனைப் பண்பாட்டு மொழியாகவும் இலக்கிய மொழியாகவும் பயன்படுத்தினர். ஆங்கில இலக்கியம் தோன்றிற்று. அது பிரபுக்கள், குருமார்கள், உயர்தர வர்க்கத்தினரிடையே வழங்கி வந்தது. மக்கள் பண்பாட்டில் உயரவில்லை. சமய அறிவும், அறிவியல் அறிவும், லத்தீன் மொழியிலேயே இருந்தன. பண்பாட்டுக்கு லத்தீனும் ஆங்கிலமும், அறிவியல் வளர்ச்சிக்கு லத்தீன் மட்டும் என்ற நிலைதான் இருந்தது. ஆங்கிலம் மட்டும் படித்தவன் பண்பாடுடையவனாக மதிக்கப் படவில்லை. லத்தீன் தெரிந்தவனே ஆங்கிலம் அறிந்தவனைப் பார்க்கிலும் கல்வி கற்றவனாக மதிக்கப்பட்டான்.

பிரபுத்துவ ஆட்சியை எதிர்த்து மக்களைத் திரட்டி வாணிப வர்க்கத்தினர் போராடினர். நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் வேண்டுமெனப் போராடி வெற்றி பெற்றனர். ஆங்கிலத்தில் பேச நாடாளுமன்றத்தில் வாய்ப்பு ஏற்பட்டது. ஆங்கிலம் அங்கு மதிப்பும் பெற்றது. மக்களைப் பிரபுத்துவ ஆட்சிக்கெதிராக ஜனநாயகத்திற்காகப் போராடுவதற்காகத் தாய்மொழியையே, இயக்கத் தலைவர்கள் பயன்படுத்தினார்கள். இவ்வியக்கத்திற்குத் தலைமை தாங்கிய பெரிய வியாபாரிகளும், முதலாளிகளும் ஜனநாயக இயக்கத்தின் தலைவர்களாகி அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொண்டனர். அவர்கள் தங்களது சொத்து நலன்களையும் லாபத்தையும், ஆதிக்க நலன்களையும் பாதுகாத்துக் கொள்வதற்காக தங்களது அரசியல் ஆதிக்கத்தைப் பயன்படுத்தி, பொதுமக்களின் நலன்களைப் புறக்கணித்தனர். இவர்களை எதிர்த்து விவசாயிகளும், நகரப் பொதுமக்களும் ஒரு உரிமைச் சாசனம் தயாரித்து அதனை ஆட்சியாளர் ஒப்புக் கொள்ள வேண்டுமெனக் கிளர்ச்சி செய்தனர். இப்பொது மக்கள் லத்தீன் அறியாதவர்களாதலால், இவ்வியக்கத்தின் கருவியாக ஆங்கில மொழியையே பயன்படுத்த வேண்டி வந்தது. ஆங்கிலம் புதிய அரசியல், ஜனநாயகக் கருத்துக்களை வெளியிடும் மொழியாக வளர்ந்தது. கடந்த 150 ஆண்டுகளாகத் தொழிற்சங்க இயக்கம் பிரிட்டனில் வளர்ந்து வந்துள்ளது. கல்வி பரவியதாலும் ஆங்கிலம் அறிந்தவர் தொகை பெருகியது. சுமார் 50 ஆண்டுகளாகவே, எழுதப்படிக்கத் தெரிந்தவர் விகிதம் நூற்றுக்கு நூறாகியது. தினசரிப் பத்திரிகைகளும், வார மாதப் பத்திரிகைகளும் தோன்றின. இலக்கியத்திலும் யதார்த்தவாதமும், ஜனநாயகப் போக்குகளும் தோன்றின. நூற்றுக்கணக்கான ஆசிரியர்கள் எழுதினர். விஞ்ஞானத்திலும் மலர்ச்சி ஏற்பட்டது. ஆங்கிலம் ஆங்கில மக்களின் பலதுறை விழிப்பையும், மறுமலர்ச்சியையும் வெளியிடும் மொழியாயிற்று. இந்நிலையில் கல்லூரிகளிலும் பயிற்றுமொழியை மாற்றும் முயற்சிகள் நடந்தன. பழைமை விரும்பிகள் லத்

தீனேயே ஆதரித்தனர். கேம்பிரிட்ஜ், ஆக்ஸ்போர்டு ஆகிய பழைய பல்கலைக் கழகங்கள் மறுமலர்ச்சிக் குரலுக்குச் செவிசாய்க்க வில்லை. முன்பு பிரபுக்களின் பிள்ளைகள் மட்டுமே படித்தார்கள். பின்பு புதுப் பணக்காரர்கள் பிள்ளைகளும் சேர்ந்துகொண்டார்கள். விழிப்படைந்த மக்களது பிள்ளைகளுக்கு இடம் இல்லை. அவர்களது தேவைக்கென தொழில் நகரங்களில் புதிய பல்கலைக் கழகங்கள் தோன்றின. இவற்றை ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் ஆதரவாளர்கள் இழிவாக ''சிவப்புச் செங்கல்'' பல்கலைக் கழகங்கள் என்று அழைத்தனர். ஆக்ஸ்போர்டும் கேம்பிரிட்ஜும் உறுதியான, சிறந்த கல்வியளிக்கும் கல் கட்டிடம் என்றும், புதிய பல்கலைக் கழகங்கள் இழிவான செங்கல் கட்டிடங்கள் என்றும் கேலி செய்வதே இவ்வாறு பெயர் வைத்ததற்குக் காரணம் ஆகும்.

ஆனுல் இப்புதிய பல்கலைக் கழகங்களே காலத்திற்கேற்ற கல்வியைக் கற்பித்தன. பிரிட்டனுடைய தொழில் வளர்ச்சிக்குத் தேவையான அறிவியல் கல்வி இவற்றில்தான் போதிக்கப்பட்டது. புதிய புதிய ஆய்வுத் துறைகள் இங்குதான் நிறுவப்பெற்றன. பழைய பல்கலைக் கழகங்கள் காலத்தேவையைப் பூர்த்திசெய்யாமல் பழம்பெருமையில் திளைத்திருந்தன. இப்புதிய பல்கலைக் கழகங்கள், ஆங்கில மொழியிலேயே கல்வியளித்தன இங்கு படித்தவர்கள் ஆங்கில நாட்டின் தேவைகளைப் பூர்த்திசெய்யும் அறிவு பெற்றனர். அறிவியல் வளர்ச்சிக்குத் தாய்மொழியைப் பயன்படுத்தியபின்னர் அறிவியல் வளர்ச்சி அதிகமாயிற்று. ஆயிரக்கணக்கான விஞ்ஞானிகள் பயிற்சி பெற்றனர். தொழிலாளிகள், சாதாரண மக்களிடையே இருந்து பல அறிவியல்துறை ஊழியர்கள் தோன்றினர். இதற்குக் காரணம் மக்களது மொழி பயிற்று மொழி ஆனதுதான். எனவே பண்பாட்டு வளர்ச்சிக்குத் தாய்மொழியும், அறிவியல் வளர்ச்சிக்கு வேறோர் மொழியும் இருத்தல் இயலாது. அறிவியல் வளர்ச்சியே பண்பாட்டு வளர்ச்சிக்கு அடிப்படையாகும். இரண்டிற்கும் கருவியாகத் தாய்மொழியே இருத்தல் வேண்டும். இவ்வாறு மறுமலர்ச்சி, ஜனநாயக இயக்கங்கள், பயிற்றுமொழி பற்றியும் கருத்துத் தெரிவித்துள்ளன. அவ்வியக்கங்களின் தலைவர்கள் ஆங்கிலத்தைப் பயிற்று மொழியாக்கிப் புதிய பல்கலைக் கழகங்கள் நிறுவ முன் முயற்சி எடுத்துள்ளனர்.

அறிவியல் கல்வி வேற்று மொழியில் இருக்கும்வரை அது மக்களிடையே பரவாது. ஒரு சில வசதி பெற்றவர்களிடையேதான் நிலைத்திருக்கும். அவர்கள் தங்களுக்குப் போட்டி ஏற்படாத வகையில் பொதுமக்களிடையே அறிவுக் கல்வி பரவுவதைத் தடுப்பார்கள். நாட்டு மக்களிடையே கல்வியும், அறிவியலும் பரவவேண்டுமானுல், அவர்களுடைய மொழியையே கல்வி புகட்டவும், அறிவியலைப் பரப்பவும் சாதனமாகக் கொள்ள வேண்டும். நமது நாட்டிலும் தமிழே பயிற்று மொழியானுல், தமிழிலக்கியத்திலும், அறிவியலிலும், பண்பாட்டியலிலும், மாபெரும் மறுமலர்ச்சி ஏற்படும். தமிழ்நாட்டில் மாபெரும் அறிவியக்கம் தோன்றும். ஆங்கிலம் பயிற்றுமொழியாக இருக்கும்வரை, படித்தவர்களிடையே அரைகுறையறிவும், அதனைத் தனக்காகப் பயன்படுத்தக்கூடிய போக்கும் தான் இருக்கும். தமிழ்நாடு முன்னேற வேண்டுமாயின் நமது இளம் சந்ததியினர், தமிழ் மூலம் அறிவியலையும் பண்பாட்டினையும் கற்று, தமிழர் சமுதாயத்தின் நன்மைக்காக அறிவியல் அறிவைப் பயன்படுத்துவதோடு, அதனை எல்லோரும் எல்லா வாய்ப்பும் பெற்று முன்னேறக்கூடிய திசையில் மாற்ற முன்வரவேண்டும். அப்பொழுது தான் பண்பாடு வளரும்.

## வேலை வாய்ப்பும் — பயிற்று மொழியும்

**ஆங்கிலத்தில் படிக்காவிட்டால் மற்ற மாநிலங்களில் வேலை தேடிப்போவது எப்படி?**

பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்திலும், விடுதலைக்குப்பின் சிலவாண்டுக் காலத்திலும், நமது நாடு முழுதும் எல்லா மாநிலங்களிலும் ஆங்கிலம் படித்தவர்களுக்கு வேலை வாய்ப்பு

இருந்தது. ஆனால் 15 ஆண்டுகளாக இந்தி பேசக்கூடிய பகுதிகளில் இந்தி ஆட்சி மொழி யாகிவிட்டது. எனவே அரசின் அலுவலகங் களில் ஆங்கிலத்தில் பாடங்களைப் படித்தவர் களுக்குத்தான் வேலை என்ற நிலைமை மாறி விட்டது. 15 ஆண்டுகளாக உயர் நிலைப் பள்ளிகளிலும் பெரும் பான்மையான கல்லூ ரிகளிகளிலும் இந்தி பயிற்றுமொழியாகிவிட் டது. அங்கெல்லாம் தீவிர ஆங்கில எதிர்ப்பு உணர்வு அதிகம். ஆங்கிலத்தின் மூலம் படித்தவர்களுக்கு அங்கு வேலை கிடையாது. சில ஆண்டுகளுக்கு முன் தென் மாநிலங்களில் ஆங்கிலத்தின் மூலம் படித்தவர்களுக்கு வேலை கிடைத்துவந்தது. இப்பொழுது அந்நிலை மாறிவிட்டது. அவ்வப் பகுதிகளுக்கே அவ் வவ்வரசுகளால் வேலைகொடுக்க முடியவில்லை. ஏற்கனவே வேலை பார்ப்பவர்களையே வெளி யேறச் சொல்கிறார்கள். ஜாலஹள்ளி முதலிய இடங்களில் தமிழர்களை விரட்டுகிறார்கள். தமிழர்களும் மத்திய அரசு பொதுத் துறை நிறுவனமான நெய்வேலி லிக்னைட் கார்ப் பரேஷனில் தமிழருக்கு 75 சதவீதம் ஒதுக்கீடு கேட்கிறார்கள். மற்ற மாநிலத்தாரும், தங் கள் மாநிலங்களில் அவ்வாறேகோருகிறார்கள். அதனால் இப்பொழுது வேலையிலிருப்பவர் களுக்கே அபாயம் நேர்ந்துள்ளது. புதிதாக யாருக்கும் வேலை கிடைப்பது அருமை.

இதற்குக் காரணம் என்ன? விடுதலைக் குப்பின் தொழில் வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. ஆனால் மக்களுக்கு வேலை கிடைப்பது இந்த வளர்ச்சி விகிதத்தில் இல்லை. தொழில் வளர்ச்சியால் லாபமடைந்தவர்கள் இந்திய முதலாளிகள். தமிழகத்திலும் சிறிய முத லாளிகள் அழிந்துபோய், பெரிய முதலாளி கள் தோன்றியுள்ளனர். தொழில் வளர்ச்சி யால் விளைந்திருக்கும் செல்வம், பெருமுதலா ளிகளின் பொக்கிஷங்களுக்குள்ளும், அவர் களது கணக்கில் பாங்குகளிலும் உள்ளது. அச் செல்வம் மேலும் மேலும் தொழிலைப் பெருக்கி, புதிய வாய்ப்புகளை ஏற்படுத்து வதற்குப் பதில் எளிதில் லாபம் கிடைக் கக்கூடிய வியாபாரம். லேவாதேவி இரண்டிலும் முடக்கப்படுகிறது. பெரிய பெரிய பண்ணைகளை வாங்கி கிராமத்தில் வேலை வாய்ப்பைக் குறைக்கிறார்கள். பொதுத்துறை வளர்ச்சி பெற்றால் வேலை வாய்ப்பு அதிகமாகும். ஆனால், தாங்கள் ஆதிக்கம் செலுத்தும் துறைகளில், பொதுத் துறைகள் நுழைந்துவிடக்கூடாது என்பதற் காக முதலாளிகள் ஆரம்ப காலத்தில் உண் டாகும் இடைஞ்சல்களைப் பெரிதுபடுத்தி, அவற்றை வளர்க்க விடாமல் தடுக்கிறார்கள். நமது நாட்டில் ஏகபோக முதலாளிகளின் பணப்பெருக்கத்தைத் தடுத்து, முடங்கிக் கிடக்கும் செல்வத்தைத் திரட்டி, வேலை வாய்ப்பை அதிகரிக்கக்கூடிய புதிய தொழில் களை அரசும், தனியார் துறையும் நடத்த திட்டமிட்டு, முதலாளித்துவமற்ற பாதை யில் மக்களுக்குப் பொருள்கள் மலிவாகக் கிடைக்கும் விதத்தில், தொழில் உற்பத்தி யும், தானிய உற்பத்தியும் திட்டமிட்டு நடத்தினால் வேலைவாய்ப்பு அதிகமாகும்.

இது ஒரு பொருளாதார சமுதாயப் பிரச்சினை. மொழிப்பிரச்சினையல்ல.

முதலாளித்துவத்தை ஒழித்து சோஷலி சத்தை அமைத்த பின்னர்தான் வேலையின்மை தீரும்.

அதற்கிடையில் சில பொருளாதார, தொழில்துறை நடவடிக்கைகளால், தொழில் வளர்ச்சியை ஏற்படுத்தி, செல்வக் குவியலைத் தடுத்து வேலை வாய்ப்பை ஏற்படுத்த முடி யும்.

இதை விட்டுவிட்டு, ஆங்கிலம் பயிற்று மொழியாகக் கொண்டு படிப்பவர்களுக்கு, இந்திய நாடு முழுவதும் வேலைகள் காத்துக் கொண்டிருப்பதுபோலவும், தமிழைப் பயிற்று மொழியாகக் கொண்டவர்களுக்கு வேலையே கிடையாது என்பது போலவும் சிலர் கேள்வி கேட்கிறார்கள்.

ஆங்கிலத்திலேயே படிக்கும் அமெரிக்க இளைஞர்களும், ஆங்கில இளைஞர்களும், கானடா இளைஞர்களும் வேலையில்லாமல் இருக்கிறார்கள். ஆங்கிலத்தில் படிப்பதால் வேலை கிடைக்கும் என்ற நிலைமை எங்குமில்லை. உலகமெங்கும் பொருளாதார சமுதாயக் காரணங்களால் வேலையின்மை ஏற்பட்டுள் ளது. இந்தியாவிலும் அதே காரணங்களால் தான் வேலையின்மை தோன்றியுள்ளது. ஆங் கிலம் பயிற்று மொழியாக இருப்பதால் வேலையின்மை இல்லாமல் போய்விடும் என் பது உண்மையல்ல.

---

# பயிற்சி மொழி.

டாக்டர் இராம. சுந்தரம்

*1. 1* வறியவரும் வசதி இல்லாதவரும் கல்வியறிவு பெற்றுத் தம் திறமையையும் தொழில் நுட்ப அறிவையும் பயன்படுத்தி நம் நாட்டுப் பொருளாதார வளர்ச்சிக்குத் துணைசெய்ய வேண்டும் என்ற குறிக்கோளு டன் கோடிக் கணக்கான ரூபாய்களை இந்திய அரசாங்கம் ஒவ்வொரு கல்வி ஆண்டிலும் செலவிடுகின்றது. இந்தியாவின் பல மாநிலங்களில் தொடக்கப்பள்ளி மட்டத்தில் கட்டாய இலவசக் கல்வி அளிக்கப்படுகிறது. தமிழகத்தில் புகுமுக வகுப்பு வரையிலும் இலவசக் கல்வி அளிக்கப்படுகின்றது. சீருடை வழங்கல், மதிய உணவுத் திட்டம் ஆகிய இரண்டிலும் தமிழகம் முன்னோடியாக விளங் குகிறது. ஆண்டுதோறும் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் படிப்போர் தொகை பெரு கிக்கொண்டே வருகிறது.

*1970—'71* ஆம் ஆண்டுப் புள்ளிவிவரம் (இந்தியன் எக்ஸ்பிரஸ், மதுரை, *15—1—'71*)

| | மொத்தம் | தமிழ் மூலம் பயில் வோர் | ஆங்கிலம் மூலம் பயில் வோர் |
|---|---|---|---|
| புகுமுகவகுப்பு | *70,058* | *20638* | *49420* |
| இளங்கலை(B.A.) | *18,608* | *4027* | *14581* |
| இளம் அறி வியல்(B.,Sc) | *14,737* | *2282* | *12455*. |

(இக் கணக்கு போன ஆண்டு மாணவர் தொகையை விடக் கூடுதல்)

*1. 2* நம் மாநிலத்தில் நடை முறையில் உள்ள பாடத்திட்டம் (எல்லா மட்டத்திலும்) பிற மாநிலப் பாடத் திட்டத்தினின்றும் அதிகம் வேறுபட்டுள்ளதாகக் கூற முடியாது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் கோலோச்சிய காலத்தில், மெக்காலேயால் கொண்டுவரப் பட்ட திட்டம் சிற்சில மாறுதல்களுடன் செயல் படுத்தப் படுகிறதே தவிரப் புதிதாக விடுதலைபெற்ற சோஷலிஸ நாடுகளில்உள்ளது போலத் தொழிலோடு கூடிய கல்விக் கொள் கையை வகுத்துச் செயல் படுத்த நாம் இன்னும் முற்படவில்லை. பள்ளி, கல்லூரி, பல்கலைக் கழக அமைப்பு, பாடத்திட்டம், பயிற்று முறை, பயிற்று மொழி, ஆசிரியர்-மாணவர் விகிதம், ஊதிய விகிதம், ஆகிய துறைகளில் கவனம் செலுத்தித் தெளிவான சில கோட்பாடுகளை வரையறுத்து, அவற்றை இந்தியப் பொருளாதாரத்தோடு தொடர்பு படுத்தி இன்றைய விஞ்ஞான யுகத்திற்கு ஏற்ற முறையில் இந்தியக் கல்விக் கொள்கை யைச் சீரமைக்கக் கருதி இந்திய அரசு

இராதா கிருஷ்ணன் கமிட்டியையும்(1948-'49) ஏ.எல். முதலியார் கமிட்டியையும்(1952-'53) கோத்தாரி கமிட்டியையும் (1964-'66) நிய மித்தது. இம் மூன்று கமிட்டிகளும் பல பரிந்துரைகளைக் கொடுத்துள்ளன. அப் பரிந் துரைகளுள் ஒன்று தாய்மொழி அல்லது மாநிலமொழியே எல்லா மட்டத்திலும் பயிற்று மொழியாக இருக்க வேண்டும் என்ப தாகும். "Mother-tongue or the regional Language should generally be the medium of instruction throughout the secondary school stage" [1] இதைப் போலவே இராதா கிருஷ்ணன் கமிட்டியும் தனது அறிக்கையில் (பக்கம் 304-326) ஆங் கிலத்திற்குப் பதிலாகத் தாய்மொழி அல்லது மாநிலமொழி உயர் கல்வியில் (Higher Education) பயிற்று மொழியாக இருக்க வேண் டும் என்று கூறியுள்ளது. கோத்தாரி கமிட்டி அறிக்கை கூறுவதாவது :—

"We are convinced of the advantages of education through the regional languages. We regard the development of regional languages as vital to the general progress of the country and as an important step towards the improvement of quality in education..... the change over should take place as early as possible and in any case within about ten years......... A large programme of producing the needed literature in the Indian languages will have to be under taken; and adequate arrangements will have to be made for the training and retraining of teachers."

"The regional languages should therefore be adopted as the media of education in higher education."[2]

1.21 இப் பரிந்துரைகள் திடீர் என்று செய்யப் பட்டவை அல்ல. இவற்றுக்கும் ஒரு வரலாற் றுப் பின்னணி உண்டு. இந்திய மக்கள் தேச விடுதலைக்காகப் போராடிக் கொண்டிருந்த பொழுது, மொழி வழி மாநில அமைப்புப் பற் றியும், தாய்மொழி வழிக் கல்வி பற்றியும் மகாத்மா காந்தி போன்ற தலைவர்கள் பேசி யும், எழுதியும், மாநாடுகளில் தீர்மானங்கள் இயற்றியும் மக்களை உற்சாகப்படுத்தி வந்த னர். ஆங்கிலக் கல்வி நம்மை அடிமைகளா கவே வைத்திருக்கும்; அதிலிருந்து நாம் விடு தலை பெற வேண்டும் என்றெல்லாம் அன்று பேசினர். "அந்நிய மொழியில் பாடங்கள் சொல்லிக் கொடுக்கப்படுவதால் நமது குழந் தைகளுக்கு மூளைச்சோர்வு ஏற்பட்டிருக்கி றது. அது அவர்களுக்கு அளவுக்கு மீறிய நிர்ப்பந்தத்தையும் விளைவித்திருக்கிறது. எல்லாவற்றையும் மனப்பாடம் பண்ணுபவர் களாகவும், சுயமாகச் சிந்திக்கவோ, செயல் படவோ தகுதியற்றவர்களாகவும் செய்து விட்டது. தாம் பெறும் அறிவை மக்களுக்கோ தம் குடும்பத்தினருக்கோ திருப்பிச் சொல்லிக் கொடுக்க முடியாதபடியும் செய்துவிட்டது... அந்நிய போதனு மொழி நமது தேச மொழிக ளின் வளர்ச்சியை தடுத்துவிட்டது. ஒரு சர்வாதிகாரியின் அதிகாரங்கள் எனக்கு இருக்குமாஞல் நமது பையன்களுக்கும் பெண் களுக்கும் ஒரு அந்நிய மொழியின் மூலம் கல்வி போதிக்கப்படுவதை இன்றே நிறுத்தி விடுவேன். இந்த முறையை உடனே மாற்றி விட வேண்டும் என்றும், இல்லாவிட்டால் ஆசிரியர்களும் பேராசிரியர்களும் வேலையிலி ருந்து நீக்கப்படுவார்கள் என்றும் உத்தரவிடு வேன். பாடப்புத்தகங்கள் தயாரிக்கப்படும் வரையில் நான் காத்துக் கொண்டிருக்க மாட் டேன். மாறுதலைத் தொடர்ந்து அவை தாமாக வரும். இது உடனடியாகத் தீர்வு காணப்படவேண்டிய ஒரு தீமையாகும்"[3] என் பது காந்தியார் வாக்கு.

> "வேறு வேறு பாஷைகள் கற்பாய் நீ
> வீட்டுபாஷை கற்கிலாய் போ போ போ
> — என்றும்

(ஆங்கிலப் பயிற்சியால்)

> "செலவு தந்தைக்கோர் ஆயிரம் சென்றது
> தீது எனக்குப் பல்லாயிரம் சேர்ந்தன
> நலமோர் எற்றுணையும் கண்டிலேன் இதை
> நாற்பதினுயிரம் கோயிலிற் சொல்லுவேன்"

என்றும் தேசியக் கவி பாரதியார் கூறுகிருர்.

1.3 நாடு விடுதலை பெற்றது. மொழி வழி மாநிலங்கள் அமைக்கப்பட்டன. மாநில மொழிகள் ஆங்கிலத்துக்குரிய இடத்தைப் பள்ளிகளில் மெல்ல மெல்லப் பெற முற்பட்டன. தமிழகத்தில் எஸ். எஸ். எல். சி. வரை தமிழில் படிக்கும் வ்ாய்ப்பு எல்லோருக்கும் கிடைத்தது. இருந்தும் சில மேட்டுக் குடியினர் ஆங்கில வழிக் கல்வியை விரும்பிக் கான்வென்டுகளை நாடினர். அவற்றைத் தனியார் சிலர் நடத்தினர். அதன் மூலம் பெரும் பணத்தைக் கொள்ளையடித்தனர். ஆங்கிலம் மூலம் பயின்றவர் தமிழ் மூலம் பயின்றவரைக் குறைத்து மதிப்பிடலாயினர். தமக்கும் பொதுமக்களுக்கும் உள்ள தொடர்பை விலக்கிக் கொள்ளலாயினர். ஆங்கிலேயன் அகன்றும் அவன் மொழி மீது உள்ள ஆராக்காதல், தமிழ் மூலம் படித்தவர்களைக் கண்டால் ஒரு வகைத் தீண்டாமையைக் கடைப்பிடிக்க அனுமதித்தது. நம் மாநிலத்தில் மட்டுமின்றி இந்தியா எங்கும் இந்த நிலைமை நிலவிடக் காண்கிறோம். டாக்டர் வி.கே.ஆர்.வி. இராவ் இதைப் பற்றி ஓரிடத்தில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

"Those who are able to handle the language well are those who study in Convents and other expensive schools where the medium of instruction is English. These belong to the Higher income groups and their proficiency only results in the accentuation of the inequalities of income and wealth and makes nonsense of the so called equality of opportunity that we all swear by as our social ideal. In addition they constitute a class who with the exception of the politicians, do not have any dialogue with their own people, but get together in a separate caste that tends to look beyond their national frontiers for appreciation and communication. There is no escape from this position except by changing the medium of instruction into the mother tongue, at the higher stages of education, which will automatically ensure greatet equalisation of opportunities between the rich and the poor, the elite and the masses." [4]

1.4 மேலும் ஆங்கிலம் மூலம் கல்வி கற்றவர்கள் அரசாங்கத் துறைகளிலும், நீதி மன்றங்களிலும், கல்வித் துறையிலும் எசமானத் தன்மையோடு விளங்கவும், அக்கல்வி வாய்ப்பைப் பெறாத ஆயிரக்கணக்கான மக்கள் அவர்களுக்கு அடிமைச் சேவகம் புரியவும் ஆன ஒரு நிலைமை ஏற்பட்டுச் சுதந்திர இந்தியாவின் வர்க்கத் தன்மையைக் காட்டலாயிற்று. இரு சாரார்க்கும் இடையே ஒரு பெருஞ் "சீனச் சுவர்" எழுந்தது. இந்நிலை மாற வேண்டுமானால் பயிற்று மொழியாகவும், அரசு அலுவல் மொழியாகவும், நீதிமன்ற மொழியாகவும் மக்கள் எல்லோருக்கும் தெரிந்த அவர் தம் தாய் மொழியே (மாநில மொழியே) இருக்க வேண்டும் என்ற உணர்வு மீண்டும் தலையெடுக்கலாயிற்று. அதோடு மட்டுமல்ல; பள்ளி இறுதி வகுப்பு வரை தாய் மொழி மூலம் கற்று விட்டு, கல்லூரியில் ஆங்கிலம் மூலம் படிப்பதால் ஏற்படும் பல இடர்ப்பாடுகளும் தெரிய வந்தன. சிந்தனைத் தெளிவு, புரிந்து கொள்ளும் தன்மை, வெளிப்படுத்தும் பான்மை ஆகியவற்றில் தயக்கமும், மயக்கமும், தடுமாற்றமும் ஏறபடலாயின. இதனால் சமூக-பொருளாதார-பண்பாட்டு வளர்ச்சியில் எல்லோராலும் பங்குபெற முடியாத நிலை ஏற்பட்டது. "நோட்ஸ்"களை மனப்பாடம் செய்து ஒப்புவிக்கும் கல்வியாக நமது கல்வி மாறியது. இதனை உணர்ந்த சிலர், கல்லூரிகளில் B.A. வகுப்பு வரை சில பாடங்களிலாவது தமிழ் மூலம் பயிற்றுவிக்கலாம் எனத் திட்டமிட்டு, தமிழகத்தில் கோவை அரசினர் கல்லூரியில் அதனைச் செயல் படுத்தத் தொடங்கினர். மாணவர்களுக்கு உதவித் தொகை அளிக்கப்பட்டது. 'தமிழ் வளர்ச்சிக் கழகம், என்கின்ற அமைப்பு பல நூல்களைத் தமிழில் வெளியிட்டது. இருந்தும், சரியான திசைவழியும், விஞ்ஞானப் பார்வையும் இல்லாத காரணத்தால் அத்திட்டம் எதிர் பார்த்த பலனைத் தரவில்லை.

1.5 தாய் மொழியைப் பயிற்றுமொழியாக்க வேண்டும் என்ற திட்டத்தை முன் வைத்துச் செயல்படத் தொடங்கிய நேரத்தில், அதற்கு எதிராகவும் ஆங்கில வழிக் கல்விக்கு ஆதரவாகவும் குரல் எழுந்தது. அவ்வாறு எழும்பிய குரல் நம் முன் வைத்த காரணங்கள் :—

1 கல்வியின் தரம் குறையும்.

2 வேலை வாய்ப்பு குறையும்.

3 மேற்படிப்புக்காக வெளிநாடு செல்ல முடியாது.

4 ஆங்கிலம் உலக மொழி

5 தாய்மொழியால் முடியாது.

இக்காரணங்கள் ஒவ்வொன்றையும் இனி ஆராய்வோம்.

1.51 கல்வித்தரம்: தாய்மொழி மூலம் படிப்பதால் கல்வித்தரம் குறையும் என்கிற வாதம் தாய்ப்பால் குடிப்பதால் குழந்தை நோஞ்சான் ஆகும். எனவே புட்டிப் பாலைப் புகட்டு என்ற வாதத்தோடு ஒக்கும், தாய் மொழிமூலம் படிப்பதால் ஆங்கில மொழித் தரம் குறையலாமே தவிரக் கல்வித் தரம் ஒருக்காலும் குறையப் போவதில்லை. ஒழுங்கான புரிந்துகோடலும், சுய சிந்தனை வளர்ச்சியும், விளங்க உரைக்கும் இயல்பும்தான் கல்விக்கு அடிப்படைத் தேவை. இவை தாய் மொழி வழிக் கல்வியால்தான் சிறக்கும் என்பது வெள்ளிடை மலை. ஆங்கிலத்தில் சொல்வதை விடவும், எழுதுவதைவிடவும் தமிழில் சொல்வதும், எழுதுவதும் ஒரு தமிழ் மாணவனுக்கு எளிதாகும். ஆசிரியர், மாணவர் நட்புறவுக்கும் இது உதவும். பழைய நோட்ஸ்களையே திருப்பித் திருப்பிச் சொல்லிப் பழகிய ஆசிரியர்கள் புதிய கருத்துக்களைச் சொல்ல வேண்டிய கட்டாயத்திற்கும் ஆளாகிறார்கள். இதற்கு அஞ்சித்தானோ என்னவோ, ஆசிரியர் பலர் தாய்மொழி வழிக் கல்வியை எதிர்க்கிறார்கள். தாய்மொழி மூலம் கல்வி பயிலும் ரஷ்யர்கள், பிரஞ்சுக்காரர்கள், ஜெர்மானியர்கள், கற்றுச் சிறந்திருப்பதையும் நாம் காண்கிறோம். தஞ்சைப் பெரிய கோயிலும், தாஜ் மகாலும் ஆங்கிலப் படிப்பின் விளைவல்ல. படிக்கும் பாடத்தில் எந்த அளவுக்கு நமக்குத்தேர்ச்சியும் திறமையும் கிடைக்கின்றன என்பதை வைத்துத்தான் தரத்தைக் கணக்கிட வேண்டும். தாய் மொழியைவிட ஆங்கிலம் இதனை நமக்குத் தந்துவிடவில்லை. தாய் மொழி மூலம் படிப்பதால் ஏற்படும் மற்றொரு நன்மை பிறமொழிச் சுமை குறைவதாகும். மொழி எளிமை இருப்பதால் தாய் மொழிமூலம் கற்கின்ற மாணவன் பாடத்தில் மட்டும் கவனம் செலுத்தி நல்ல தேர்ச்சி பெறமுடியும். பிற மொழி மூலம் படிப்பதென்றால் அம்மொழியைக் கற்றுக் கொள்ளப் பாதி நேரமும், பாடத்திற்கு மீதி நேரமும் ஒதுக்கநேரிடுகிறது. இதனால் இரண்டிலும் எதிர்பார்த்த பலனை அடைய முடிவதில்லை. நான் பணியாற்றிய ஒரு கல்லூரியில் புகு முக வகுப்பில் தமிழ் மூலம் மூன்றும் பாகம் படித்தவர்களில் 75% மாணவர்கள் வெற்றி பெறவும் ஆங்கிலம் மூலம் படித்தவர்களில் 33% மாணவர்கள் வெற்றிபெறவும் நேர்ந்தது. இச் சிறு புள்ளிவிவரம் தாய் மொழி வழிக் கல்வியின் நன்மையைத் தெற்றென எடுத்துக்காட்டும்.

1.5.2 வேலைவாய்ப்பு:— ஒரு மாநில மொழியில் (தாய்மொழி) படித்தால் அந்த மாநிலத்திற்குள் மட்டும் தான் வேலை பார்க்க முடியும்; பிறமாநிலங்களுக்கோ, பிறநாடுகளுக்கோ சென்று பணியாற்ற முடியாது. ஆகவே ஆங்கில வழிக்கல்வி வேண்டும் என்பர். நம் மாநிலத்தில் தமிழைப் பயிற்று மொழியாக்குவதால் ஆங்கிலமோ பிறமொழிகளோ படிக்கக்கூடாது என்ற தடையில்லை. ஆங்கிலம் இரண்டாவது மொழியாகப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் இடம் பெறுகிறது. தற்கால மொழியியல் முறைகளை மேற்கொண்டு மொழிப்பயிற்சியை நடத்தினால் விரைவாகவும் செம்மையாகவும் எந்த மொழியையும் கற்றுக்கொள்ளலாம். வெளியிடங்களுக்குச் சென்று வேலை தேடும்பொழுது அம் மொழியறிவு பயன்படும். மேலும் ஆங்கிலம் மூலம் படித்து விட்டால் மட்டும் வேலை கிடைக்கும் என்பதற்கு என்ன உறுதி? செய்தித்தாள்களில் வரும் விளம்பரங்களில் ஒரு நியமனத்துக்கு வேண்டிய தகுதிகளை எல்லாம்

கொடுத்து விட்டு, அந்த நியமனம் நிகழ இருக்கின்ற மாநிலமொழி தெரிந்தவர்க்கு முதலிடம் தரப்படும் என்கின்ற குறிப்பு எதைக்காட்டுகிறது? ஆங்கிலம் மட்டும் தெரிந்தால் போதாது. வேலைக்குப் போகின்ற இடத்திலுள்ள மொழியும் தெரிந்திருக்க வேண்டும் என்பதைத்தானே! ஆங்கிலம் மூலம் படித்து எம். ஏ., எம். எஸ்ஸி. பட்டம் பெற்றவர்களில் 3500 பேர்களுக்கு வேலை இல்லை என்று கேரளச் செய்தி ஒன்று கூறுகின்றது. இந்தியப் பெருநாட்டில் ஆங்கிலம் மூலம் படித்துப் பட்டம்பெற்ற 61,000 பொறியியலார் வேலையின்றித் தவிக்கின்றனர். 1969 டிசம்பர் முடியவுள்ள கணக்குப்படி பார்த்தால் படித்தவர்களில் 15 லட்சம் பேருக்கு வேலை இல்லை; அவர்களில் $2\frac{1}{4}$ லட்சம் பேர் பட்டதாரிகள்[5]. அமெரிக்காவில் 45,000 விஞ்ஞானிகளுக்கு வேலை இல்லை என ஒரு கணக்குக் கூறுகிறது. அங்குள்ள இந்தியர்களில் 10,000 பேர் வேலையில்லாமல் தவிப்பதாகத் தெரிகிறது[6]. பிரிட்டனிலும் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகி வருகிறது. இவர்களெல்லாம் ஆங்கில மூலம் படித்தவர்களே. ஆனால் தாய்மொழி மூலம் கல்வி கற்கும் சோஷலிஸ நாடுகளில் வேலையில்லாத் திண்டாட்டம் இல்லை என்ற உண்மையையும் நாம் மனங்கொள்ள வேண்டும். எனவே ஆங்கிலம் மூலம் படித்தால் தான் வேலை கிடைக்கும் என்ற வாதம் உறுதியற்றதாகும். ஆங்கிலம், வேலை வாங்கிக்கொடுக்கும் காமதேனு அல்ல. வேலையில்லாத் திண்டாட்டம் தீர மொழி ஒரு வழி அல்ல. சமூகப் பொருளாதார அரசியல் மாற்றந்தான் அதற்குள்ள ஒரே வழி. அதை மாற்றியமைக்காதவரை இந்தியாவில் வேலையில்லாத் திண்டாட்டம் தீராது. நான்காவது ஐந்தாண்டுத் திட்டமுடிவில் சுமார் 2 கோடிப் பேர் வேலையின்றி அவதிப்படுவர் என்ற திடுக்கிடவைக்கும் செய்தி இம்மாற்றம் எவ்வளவு அவசரமானது, அவசியமானது என்பதைக் கோடியிட்டுக்காட்டுகிறது. நாம் எங்குபிழைக்கச் சென்றாலும் அங்குள்ள மக்களின் மொழி நமக்குத் தெரியாவிட்டால் தொல்லைப் படநேரிடும் என்பதை அனுபவம் நமக்கு எடுத்துச்சொல்லுகிறது. ஆங்கிலம் அறியாத, தாய்மொழிமட்டுமே அறிந்த எத்தனையோ தமிழ்த் தொழிலாளிகள் உலகெங்கும் பரவியிருக்கிறார்களே! அவர்கள் மொழியை நம்பியா தம் பயணத்தைத் தொடங்கினர்? அவர்கட்குள்ள தன்னம்பிக்கையும் மனத்திட்பமும் படித்த இளைஞர்கட்கு ஏன் இல்லை? அப்படியே, ஆங்கிலம் தெரிந்தால்தான் வேலை கிடைக்கும் என்ற நிலை ஏற்படுவதாக வைத்துக்கொண்டாலும், நாம் பள்ளியிலும் கல்லூரியிலும் கற்றுக்கொள்ளும் ஆங்கிலம் போதுமானதாகும். பயிற்று மொழியாக ஆங்கிலம் இருந்தால்தான் அதைக்கற்றுக்கொள்ள முடியும் என்பதில்லை. பயிற்று மொழி, பாடத்தைப் புரிந்துகொள்ள உதவுகிறது. எனவே, பயிற்று மொழியையும், மொழிப்பயிற்சியையும் (medium education and language learning) ஒன்றுக்கிக் குழப்பக்கூடாது. ஆங்கில மூலம் படிப்பது வேறு; ஆங்கிலத்தைப் படிப்பதுவேறு. பாடத்தைப் புரிந்துகொள்ளத்தான் மொழியேதவிர, மொழியைக் கற்றுக்கொள்ளப் பாடங்கள் இல்லை.

*1.5.3* மேல் படிப்பு: மேல் படிப்புக்காக இந்தியாவின் பிற மாநிலங்களுக்கோ வெளிநாடுகளுக்கோ செல்கிறவர்களுக்கு ஆங்கிலம் ஓரளவு துணை செய்கின்றது என்பது உண்மைதான். ஆனால் இந்தியாவின் பிறமாநிலங்களில் உள்ள பல்கலைக் கழகங்களில் மாநில மொழியே பயிற்சி மொழியாகும்பொழுது (தற்பொழுது 41 பல்கலைக் கழகங்களில் மாநில மொழியே பயிற்சி மொழியாக உள்ளது) ஆங்கிலத்தினல் பயனில்லாது போய் விடுகின்றது. எனினும் சில அகில இந்திய கல்விமையங்களில் (All India educational institutions) இன்னும் சிறிது காலத்திற்குக் கோத்தாரி கமிட்டி கூறியிருப்பது போல ஆங்கிலமே பயிற்றுமொழியாக இருந்துவரலாம். அதற்கு நாம் இங்கு கற்றுத்தரும் இரண்டாம் பகுதி ஆங்கில அறிவு (II Part, English) போதுமானதாகும். காலப்போக்கில் ஆங்கிலத்தின் இடத்தை வளர்ச்சியுற்ற ஓர் இந்திய மொழி பிடித்துக்கொள்ளும். இனி, வெளிநாடுகளுக்கு மேற்படிப்பிற்காகச் செல்வோ

ருக்கு ஆங்கிலம் மட்டும் போதுமா என்பதையும் சிந்திக்கவேண்டும். ஏனெனில் பல நாடுகளில் அந்தந்த நாட்டு மொழிகளே பயிற்றுமொழிகளாக உள்ளன. மே. ஜெர்மனியில் படிக்க விரும்புவோர் ஜெர்மன் மொழி தெரிந்திருக்கவேண்டும். இலங்கையில்கூட சிங்களமும் தமிழும் பயிற்றுமொழிகளாக உள்ளன. அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற ஒருசில நாடுகளில்தான் ஆங்கிலம் பயிற்றுமொழியாக உள்ளது. ஆங்கிலத்திலும் இல்லாத புதிய கல்வி நுட்பங்கள் பிறமொழிகளில் உள்ளன என்ற உண்மை மூடி மறைக்கப்பட்டுள்ளது. வானவியலில் ரஷ்யன் சிறந்துள்ளது; இலக்கியத் திறனாய்வுக் கொள்கைகளில் பிரெஞ்சு சிறந்துள்ளது; தத்துவத் துறையில் சமஸ்கிருதமும் பொதுவாக அறிவியல் துறையில் ஜெர்மனியும் உயர்நிலை வகிக்கின்றன. ஆங்கிலம் இம் மொழிகளிலுள்ள நல்ல நூல்களையும் கட்டுரைகளையும் மொழிபெயர்த்துத் தனதாக்கிக் கொள்ளுகிறது. நமக்கு ஆங்கிலம் தவிரப் பிறமொழிப் பயிற்சி இன்மையால், எல்லாமே ஆங்கிலத்தில்தான், என்று எண்ணி ஏமாறுகிறோம். நம்மிடமும் நவீன மொழிபெயர்ப்புச் சாதனங்கள் இருக்குமேயானால் ஆங்கில உதவியின்றியே பிறமொழிக் கருத்துக்களை நேரடியாக நம் மொழிகளில்இறக்குமதி செய்துகொள்ளலாம். ஜெர்மன் பிரெஞ்சு, ரஷ்யன் மொழிகளில் பயிற்சி இல்லாவிடில் சிறந்த பல மொழியியல் கருத்துக்களை நாம் அறிந்துகொள்ள முடியாது. ஆங்கில மொழியில் அவை எல்லாம் இருக்கின்றன என்று சொல்லமுடிவதில்லை. எனவேதான், அமெரிக்கா போன்ற ஆங்கிலமூலம் படிப்பிக்கும் நாடுகளில்கூட மேல்படிப்புக்குச் செல்லும் மாணவர்கள் பிரெஞ்சு, ரஷ்யன், ஜெர்மன் மொழிகளில் ஏதேனும் ஒன்றிரண்டைக் கற்றுத் தேறக் கட்டாயப்படுத்தப்படுகிறார்கள். மேலைநாட்டறிஞர்கள், மாணவர்கள் பலரும் பல மொழியறிவு பெற்றிருப்பதற்குக் காரணமே, ஆங்கிலத்தின் போதாமைதான். மேலும், மேல்படிப்புக்காக வெளியிடங்களுக்குச் செல்பவர் எண்ணிக்கைதான் எவ்வளவு? குறிப்பிட்டுச் சொல்லத்தக்க அளவுதான். அவர்களுக்காக - அந்த ஒரு சிலருக்காக — பலரை வதைப்பது ஜனநாயகமாகுமா?

1.5.4 உலக மொழி: ஆங்கிலம் உலக முழுவதும் வழக்கிலுள்ள மொழி என்பதில் ஐயமில்லை. அதன் தேவை கருதித்தான் நாம் அம்மொழியைக் கற்றுக் கொடுக்கிறோம். அந்த அறிவு நம் உலகத் தேவைக்குப் போதுமானதாகும். இதிலும் இடர்ப்பாடு உண்டு. பிரான்சு, ஜெர்மன், ரஷ்யன் ஆகிய நாடுகளில் ஆங்கிலம் பொதுமக்கள் மொழியாக இல்லை என்பதும் மனங்கொள்ளத்தக்கது. அங்கெல்லாம் அந்தந்த மொழியில் பேசாவிட்டால் நம் எண்ணங்கள் செயலாவதில்லை என்பதையும் அறியவேண்டும். மேலும், உலக மொழிதான் பயிற்றுமொழியாக இருக்க வேண்டும் என்பதில்லையே? ஆங்கிலம் உலக மொழி என்பதால் அதையே நம் வீட்டு மொழியாகவும் ஆக்கிக்கொண்டு, வீட்டில் நாம் பேசுகிற தாய்மொழியை உதறிவிட எத்தனை பேர் தயாராக இருக்கிறார்கள்? அப்படியே இருப்பினும், அது நடப்பியலுக்குப் பொருந்தக்கூடியதா?

1.5.5 தாய்மொழியால் முடியாதா?: அறிவியல், தொழிலியல் நுட்பங்களை எடுத்து விளக்கும் திறன் நம் மொழிகளுக்கு இல்லை என்பர். இவ்வாறு சொல்வதே ஒரு அடிமை மனப்பான்மையாகும். ஒவ்வொரு மொழிக்கும் எதையும் தெளிவுறுத்தும் ஆற்றல்உண்டு. அதை வெளிக்கொணர வேண்டியது அதைப் பேசும் மக்களின் முயற்சியும் கடமையும் ஆகும். நம்முடைய சோம்பேறித்தனத்தை மூடிமறைக்க மொழியைப் பலிகடா ஆக்கக் கூடாது. கி. பி, 7ஆம் நூற்றாண்டிலிருந்து தனது வரலாற்றைத் தொடங்கும் ஆங்கிலம் இந்த அளவு வளரக் காரணம் என்ன? ஆங்கிலேயர் அதைப் பல துறைகளிலும் நல்லெண்ணத்தோடு பயன்படுத்தியமை தானே? வளர்ச்சி அடைந்த எல்லா மொழிகளின் வரலாறும் இதுதான். எனவே, நாமும் நம் மொழியைத் தக்க முறையில் பயன்படுத்தினால் அதற்கு இயல்பாகவே உள்ள ஆற்றலால் அது வளமும் நலமும் பெறும் என்பதில்

ஐயமில்லை. பைபிள் மொழியான ஹீப்ரு விஞ்ஞான மொழியாக வளர்ந்த வரலாறு நமக்குத் தெரியாதா ? 'தாய்மொழிக்கில்லை, ஆங்கிலத்துக்குண்டு' என்ற நம் மனோபாவம்' ஒரு காலத்தில் ஆங்கிலேயர் கிரேக்கம், லத்தீன், பிரெஞ்சு மொழிகள்மீது கொண்டிருந்த மனோபாவத்தோடு ஒத்ததாகும். நல்லவேளை, அவர்களின் மனோபாவம் மாறியது; ஆங்கிலம் வளர்ந்தது. நாம் மட்டும் அதே மனோபாவத்தில் இருப்பது இயற்கை விதிகளுக்கே புறம்பாகாதா ?

கலைச் சொற்களைப் பற்றியும் இங்கு சிறிது சொல்லவேண்டும். தமிழில் (தாய்மொழி) கலைச்சொற்கள் இல்லாததைக் குறையென்பர். ஒத்துக்கொள்வோம். சிறிது காலத்துக்கு — தமிழில் கலைச்சொல்லாக்கம் தேவையான அளவு கிடைக்கும்வரை - பிறமொழிச் சொற்களை — குறிப்பாக, அகில உலக நிலையில் பயன்படும் சொற்களை (International term) எடுத்துக் கொள்வதில் தவறில்லை. எல்லா மொழிகளிலும் இந்த நிலை உள்ளது. இதுதான் இயல்பான நிலைமை. மொழிக்கு இதனால் வளமேதவிர, குறைவு இல்லை. ஆங்கிலம் வேண்டும் என்பவர்கள் தாய் மொழி மீது வெறுப்புற்றுச் சொல்லவில்லை. அதற்கு ஒரு காரணம் உண்டு.

1.6 இதுவரை, தாய்மொழி வழிக் கல்வியை ஆதரித்தும், அதற்கு எதிராகஉள்ள வாதங்களின் பொருத்தமின்மையைச் சுட்டிக் காட்டியும் சில கருத்துக்கள் எடுத்துரைக்கப் பட்டன. இனி, தாய்மொழி வழிக்கல்வித் திட்டம் வெற்றிபெற, நம் மாநில அளவில் நாம் உடனடியாகச் செய்யவேண்டியவை என்ன என்பதையும் கோடிட்டுக் காட்ட வேண்டும்.

1.61 ஒரே வகுப்பில் ஒரே பாடத்தைத் தமிழ் மூலமும் கற்கலாம், ஆங்கிலம் மூலமும் கற்கலாம் என்று இருக்கிற நிலை மாற்றப் பட்டு, எல்லாக் கல்லூரிகளிலும் எல்லாப் பாடங்களும் தமிழ்வழி சொல்லித்தர ஏற்பாடு செய்யப்படவேண்டும். இல்லையேல், தமிழ் வழி படித்த மாணவர் — ஆங்கிலம் வழிபடித்த மாணவர் என இரு பிரிவுகள் உண்டாகி, மாணவர் ஒற்றுமை சிதையும். அண்மையில் ஏ. எல். முதலியார் தலைமையில் அமைந்த குழுவின் பரிந்துரைகள் தமிழகத்தை மேலும் பின்னுக்குத் தள்ளும் நிலையில் உள்ளன என்பதைக் குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை. (அண்மையில் மைசூரில் நடந்த கல்வியாளர் கருத்தரங்கு மாநில மொழியே உயர்கல்வி மட்டத்திலும் பயிற்றுமொழியாக இருக்கவேண்டும் என்று கூறியுள்ளதை இங்கு நினைவுபடுத்தல் வேண்டும். [6a]

1.62. அரசாங்கம் உடனடியாக ஒரு "மொழி நிறுவனத்தை" (State Institute of languages) நிறுவ வேண்டும். அந்நிறுவனத்தின் சார்பில் பிறமொழிகளைத் தற்கால மொழியியல் துணையோடு ஆசிரியர்கட்குக் கற்றுத்தரவும், பல்வேறு பாடங்களுக்கான கலைச் சொல்லகராதிகளைத் தயாரிக்கவும் பிறமொழி நூல்களை மொழிபெயர்க்கவும், சுயமாகவே மூல நூல்களை எழுதவும் ஆசிரியர்களுக்குப் பயிற்சி வகுப்புகள் (Orientation Course) நடத்தவும், பயிற்றுமொழி சம்பந்தமான கருத்தரங்குகள், உரைக்கோவைகள் கலந்துரையாடல்களுக்கு ஏற்பாடு செய்யவும் வேண்டும். தமிழ் நாட்டில் 'தமிழ் வளர்ச்சிக் கழகம்' சில நூல்களை மொழிபெயர்த்து வெளியிட்டும், ஆங்காங்கே சில பயிற்சி வகுப்புகள் நடத்தப்பெற்றும் வந்தபிறகும் கூட, தாய் மொழி வழிக்கல்வித்திட்டம், இங்கு சீராக நடைபெறவில்லை. காரணம், விஞ்ஞான பூர்வமான நடவடிக்கைகளை அவை மேற்கொள்ளவில்லை. மத்திய அரசு மாநில மொழி வளர்ச்சிக்கென ஒவ்வொரு மாநிலத்துக்கும் ஒருகோடி ரூபாய் ஒதுக்கியுள்ளது. நம் தமிழகஅரசு அதைப்பயன்படுத்தியதாகத் தெரியவில்லை. இங்கு கேரளாவில் நடைபெற்று வரும் இம்மாதிரியான நிறுவனம் ஒன்றின் பணியைச் சுட்டிக்காட்டுதல் பொருத்தமாகும். திருவனந்தபுரத்தில் அரசுமொழி நிறுவனம் ஒன்று 16-6-68ல் தொடங்கப் பெற்றது. அறிவியல், கலையியல், தொழிலியல் தொடர்பான நூல்களை வெளியிட இந்நிறுவனம் ஏற்பாடு செய்துவருகிறது. பட்டமுன்படிப்பு

(Predegree) பட்டப்படிப்பு (degree) பல் தொழில் படிப்பு (Polytechnic) வகுப்புக்களுக்கான 740 புத்தகங்களை 6 ஆண்டுகளில் வெளியிடத் தீர்மானித்துள்ளது. 16 அகராதிகளும் வெளிவரும். கலையியல் (Humanities) அகராதி 2 தொகுதிகளும், அறிவியல் அகராதி ஒன்றும், மொழியியல் அகராதி ஒன்றும் இதுவரை வெளிவந்துள்ளன. (இவ்வகராதிகள் மொழி பெயர்ப்புக்குத் துணைபுரியும் ஆ.ர்) ''விஞ்ஞானகைரளி'' என்கிற மாத இதழ் ஒன்றும் இந்நிறுவனத்தின சார்பில் வெளிவந்துகொண்டு இருக்கிறது. பயிற்சி வகுப்புகள், உரைக்கோவைகள் கருத்தரங்குகள் நடத்தப்பெறுகின்றன. மலையாளத்தைப் பயிற்று மொழியாக்கும் திட்டத்துக்கு இது பேருதவி புரிகிறது. கள்ளிகோட்டைப் பல்கலைக்கழகம் அடுத்த ஆண்டுமுதல் மலையாளத்தைப் பல்கலைக்கழக மட்டத்திற்கு பயிற்று மொழியாக்கத் தீர்மானித்துள்ளது.[7] மைசூரிலும், ஐதராபாத்திலும் இம்மாதிரி நிறுவனங்கள் பணியாற்றி வருகின்றன. இத்திக்கென பல நிறுவனங்கள் உள்ளன. எனவே தமிழகமும்பிறமொழிகளோடு போட்டியிட்டு வளர்ச்சிபெற இத்தகையநிறுவனம் உடனடித் தேவையாகும். தமிழ் மொழி, இலக்கியம், பண்பாடு இவற்றின் வரலாற்றை அறிந்து கொள்ள எந்த மையத்துக்குச் (centre) செல்வது என்கிற ஒரு அவலநிலை உண்டு. அதைப் போக்குவதும் தமிழை உயர்மட்ட ஆராய்ச்சிமொழியாக்குவதும் நாம் அடுத்துச் செய்யவேண்டியது. இந் நிறுவனம் தமிழ் மொழி வளர்ச்சிக்கு இன்னும் பலதுறைகளில் பணிபுரியலாம். விரிவஞ்சி இங்கு குறிப்பிடவில்லை.

இவைகளின் தேவையை உணர்ந்து, எவ்வளவு விரைவாக நாம் செயல்படுகிறோமோ அவ்வளவு விரைவில் நம் பயிற்று மொழித் திட்டம் சிறக்கும் என்பதில் ஐயமில்லை. பல ஆசிரியர்களும் அறிஞர்களும் தமிழில பல பாடங்களைப் பற்றி சிறந்த நூல்கள் எழுத ஆயத்தமாக உள்ளனர். அவர்களை நன்கு பயன்படுத்திக் கொள்ள அரசு விருப்பு வெறுப்பற்று முன்வரவேண்டும்.

## அடிக் குறிப்புகள்

1. A. L. முதலியார் கமிட்டி ரிப்போர்ட், பக். 60.
2. Report of the education Commission (1264-66), Education and national development. பக். 15, 613, 614.
3. மகாத்மா காந்தி, தொகுப்பு நூல்கள், தொகுதி 12. பக். 549. (காந்திநூல் வெளியீட்டுக் கழகம், சென்னை.)
4. V. K. R. V. Rao, Education and human resource development, Allied Publishers, Madras, P. 167.
5. 'இந்தியன் எக்ஸ்பிரஸ்', மதுரை, 10-6-70 CPM. தேர்தல் அறிக்கை, 1971.
6. 'ஜனசக்தி', சென்னை, 10-1-71.

6a. The Hindu, Madras, 23-1-71.

7. இந்தியன் எக்ஸ்பிரஸ், மதுரை, 21-1-71.

# கல்லூரிகளில் பயிற்று மொழி

மா. பா. குருசாமி.

கல்வியின் இன்றியமையாமையை இன்றைய உலகம் உணர்ந்துள்ளது. வள்ளுவர்,

> ''கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
> மாடல்ல மற்ற யவை,'' [1]

என்று கூறுகின்றார். கேடில் விழுச் செல்வமான கல்வி சமுதாயத்திற்கெல்லாம் கிடைக்க வேண்டுமென்ற கருத்து வலுப்பெற்றிருக்கின்றது. மக்களாட்சியின் வெற்றிக்கு துணைநிற்கின்ற கல்வி அதற்குரிய ஆற்றல் பெற்று விளங்குவது தேவையாகின்றது.

கல்வி வாழ்க்கைக்குப் பயன்படுவதாக இருக்கவேண்டும். காந்தியடிகள், ''குழந்தையிடமும் மனிதனிடமும் இருக்கின்ற - உடல், உள்ளம், ஆன்மா தொடர்பானவற்றின் — சிறந்தனவற்றை வெளிக்கொணர்வதனையே நான் கல்வியாகக் கருதுகிறேன்,'' [2] என்று கூறுகின்றார். சுவாமி விவேகானந்தர், ''மனிதனிடம் உள்ளடங்கியிருக்கும் நிறைவைமலர்விப்பதே கல்வி,'' [3] என்று குறிப்பிடுகின்றார். இத்தகைய கல்வி குழந்தைப் பருவத்தில் தொடக்கப் பள்ளியில் கால்கொள்ளுகின்றது. குமரப் பருவத்தில் கல்லூரியில் ஒரு நிலையான வளர்ச்சியைப் பெறுகின்றது. சரியாக அமையும் கல்லூரிக் கல்வி ஒருவனைச் சிறப்பாக ஒரு துறையில் ஆராய்ச்சி ஆற்றல் பெற்றுத்திகழச் செய்யவேண்டும்.

கல்வி தனது குறிக்கோளை நிறைவேற்ற வேண்டுமானால் அதற்கேற்ற வகையில் கற்பிக்கும் மொழியான கருவி அமையவேண்டும். ஒருவர் பயன்படுத்துகின்ற கருவி ஏற்றதாக, அவருக்குப் பழக்கப்பட்டதாக இருந்தால், அவர் செய்கின்ற பணியும் சிறப்பாக அமையும். அதேபோன்றே கல்வியால் எண்ணிய பலனை விளைவிக்க வேண்டுமானால் பயிற்சி மொழி ஏற்றதாக இருக்கவேண்டும். எந்நிலையிலும் தாய்மொழி வாயிலாகப் பெறுகின்ற கல்வியே சாலச் சிறந்ததாக இருப்பதைக் கல்வியறிஞர்கள் சுட்டிக்காட்டுகின்றனர். முன்னேறிய — முன்னேறுகின்ற நாடுகளின் — வரலாறும் இதனையே உறுதிப்படுத்துகின்றது.

**இன்றைய ஆங்கிலக் கல்வி:** கல்லூரிக் கல்வியில் ஆழமாக வேரூன்றி, கற்றவர்கள் பலரின் சிந்தனையை அழுத்தமாகப் பாதித்து, மறைமுகமாகப் பல்வேறு துறைகளிலும் ஊடுருவி நின்று ஆதிக்கம் செலுத்துகின்ற ஆங்கில மொழியின் வரலாற்றுப் பின்புலத்தை அறிந்துகொண்டால், பயிற்சி மொழியாக அது கோலோச்சும் காரணத்தைப் புரிந்து கொள்ளலாம்.

நமது நாட்டில் ஆங்கிலேயர்களின் ஆட்சி பரவியபொழுது, அவர்களுக்கு நிர்

வாக இயந்திரத்தை நடத்த ஆங்கிலம் தெரிந்தவர்கள் தேவைப்பட்டார்கள். இந்தத் தேவையை நிறைவுசெய்ய மெக்காலே 'குமாஸ்தாக்களை' உருவாக்கும் நோக்கத்தில் ஆங்கிலக் கல்வி முறையைப் புகுத்தினர். ஆங்கிலக் கல்வியால் உயர்ந்த ஊதியம் கிடைக்கின்ற வேலையைப் பெறலாம் என்பதனை அறிந்த 'மூளை' படைத்தவர்கள் அதனை வரவேற்றனர். அவர்கள் ஆங்கிலக் கல்வியை மட்டும் பெறவில்லை. தெரிந்தோ தெரியாமலோ ஆங்கிலேயர்களின் நடை, உடை, பாவனைகளையும், நாகரிகத்தையும் ஏற்றுக் கொண்டனர். ஆங்கிலம் கற்றவர்களுக்கு பேசுபவர்களுக்கு, அது ஆட்சிமொழியாக இருந்ததால் உயர்ந்த வேலை கிடைத்ததைப் போலவே, அதை ஒட்டிச் சமுதாயத்தில் பெருமையும் கிடைத்தது. ஆங்கில 'மோகத்தை'த் தூண்ட, வளர்க்க இவை போதுமானவைகளாக இருந்தன.

காலப்போக்கில், ஆங்கிலத்தில் புலமை பெற்ற சமுதாயச் சீர்திருத்தவாதிகளான இராஜாராம் மோஹன்ராய் போன்றவர்கள் ஆங்கிலத்தை அறிவுமொழியாகக் கருதி இந்தியர்களைப் படிக்கத் தூண்டினர். இதுவும் இந்தியாவில் ஆங்கிலக் கல்வியின் வளர்ச்சிக்கு மறைமுகமாகத் துணைபுரிந்தது.

ஆங்கிலக் கல்வி மெக்காலே நினைத்ததைப் போல நிர்வாகத்திற்கு வேண்டிய ஆட்களை வழங்கியது. அதே நேரத்தில், செலவு செய்து கற்கும் வசதி பெற்றவர்களுக்குச் செல்வத்தையும், செல்வாக்கையும் தேடிக் கொள்ள உதவியது. ஆங்கிலக் கல்வி பெற்றவர்கள் விழிப்புணர்ச்சி பெற்று, அடிமை நிலையை உணர ஆங்கிலம் துணைசெய்தது. ஆனால், தாய்மொழியில் தக்க பயிற்சியின்மையால் சுதந்திர வேட்கையைத் தாயகத்தில் எழுப்புவதற்கு அவர்களது ஆங்கிலப் புலமை தடையாக இருந்தது. ஆங்கிலம் தங்கள் கையில் பூட்டிய பொன் விலங்கென்பதை அவர்கள் உணர்ந்து, மக்களது மொழியைக் கைக்கொண்ட பொழுதுதான், விடுதலை இயக்கம் நாட்டில் மக்கள் இயக்கமாக உருப்பெற்றது.

**விளைந்த தீமைகள்:** ஆங்கிலக் கல்வி கண்ணுக்குத் தெரியாத நோய்க்கிருமிகள் உடலெங்கும் பரவி பல தீமைகளை விளைவிப்பதைப்போல, நமது சமுதாயத்திற்கும் நாட்டிற்கும் செய்துள்ள குறிப்பிடத்தக்க கேடுகளைச் சுட்டிக்காட்டலாம்.

ஆங்கிலேயர்களின் ஆதிக்கம் நீண்டகாலமாக நமது மண்ணில் நிலைத்திருக்க ஆங்கிலக் கல்வி துணைசெய்தது. ஆங்கிலம் கற்று உயர் பதவிகளில் இருந்தவர்கள் தங்களது தந்நலம் கருதி, நாடு தொடர்ந்து அடிமைப்பட்டிருக்க ஆவன செய்தார்கள். 'தாய்மொழி தெரியாது' என்று கூறுவதைப் பெருமையாகக் கருதிய இழிநிலை நமது நாட்டில் வளர்ந்தது. ஒரு தமிழன் மற்றொரு தமிழனோடு ஆங்கிலத்தில் பேசுவதே பெருமையென்ற பொய்யான மதிப்பு — மனப்பான்மை — மேலோங்கியது. ஆங்கிலம் கற்று 'மேதை'களெனக் கருதப் பெற்றவர்கள் 'பேதை'மை நிலையில் கூறியதை, மகாகவி பாரதியார் மிகவும் தெளிவாக,

''புத்தம் புதிய கலைகள் — பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்;

மெத்த வளருது மேற்கே — அந்த
மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை,

சொல்லவும் கூடுவ தில்லை — அவை
சொல்லுந் திறமை தமிழ்மொழிக் கில்லை

மெல்லத் தமிழினிச் சாகும் — அந்த
மேற்கு மொழிகள் புவிமிசை யோங்கும்'—

என்றந்தப்பேதை உரைத்தான்,''[4] என்று கூறுவது இங்கு நோக்கத்தக்கது. இந்த மனப்பான்மைதான் நாடு விடுதலை பெற்றபிறகும் 'ஆங்கிலப் பித்தாக இன்னும் சிலரிடம் இருக்கக் காண்கின்றோம். நம்மிடம் புரையோடியிருக்கும் 'ஆங்கில அடிமை மோகம்' ஆங்கிலம் தொடர்ந்து பயிற்சி மொழியாக இருப்பதால் இன்னும் மறையாமலிருக்கின்றது.

ஆங்கிலக் கல்வி படித்தவர்களுக்கும் பொதுமக்களுக்குமிடையில் பெரியதோர் அகழியைத் தோற்றுவித்திருக்கிறது. உடையா

லும், உணவாலும், நடையாலும், பாவனை யாலும் ஆங்கிலேயர்களாக மாறுகின்ற போக்கு இப்பொழுதும் மாறிவிடவில்லை. பொதுமக்களிடமிருந்து விலகி, 'தனி இன மாக' வாழுகின்ற கல்லூரிக் கல்வி பெற்ற வர்கள், தங்களது வீடுகளிலேயே 'அந்நியர் களாக' மாறுவதால் சமுதாயத்திற்குச் சிறி தும் பயன்படாதவர்களாக இருக்கின்றனர்.

ஆங்கிலம் பயிற்று மொழியாக இருக்கும் இன்றையக் கல்விமுறை நமது நாட்டின் ஆற் றலை உறிஞ்சுகின்றதைக் காந்தியடிகள் சுட் டிக் காட்டுகின்றார். அவர், 1917 ஆம் ஆண் டில் குஜராத் (இரண்டாவது) கல்வி மாநாட் டில், "ஆங்கிலத்தின் மூலம் கல்வி கற்கும் ஒருவன் அக்கல்வியை முடிக்கப் பதினாறு ஆண்டுகள் ஆகின்றன. இந்தப் பாடங்களைத் தாய்மொழியில் கற்றால், மிக அதிகமாகப் போனாலும் பத்து ஆண்டுகளுக்கு மேலாகாது என்று அனுபவம் வாய்ந்த பல ஆசிரியர்கள் கருத்து தெரிவித்துள்ளனர். ஒவ்வொரு மாணவனுக்கும் ஆறு ஆண்டுகள் மீதமாகும் என்றால், இலட்சக்கணக்கன மாணவர்களைக் கொண்ட இந்த நாட்டிற்கு மொத்தத்தில் எத்தனை ஆண்டுகள் மீதமாகும் என்பதைத் தயவு செய்து சிந்தித்துப் பாருங்கள்," [5] என்று ஆங்கிலம் உயர்நிலைப் பள்ளிகளிலும் கற்பிக்கும் மொழியாக இருந்த காலத்தில் கூறியிருக்கின்றார். இன்று கல்லூரிகளில் ஆங்கில மொழியில் பயில்கின்ற மாணவர்கள் அந்த மொழிச் சுமையால் படுகின்ற தொல்லை களை நடைமுறையில் காணலாம். கேள்விக ளுக்குப் பதில்களாக, என்ன படிக்கின்றோம் என்பதையே புரியாமல் மனப்பாடம் செய்ய உள்ளத்தோடு போரிட்டு, இந்தப் போராட் டத்தில் உள்ளத்தின் நலனையும், உடலின் ஆக்கத்தையும் மாணவ இளைஞர்கள் கெடுத் துக்கொள்வதனைக் காண்கிறோம்.

ஆங்கிலக் கல்விக்குக் கோடி கோடியாகச் செலவிடுகின்றோம். ஆனால் அதனால் கிடைக் கின்ற அறிவு முழுமையானதாக இல்லை. இதனை மகா கவி பாரதியார் மிகவும் அழகாக

"கணிதம் பன்னிரண் டாண்டு பயில்வர், பின்
 கார்கொள் வானிலோர் மீனிலை தேர்ந்திலார்;
அணிசெய் காவியம் ஆயிரங் கற்கினும்
 ஆழ்ந்திருக்கும் கவியுளம் காண்கிலார்;
வணிக மும்பொருள் நூலும் பிதற்றுவார்;
 வாழு நாட்டிற் பொருள்கெடல் கேட்டிலார்
துணியு மாயிரஞ் சாத்திர நாமங்கள்
 சொல்லு வாரெட் டுணைப்பயன் கண்டிலார்"

என்றும்,

"அன்ன யாவும் அறிந்திலர் பாரதத்
 தாங்கி லம்பயில் பள்ளியுட் போகுநர்;
முன்னர் நாடு திகழ்ந்த பெருமையும்
 மூண்டி ருக்குமிந் நாளின் இகழ்ச்சியும்
பின்னர் நாடுயர் பெற்றியுந் தேர்கிலார்
 பேடிக் கல்வி பயின்றுழல் பித்தர்கள்;
என்ன கூறியற் றெங்ஙன் உணர்த்துவேன்
 இங்கி வர்க்கென துள்ளம் எரிவதே," [6]

என்றும்

கூறுவது நோக்கத்தக்கது. நமது நாட்டின் உற்பத்தியாற்றலைப் பெருக்க இயலா அறிவி யல், பொருளியல் பட்டதாரிகளையும், நோய்க்கேற்ற மருந்தை உற்பத்தி செய்ய இயலா மருத்துவர்களையும், ஆண்டுதோறும் படைக்கின்ற ஆங்கிலக் கல்வியால் யாருக்கு என்ன பயனென்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

கல்லூரிகள் வழங்கும் கல்வி தொன்மை யானது. அதற்கும் நாட்டு நடப்பிற்கும் இடையில் தொடர்பு இருப்பதில்லை. இத னைக் காந்தியடிகள், "ஆங்கிலம் போதனு மொழியாக இருப்பதால் நம்முடைய நாட்டு நடப்புக்கும் நாம் பெறும் கல்விக்கும் எவ்வி தத் தொடர்பும் இல்லாது போய்விட்டது. நாட்டில் உள்ள சிறந்த அறிஞர்களால் பய னில்லாது போய்விட்ட பரிதாப நிலையை நாம் காண்கிறோம். நாம் பெற்ற புதுக் கருத் துக்களின் பலன் பொதுமக்களுக்குக் கிட்ட வில்லை. விஷயங்களில் கவனம் செலுத்தா மல் விந்தையான சொற்களின் உச்சரிப்பைக் கற்பதில் நாம் கடந்த அறுபது ஆண்டுகளை (1917-இல்) வீணாக்கி விட்டோம். பெற்றோர் களிடமிருந்து பெற்ற பயிற்சி என்னும் அஸ்தி வாரத்தின்மீது கட்டடத்தைக் கட்டாமல்

அந்த அடித்தளத்தையே இடித்தல்லவா தள்ளிக் கொண்டிருக்கிறோம்? இதற்கு இணையான ஒரு மோசமான காரியம் வரலாற்றில் நிகழ்ந்ததில்லை. சுருக்கமாகச்சொன்னால் இது ஒரு தேசியப் படுகொலை,''[7] என்று கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

ஆங்கிலப் பயிற்சிமொழி நமது நாட்டின் ஆன்மாவை அரித்திருக்கின்றது. இந்தியப் பண்பாட்டில் களைகள் படர, நமது தனித்தன்மை தேய அதுவும் ஒரு காரணமாகும்.

நமது நாட்டு மொழிகள் வளங்குன்றுவதற்கு ஆங்கிலக் கல்விதான் அடிப்படைக் காரணம். கற்றவர்களின் திறமையெல்லாம் ஆங்கிலப் புலமை பெறுவதில் கரைகின்றது. அவர்களால் தாய்மொழியின் வாழ்விற்கும் வளத்திற்கும் ஒன்றும் செய்ய முடிவதில்லை. எடுத்துக் காட்டாக நமது தாய்மொழியாம் தமிழைக் கூறலாம். அறிவியல் கலைச் சொற்கள் தமிழில் வளராமல் இருப்பதனைச் சிலர் சுட்டிக் காட்டுகின்றனர். இதற்குக் காரணம் என்ன? இப்பொழுது அறிவியல் கலைகளில் புலமை பெற்றிருப்பவர்கள் எல்லாம் இன்றும் கூட அதனை ஆங்கிலத்தில் காட்டிக்கொள்ளவே விரும்புகின்றனர். எடுத்துக் காட்டாக ஒன்றைக் கூறலாம். மதுரைப் பல்கலைக் கழகம் ''திருக்குறளில் பொருளியல்'' என்றொரு கருத்தரங்கு நடத்தியது. பங்குபெற்றவர்கள் எல்லாம் தமிழகத்தைச் சேர்ந்த பேராசிரியர்கள். ஆய்வுக்குரிய மூல நூலான திருக்குறள் தமிழில் இருக்கின்றது. இருந்தும் பெரும்பாலானவர்கள் தங்களது ஆய்வுக் கட்டுரைகளை ஆங்கிலத்திலேயே எழுதியளித்தனர். இதைப் போலவே எல்லாத் துறைகளிலும் நடைமுறை இருக்கின்றது. இந்நிலை நீடிக்கின்றவரை தமிழில் அறிவியல் கலைச் சொற்கள் உருவாகும் என்று எதிர்பார்க்க இயலாது.

ஜப்பான், ஜெர்மனி, ரஷ்யா போன்ற நாடுகளில் வியத்தகு முன்னேற்றம் ஏற்பட்டிடிருப்பதற்கான காரணங்களில் ஒன்று அந் நாடுகளில் இருக்கின்ற கல்வி முறையாகும். அங்குள்ளவர்கள் தாய் மொழியிலேயே எல்லா இயல்களையும் புரிந்து கற்பதால், அவற்றைப் பல்வேறு துறைகளிலும் பயன்படுத்தி நாட்டை முன்னேற்றுகின்றனர். நமது நாட்டில் ''பள்ளிக் கல்வி புள்ளிக்குதவாது'' என்னும் நிலை இன்றும் இருப்பதால், கல்வி கற்றவர்களின் எண்ணிக்கை வளர்கின்ற அளவிற்கு நாட்டில் முன்னேற்றம் ஏற்படவில்லை.

**தாய்மொழி மூலம் கல்வி:** நாம் சிந்திக்கப் பயிற்சி பெற்றிருக்கின்ற தாய் மொழிமூலம் கல்வி கற்பதே இயற்கையானதென்பதைக் கல்வியறிஞர்கள் எல்லாம் கூறுகின்றனர். தாய் மொழியின் மூலம் கல்வி பெறுகின்றவனின் வளர்ச்சி தாய்ப்பாலைக் குடித்து வளரும் குழந்தையின் வளர்ச்சியைப்போன்றது. பிற மொழியின் மூலம் கல்வி பெறுவது செயற்கையான உணவை உண்டு வளரும் குழந்தையின் நிலை போன்றதாகும்.

உயர்நிலைப் பள்ளிவரை தமிழில் படிக்கின்ற மாணவர்கள் கல்லூரிக்குள் நுழைந்தவுடன் இரண்டு சிக்கல்களை எதிர்நோக்குகின்றனர். ஒன்று, மொழிச்சிக்கல். திடீரென்று எல்லாவற்றையும் ஆங்கிலத்தில் நடத்துகின்ற பொழுது ''கண்ணைக்கட்டிக் காட்டிற்குள் விட்டதைப்போல'' உணர்கின்றனர். மொழியைப் புரிந்து பின், கற்பிக்கும் பொருளைப் புரிந்துகொள்ளும் இக்கட்டான நிலை ஏற்படுகின்றது. இரண்டாவது சிக்கல், சூழ்நிலையை ஒட்டி அமைவது. பள்ளியிலிருந்து மாறுபட்ட சூழ்நிலையில் கல்லூரி அமைந்திருப்பதால் மனதில் முதலில் 'மலைப்பு'த் தோன்றுகின்றது. கல்லூரியிலும் பயிற்சி மொழியாகத் தமிழ் இருக்கின்றபொழுது மொழிச்சிக்கல் இருப்பதில்லை. உயர்நிலைப் பள்ளிக் கல்வியின் உண்மையான தொடர்ச்சியாகக் கல்லூரிக் கல்வி இருப்பதனைக் காண்பார்கள்.

தாய்மொழியே கல்லூரிக கல்வியில் பயிற்சி மொழியாக இருக்க வேண்டுமென்று கல்விச் சிந்தனையாளர்கள் எல்லோரும் ஒரு

முகமாகக் கூறுவதைக் கவனிக்க வேண்டும்.

1949-ஆம் ஆண்டில் டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் குழு, ''உயர் கல்வியின் கற்பிக்கும் மொழியை நடைமுறையில் எவ்வளவு விரைவாக இயலுமோ அவ்வளவு விரைவாக ஆங்கிலத்திலிருந்து இந்திய மொழிகளுக்கு மாற்றவேண்டும்,'' [8] என்று குறிப்பிட்டது.

1966-ஆம் ஆண்டு வெளிவந்த கோத்தாரிக் கல்விக்குழு அறிக்கை, ''பத்தாண்டுகளில் திட்டமிட்டு, படிப்படியாக, கல்லூரி நிலையில் வட்டார மொழியைக் கற்பிக்கும் மொழியாக ஏற்றுக்கொள்ள வேண்டும்,'' [9] என்று கூறியது.

1967-ஆம் ஆண்டில் பாராளுமன்றக் கல்விக்குழு, ''ஐந்தாண்டுகளில் எல்லாப் பாடங்களிலும் எல்லா நிலைகளிலும் இந்திய மொழிகளையே கற்பிக்கும் மொழியாகப்பயன்படுத்த வேண்டும்,'' [10] என்று குறிப்பிட்டது.

கல்வியாளர்களும், கல்விக் குழுக்களும், அரசியல் தலைவர்களும் நாட்டின் நன்மை கருதி ஒருமுகமாகத் தாய்மொழி மூலமாகவே கல்லூரி கல்வி அமைய வேண்டுமென்று கூறுகின்றனர். போதிய காலமளித்து, முயற்சி செய்தால் தாய்மொழி பயிற்சி மொழியாக இருப்பதால் தோன்றக்கூடிய தடைகளைத் தவிர்க்க முடியுமென்பதைச் சுட்டிக்காட்டியுள்ளனர்.

நன்மைகள்: தாய்மொழி பயிற்சி மொழியாவதால் கிடைக்கக் கூடிய நன்மைகளையும் தொகுத்துக் கூறலாம்.

தாய் மொழியில் கற்கின்ற பொழுது மாணவர்களுக்குக் கல்வி ஒரு சுமையாவதில்லை. ''தேவையே கற்கத் தூண்டுவதால் கல்வி எளிதாகிறது. மூளையில் வேறு சுமைகள் சேர்ந்து நெருக்காத இளமையில் தாய் மொழி பதிந்துவிடுவதால் என்றும் நீங்காமல் நிலைபேறு உடையதாகிறது. எல்லாவற்றையும் விட சிறந்த ஒரு மேன்மை என்னவெனில் தாய்மொழிக் கல்வியில் சொற்களைப்பொருட்களுக்கு நேரே இயைக்கும் இயற்கையான நன்முறை வாய்த்திருக்கின்றது,'' என்று டாக்டர் மு. வ ர த ரா ச னு ர் கூறுகின்றார். தமிழ் பயிற்சி மொழியில் கற்கின்ற மாணவர்கள் மொழிச்சுமையின்றி படிப்பதை அனுபவம் காட்டுகின்றது.

பயிற்சி மொழியாகத் தாய்மொழி இருக்கின்ற பொழுது மாணவர்கள் கற்பதைக் கசடறக் கற்கும் வாய்ப்புக் கிடைக்கின்றது. இதனால் பெறுகின்ற கல்வி உண்மையானதாக, உள்ளத்தில் நிலை பெற்று நிற்பதாக அமைகின்றது. சுவாமி விவேகானந்தர், ''மூளையில் திணிக்கப்பெற்று, வாழ்வெல்லாம் ஜீரணிக்கப்படாமல், அங்கேயே அழியக் கூடிய செய்திகளின் அளவை ஒட்டிக் கல்வி அமைவதில்லை. வாழ்க்கையை உருவாக்குகின்ற, மனிதனைப் படைக்கின்ற, பண்பை ஆக்குகின்ற தன்வயப்படுகின்ற கருத்துக்களே தேவை. ஐந்து கருத்துக்களையே நீங்கள் புரிந்து, உங்கள் வாழ்விலும் பண்பிலும் ஏற்றுக் கொண்டால், நூலகத்தை முழுமையாக மனப்பாடம் செய்த யாரையும் விட நீங்களே மிகுதியாகக் கல்வி பெற்றவராவீர்கள்,'' [11] என்று கூறுவது சிந்தனைக்குரியது. வெறும் தேர்வுக்காக மட்டும் படிப்பது தேர்வு முடிந்தவுடன் நினைவில் நில்லாமல் மறைகின்றது. தாய்மொழியில் புரிந்து படிப்பது முழுக்க மறைவதில்லை என்பது நமது அனுபவமாகும்.

தாய் மொழி மூலம் பெறும் கல்வி, மாணவர்களின் சிந்தனையாற்றலைப் பெருக்குகின்றது. ''தாய்மொழின் வாயிலாகக் கற்கும் மூளையில் சிந்தனை ஊற்றெடுப்பது எளிது; இத்தகைய சிந்தனையாற்றல் உடையவர்களே கற்ற அறிவைக் கொண்டு ஆக்கப் பணிகள் செய்ய முன்வருவார்கள். இல்லையானால், தேர்வுக்கென்று படிக்கும் செயற்கை முறையும், தொழிலுக்கென்று எதையோ செய்து கொண்டிருக்கும் வீண்வாழ்வுமேபெருகும்,'' [12] என்று டாக்டர் மு. வரதராசனுர் குறிப்பிடுகின்றார். தமிழைப் பயிற்சி மொழியாகக் கொண்டிருக்கும் மாணவர்கள் சிந்தனையைத்

தூண்டுகின்ற கேள்விகளைக் கேட்பதைக் காணலாம். புதியனவற்றை அறியும் ஆர்வத் துடிப்பைத் தாய்மொழி வளர்க்கின்றது.

தாய்மொழி வாயிலாகப் படிக்கும் மாண வர்களிடம் செயலாக்கம் வளரும். இன்றைய ஆங்கிலத்தைப் பயிற்சி மொழியாகக் கொண்ட கல்வி முறையில், ''அறிவாற்றல் கள் முழுமையாகப் பயன்படுத்தப் பெறுவ தில்லை. ஆக்க பூர்வமான சிந்தனைகள் பிறக் கின்றபொழுதே கொல்லப்படுகின்றன. உயர் தரக் கல்வி சமுதாய, பண்பாட்டு, பொரு ளாதார வளர்ச்சிக்குப் போதுமான தூண்டு தல்களைத் தருவதில்லை,'' [13] என்று வி. கே. ஆர். வி. ராவ் கூறுகின்றார். நமது நாட்டில் கடந்த காலத்தில் பல அறிவியல் மேதைகள் தோன்றுவதற்கு ஆங்கிலம் தடையாகஇருந்த தென்று கருத இடமுண்டு. சோவியத் ரஷ் யாவில் குறுகிய காலத்தில் பல அறிவியல் அறிஞர்கள் தோன்றியிருப்பதற்கு காரணம் அவர்கள் தாய்மொழி மூலமாக எல்லா நிலை களிலும் படிப்பதுதானென்று கூறலாம்.

கல்வியில் மாணவர்களும் ஆர்வத்தோடு பங்குபெறும் வகையில் 'கருத்தரங்கு' 'குழு விவாதம்' போன்ற புதிய முறைகளைப் பயன் படுத்த வேண்டுமென்று கூறுகின்றனர். ஆங் கிலத்தைப் பயிற்சி மொழியாகக் கொண்டு கருத்தரங்கு போன்றவற்றை வெற்றிகரமாக நடத்த இயல்வதில்லை. ஆனால், தாய்மொழி மூலம் கற்கும் மாணவர்கள் புதிய முறைகளை விரும்பி ஏற்கின்றனர். கருத்துக்களை மட் டுமே எண்ணிக்கொண்டு அவர்களால் தயக்க மின்றி பேச முடிகின்றது. இதனால் அவர்க ளது கருத்துக்களை வெளியிடும் ஆற்றல் வளர் வதனைக் காணலாம்.

தமிழ் பயிற்று மொழியானால், எல்லா வற்றிற்கும் மேலாகக் கல்லூரியில் நான்கு சுவர்களுக்கிடையில் தேங்கிக் கிடக்கின்ற அறிவு நாட்டின் வளர்ச்சிக்குப் பயன்படும். எடுத்துக்காட்டாக, வேளாண்மையில் இப் பொழுது பட்டம் பெறுகின்ற ஒருவர், ஆங் கிலத்திலேயே எல்லாவற்றையும் படிப்பதால், கற்றதை உழவர்களுக்கு எடுத்துரைக்கும் ஆற்றலற்றிருக்கின்றார். இதனால் அவரது அறிவு சமுதாயத்திற்குப் பயன்படாமல் போகின்றது. தமிழில் கற்றால் அவரால் விவசாயிகளுக்குப் புதிய அறிவியல் அறிவை வழங்க முடியும். விவசாயிகளின் நடைமு றைச் சிக்கல்களைப் புரிந்துகொண்டு அவற்றிற் குத் தீர்வுகளைக் கண்டுபிடிக்க இயலும். வளர்ச்சி பெற்ற நாடுகளிலெல்லாம் இந்நிலை இருப்பதனைக் காணலாம்.

**தமிழால் இயலும்:** ஒரு காலத்தில் பயிற்சி மொழியாகப் பயன்படும் வகையில் தமிழுக்கு ஆற்றலில்லை என்று சிலர் கூறிவந்த னர். இப்பொழுது இந்நிலை மறைந்து வரு கிறது. தமிழால் இயலும் என்பதைப் பெரும் பாலானவர்கள் ஏற்றுக் கொள்கின்றனர். இருந்தாலும் சிலரிடம் இருக்கின்ற ஐயப்பாடு களைத் தீர்ப்பதும் தேவையாகின்றது.

தமிழ் மொழியின் தகுதியையும் சிறப்பை யும் நமது நாட்டு அறிஞர்களும் மேலை நாட்டு மொழியியல் வல்லுனர்களும் தெளிவாகக் கூறியுள்ளனர். தொன்மையான தமிழ் மொழி நெகிழ்வுத்தன்மை உடையதாக இருக்கின்றது. எதனையும் தமிழில் எளிமை யாகவும் தெளிவாகவும் கூற முடியுமென்ப தற்கு, பல துறைகளிலும் வெளியாகியுள்ள பல நூல்கள் சான்றாக உள்ளன.

சிலர் எல்லாப் பிறமொழிச் சொற்களை யும் தமிழில் எழுத ஏற்ற ஒலிகளுக்குரிய எழுத்துக்களின்மையைச் சுட்டிக் காட்டுகின் றனர். எந்த மொழியிலும், ஆங்கிலம் உட் பட, எல்லா ஒலிகளுக்கும் ஏற்ற எழுத்துக்கள் இருக்கவில்லை. ஆனால் எழுத்துக்களின் இணைப்பின் மூலம் ஓரளவு ஒலியமைதியைக் கொண்டுவர முடிவதைக் காண்கிறோம். இந்த வகையில் தமிழ்மொழி மிகுதியான எழுத்துக்களைக் கொண்டிருப்பதால் இச் சிக் கலைக் காலப்போக்கில் தீர்த்துவிட இயலும்.

தமிழில் எல்லாப் பாடங்களுக்கும் ஏற்ற கலைச்சொற்கள் இல்லாததை ஒருகுறையாகச்

சிலர் குறிப்பிடுகின்றனர். எல்லாவற்றிற்கும் தகுதியான கலைச்சொற்களைச் கண்டு பிடித்து விட்டுப் பின் தமிழைப் பயிற்சி மொழியாக்க நினைப்பது, நீந்தக் கற்றபின் நீரில் இறங்கக் கூறுவதைப் போன்றதாகும். நீந்தக் கற்ப தற்கே நீரில் இறங்கியாக வேண்டும் என்ப தைக் கவனிக்க வேண்டும். தமிழைப் பயிற்சி மொழியாக்கினால் எண்ணற்ற கலைச்சொற் கள் தோன்றுமென்பதைக் கடந்தகால அனு பவம் காட்டுகின்றது. இப்பொழுது பொரு ளியல் போன்ற பாடங்களில் அருமையான கலைச்சொற்கள் உருவாகியுள்ளன. தொடக்க காலத்தில் எழுத்துப் பெயர்த்தோ (Transliteration), மொழி பெயர்த்தோ (Translation) கலைச் சொற்களைப் பயன்படுத் தலாம். தேவையை ஒட்டிப் புதிய சொற் களை உருவாக்க இயலும். தொடக்க காலத் தில் வலுவற்ற கலைச் சொற்கள் தோன்றினா லும், காலப்போக்கில் சரியான வலுவான கலைச் சொற்களே நிலைத்து நிற்பதனைக் காணலாம்.

தமிழில் போதுமான பாட நூல்களின் மையைச் சிலர் சுட்டிக் காட்டுகின்றனர். இப் பொழுது தமிழ் வெளியீட்டுத் தனியார்களும் பாட நூல்களை வெளியிடுகின்றனர். இவை பாட நூல்கள் தோன்றும் என்பதனைக் காட்டுகின்றன. தமிழ் மொழியை எல்லா நிலைகளிலும் பயிற்சி மொழியாக்கினால்தான் நூல்கள் மிகுதியாக வெளிவரும். வெளியிடு வதற்கும், விற்பதற்கும் வாய்ப்புக்கள் பெரு குமானால் பாட நூல்களை வெளியிடப் பலர் முன்வருவார்கள். தொடக்க காலத்தில் வெளிவருகின்ற நூல்களில் சில குறைகள் இருக்கலாம். தமிழிலேயே கற்று, பின் தமிழி லேயே கற்பிக்கும் வாய்ப்புப் பெறுகின்றவர் கள் எதிர்காலத்தில் சிறந்த நூல்களைப் படைத்துத் தருவார்களென்று எதிர்பார்க்க லாம்.

தொடக்க காலத்தில் துணை மொழியாக ஆங்கிலம் போன்றவற்றைப் பயன்படுத்த லாம். வகுப்புக்கள் தமிழில் நடைபெற, துணை நூல்களை ஆங்கிலத்தில் படிப்பதில் தவறொன்றுமில்லை.

**ஆங்கில மொழிக்குரிய இடம்:** தாய் மொழி வாயிலாகக்கல்வி கற்பதென்றால் சிலர் ஆங்கிலம் முழுமையாக ஒதுக்கப்பட்டுவிடு மென்று தவறாகக் கருதுகின்றனர். உலக மொழி கற்க வாய்ப்பில்லாமல் போகு மென்று எண்ணிப் பயிற்சி மொழியாகத் தமிழ் வருவதை எதிர்க்கின்றனர்.

பயிற்சி மொழி வேறு, ஆங்கில மொழி அறிவு வேறு என்பதனை அறிந்துகொள்ள வேண்டும். ஆங்கிலம் எல்லா மாணவர்களும் கற்கின்ற ஒரு மொழியாக இருக்கும். ஆனால் கற்பிக்கின்ற மொழியாகத் தமிழ் இருக்கும். உலக மொழியான ஆங்கிலத்தில் இருக்கின்ற நூல்களைப் படிக்குமளவிற்கு ஆங்கில அறிவு இருந்தால், ஆங்கிலத்திலுள்ள துணை நூல் களைப் படிக்க இயலும். பிறரோடு தொடர்பு கொள்ளவும் ஆங்கில அறிவு பயன்படும்.

**கடந்த கால அனுபவம்:** நமது கல்லூரி களில் கடந்த சில ஆண்டுகளாக சில வகுப்பு களில் சில பாடங்களைத் தமிழ் மூலம் கற்றுக் கொடுத்திருக்கின்றோம். இதில் கிடைத்திருப் பது வெற்றியா தோல்வியா வென்பதை ஆராய்வதில் சிலர் ஈடுபடுகின்றனர்.

நமது இன்றைய அனுபவத்தை வைத்து ஒரு சரியான முடிவுக்குவர இயலாமைக்குச் சில காரணங்கள் உள்ளன. பல்கலைக்கழக நிலையில் தமிழைப் பயிற்சி மொழியாக்கியவர் கள் முழு நம்பிக்கையோடு இதனைச் செய் தார்களென்று கூற இயலாது 'தமிழும் பயிற்சி மொழியாக இருந்துவிட்டுப் போ கட்டும். அதன் மூலம் தாய்மொழிப்பற்று எங்களுக்கும் உண்டென்று காட்டுகின்றோம்,' என்பதுதான் அவர்களது மனப்போக்காக இருந்தது.

பெரும்பாலான கல்லூரி ஆசிரியர்களுக்கு தமிழ் பயிற்சி மொழியில் நம்பிக்கையில்லை. இவர்கள் படிப்பதெல்லாம் ஆங்கிலத்தில். தமிழில் கற்பிக்க முயற்சி தேவைப்பட்டது. மேலும், ஆங்கில மொழித்திறனைக் கொண்டு மாணவர்களை அயரவைப்பதைப் போலத் தமிழில் செய்ய முடியாது. மாணவர்கள்

புரிந்து கேட்பதற்கு ஏற்ற விளக்கங்கள் தர வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக, ஆங்கிலத்தின் இடத்தில் தமிழ் என்ற எண்ணத்தையே சிலரால் ஏற்றுக்கொள்ள இயலவில்லை.

ஆங்கில மொழியின் மீதிருக்கும் மோகம் இன்னும் குறையவில்லை. பெற்றோர்களுக்கும் கூட தங்களது பிள்ளைகள் என்ன படிக்கின்றார்களென்பது தெரியாவிட்டாலும் அவர்கள் ஆங்கிலம் படிப்பது பெருமைக்குரியதென்று நினைக்கின்றனர். மாணவர்களிடமும் இத்தகைய 'ஆங்கிலக் காதல்' வளர்கின்றது.

நாம் ஆங்கிலத்தையும் தமிழையும் அருகருகே பயிற்சி மொழியாக வைத்திருப்பதே தமிழ் முழுமையான நிலையில் பயிற்சி மொழியாவதற்குத் தடையாக இருக்கின்றது ஆங்கிலம் உயர்ந்ததென்ற கண்மூடித்தனமான எண்ணத்தால் ஆங்கிலப் பயிற்சிமொழியைப் பெறுவதில் போட்டியிருக்கின்றது. பெரும்பாலும் குறைந்த மதிப்பெண்கள் வாங்கிய மாணவர்கள் ஆங்கிலப் பயிற்சி மொழி கிடைக்காத காரணத்தால் தமிழ் பயிற்சிமொழி வகுப்பில் சேர்கின்றனர். இதனால் இவர்கள் வெற்றிபெற முடிகின்றது. ஆனால் மிகவும் திறமையானவர்களை உருவாக்க இயலாமல் போய்விடுகின்றது.

மாணவர்களிடம் இருக்கின்ற ஐயப்பாட்டின் காரணமாகவும் தமிழ்ப் பயிற்சிமொழி சிறப்பான வெற்றியை நோக்கி நடைபோட இயலவில்லை. தமிழில் கற்றால் தங்களது எதிர்காலம் ஒளிமயமானதாக இருக்காதென்ற தவறான கருத்திற்கு மாணவர்கள் ஆட்பட்டிருக்கின்றனர்.

தமிழ் பயிற்சி மொழியினால் இன்று உயரிய நிலையில் இருக்கும் சிலர் தங்களுக்கு போட்டி தோன்றுமென எதிர்பார்க்கின்றனர். அவர்களும், அத்தகைய பத்திரிகையாளர்களும் தொடர்ந்து தமிழ் பயிற்சி மொழியாவதற்கு எதிராக ஒரு போராட்டம் நடத்திக்கொண்டிருக்கின்றனர்.

தமிழ் பயிற்சி மொழியாவதை அரசியல் கண்ணோட்டத்தோடு சிலர் பார்க்கின்றனர். தமிழகத்தில் இந்தி எதிர்ப்பு நடைபெற்றது. எதிர்த்தவர்களை இரு வகையாகப் பிரிக்கலாம். ஒரு வகை, தாய்மொழிப் பற்றால் இந்தியை எதிர்த்தனர். இரண்டாம் வகையினர் தங்களது உள்ளத்திற்குள் ஆங்கிலமே இருக்கவேண்டுமென்று எண்ணுபவர்கள். இதனை வெளியில் கூறாமல், தாய்மொழிப் பற்றென்ற போர்வையை மூடிக்கொண்டு இவர்களும் எதிர்த்தார்கள். உண்மையில் இவர்கள் தான் தாய்மொழி பயிற்சி மொழியாவதற்குரிய எதிரிகள்.

மறுப்புக்கள்: தங்களுக்கும் தாய்மொழிப் பற்று உண்டென்று கூறிக்கொள்ளும் சிலர், தமிழ் பயிற்சி மொழியாவதில் நடைமுறையில் சில சிக்கல்கள் உள்ளனவென்று கூறுகின்றனர். அவற்றைப் பற்றியும் எண்ணிப் பார்க்கலாம்.

உலக மொழியான, அறிவியல் மொழியான ஆங்கிலத்தைப் புறக்கணித்தால், நமது மாணவர்கள் கிணற்றுத் தவளைகளாகப் போய்விடுவார்களென்று சிலர் கூறுகின்றனர். தொடர்பு மொழியாக இருக்குமளவிற்கு ஆங்கில அறிவை அவர்கள் இரண்டாம் மொழியாகப் (பாடமாகப்) படிக்கும் ஆங்கிலம் வழங்கவேண்டுமென்பதை மறந்துவிடக் கூடாது. ஆங்கில மொழிப் புலமைப் பெற விரும்புவர்கள் ஆங்கில இலக்கியத்தைப் பாடமாக பயிலலாம். நூலகத்தில் மாணவர்கள் தமிழையும் ஆங்கிலத்தையும் பயன்படுத்தி வரலாம். மேலும் ஆங்கிலம் மட்டுமே அறிவியல் மொழியென்று கூறுவதை ஏற்றுக்கொள்ள இயலாது. ரஷ்ய மொழியையும் அறிவியல் மொழியாகக் கொள்ளுமளவிற்கு அதில் அறிவியல் ஆராய்ச்சிகள் வெளிவருவதை அறிஞர்கள் சுட்டிக்காட்டுகின்றனர்.

ஆங்கிலம் பயிற்சி மொழியாக இருந்தால் தான் ஜகதீஷ் சந்திரபோஸ், சர். சி. வி. இராமன் போன்ற அறிவியலறிஞர்களை உருவாக்க முடியுமென்று கூறுகின்றனர். இதனைப்

பற்றிக் காந்தியடிகள், ''ஆங்கிலம் தெரியா விட்டால் போஸைப் போல ஒருவர் வர இயலாதென்று நாம் எண்ணும் நிலைக்கு வந்துவிட்டதுபோல் தோன்றுகிறது. இதை விடப் பெரியதொரு சண்முடித்தனமான நம் பிக்கையை என்னால் கற்பனைகூடச் செய்ய முடியவில்லை. எந்த ஒரு ஜப்பானியரும் நம்மைப் போல இவ்வளவு கையாலாகா உணர்வோடு இருப்பதில்லை,''[14] என்று கூறுகின்றார். தமிழ் பயிற்சி மொழியாக இருந்திருந்தால் எண்ணற்ற அறிவியல் மேதைகளை உருவாக்கி யிருக்க இயலும். தமிழில்கற்கின்ற மாணவர் களின் கட்டுரைகள் இந்த உண்மைக்குச் சான்றாக உள்ளன.

மற்றும் சிலர் தமிழில் பயின்றால் வெளி நாடுகளில் சென்று படிக்க இயலாதென்று கருதுகின்றனர். எல்லோருக்கும் வெளிநாடு சென்று படிக்க வாய்ப்பில்லை என்ற உண் மையை முதலில் உணர வேண்டும். விரல் விட்டு எண்ணக்கூடிய சிலரின் நன்மைக்காக பெரும்பாலானவர்களின் தலையில் மொழிச்சு மையை ஏற்றி வைப்பது நாட்டு நலனுக்கு ஏற்றதாக இருக்காது. மேலும், உயர்நிலைப் பள்ளியில் தமிழில் படிக்கின்ற மாணவர்கள் கல்லூரிக்கு வந்தவுடன் ஆங்கிலத்தில் பயில முடியுமென்று நம்புகின்றவர்களால் ஏனோ இங்கு தமிழ் பயிற்சி மொழியால் பயில்பவர்க ளால் மேலே ஆங்கிலத்தால் பயில முடியு மென்பதை ஏற்றுக்கொள்ள முடியாதது வியப்பிற்குரியது. மேல் நாடுகளுக்கு படிக்கச் செல்பவர்களுக்குக் குறுகிய காலத்தில் மொழிப்பயிற்சி வழங்கும் கல்லூரிகளைத் தொடங்கி நடத்தலாம். ஆங்கிலப் பயிற்சி மொழியில் பயில்பவர்களில் எவ்வளவு பேர் மேலை நாடுகளில் பயிலும் தகுதியும் திறனும் பெற்றிருக்கின்றார்களென்பதும் கேள்விக்கு ரிய ஒன்றாகும். தொழில் நுணுக்க அறிவு பெற வெளிநாடு செல்கின்றவர்களுக்கு, அவர் கள் செல்லப் போகும் நாடுகளில் பயன்படும் மொழியில் பயிற்சி கொடுக்கும் திட்டம் தேவை. இதனைப் பயிற்சி மொழியோடு பிணைக்க வேண்டியதில்லை.

சிலர் பட்டப்படிப்பு (பி. ஏ., பி. எஸ்சி.) தமிழில் இருந்தால் மேல் பட்டப்படிப்பையும் (எம் ஏ., எம் எஸ்சி.) படிக்க உடனடியாக வாய்ப்பு வேண்டுமென்று கருதுகின்றனர். தொடக்க காலத்தில் எல்லா நிலைகளிலும் தமிழைப் பயிற்சி மொழியாக்க வேண்டுமென் பது இல்லை. பட்ட வகுப்பில் தமிழில் படித் தவர்கள் முதலில் மேல் படிப்பில் சிறிது பின் தங்குவது போல் தோன்றினாலும், காலப் போக்கில் அவர்கள் மிகவும் திறமை பெற்று விளங்குகின்றனர். இதற்குக் காரணம் அவர் களுக்கு நல்ல அடிப்படை இருப்பது தான். ஆதலால் படிப்படியாகப் பயிற்சி மொழியாக தாய் மொழியை மாற்றுவதால் கேடொன் றும் ஏற்படப் போவதில்லை.

இப்பொழுது புதிதாகக் கண்டுபிடித்த தைப்போல சிலர் ஆங்கிலத்தில் கற்றால் தான் மிகுதியாக வேலை வாய்ப்பு இருக்குமென்று வலியுறுத்திக் கூறுகின்றனர். ஆங்கிலத்தில் கற்றால் வெளி மாநிலங்களிலும், வெளி நாடு களிலும் சென்று வேலை பார்க்கலாமென்று பெரிய குரலில் முழங்குகின்றனர். இது உண்மை நடைமுறைக்குப் புறம்பானதென் பது சிறிது எண்ணிப்பார்த்தால் விளங்கும்.

முதலில் வேலை வாய்ப்பிற்கும் பயிற்சி மொழிக்கும் தொடர்பில்லை என்பதை புரிந்து கொள்ள வேண்டும். வேலை வாய்ப்பு ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியை ஒட்டி அமைவது. நமது நாட்டில் மெதுவாகப் பொருளாதார வளர்ச்சி நடைபெறுவதால் வேலைவாய்ப்புகள் பெருகவில்லை. இப்பொ ழுது படித்துவிட்டு வேலை தேடிக்கொண்டிருக் கும் பட்டதாரிகளின் எண்ணிக்கை வளர்கின் றது. இவர்களெல்லாம் ஆங்கிலப் பயிற்சி மொழியில் படித்தவர்கள் என்பதை மறந்து விட முடியாது. நமது நாட்டில் பொறியியல் பட்டம் பெற்றவர்கள்கூட வேலையின்றி இருக்கும் இழிநிலை காணப்படுகின்றது. பொருளாதாரத்தில் புரட்சிகரமான மாறு தல்களைச் செய்வது விடுத்து, பயிற்சி மொழி யைக் குறை கூறுவது திசை திருப்பிவிடும் செயலாகும்.

இந்தியாவில் ஆங்கிலத்தில் படித்தால் பிற மாநிலங்களில் சென்று வேலை பார்க்கலாமென்று கூறுகின்றவர்கள் எல்லா மாநிலங்களிலும் கற்றவர்கள் வேலையின்றி இருப்பதை உணரவேண்டும். அந்தந்த மாநிலத்தில் அதனதன் மொழியே ஆட்சி மொழியாக இருக்கின்றது. ஆதலால் ஆங்கிலம் அல்ல, பிற மாநில மொழிகள் கற்றால்தான் அங்கு வேலை செய்ய செல்ல இயலும். குறிப்பாக இந்தி தெரியாமல் வட இந்தியாவில் சென்று தனியார் துறையிலும்கூடப் பணியாற்ற முடியாது.

ஆங்கிலத்தை வைத்துக் கொண்டு மத்திய அரசில் வேலை பெறலாமென்று எண்ணவும் வழியில்லை. வட இந்தியாவில் இந்தி எல்லா நிலைகளிலும் பயிற்று மொழியாகி வருகின்றது. மத்தியத் தேர்வை ஆங்கிலத்திலோ, பிற இந்திய மொழியிலோ எழுதலாமென்று கூறுகின்ற பொழுது, தாய் மொழியில் கற்றவர்களே அந்த வாய்ப்புகளைப் பெற முடியும். எப்படிப் பயின்றாலும் ஆங்கிலம் ஓர் அந்நிய மொழியாகத்தான் இருக்குமென்பதை அறியவேண்டும்.

வெளி நாடுகளில் வேலை வாய்ப்பு கிடைக்குமென்று கூறுவதிலுள்ள உண்மையையும் விளங்கிக் கொள்ள வேண்டும். சாதாரணப் பட்டதாரிகளை எந்த வெளிநாடும் விரும்பி வரவேற்பதில்லை. இங்கிருந்து மருத்துவர்கள், பொறியியலாளர்கள் போன்று சிறப்புத்தகுதி பெற்றவர்களே வெளிநாடு செல்லும் வாய்ப்பினைப் பெறுகின்றனர். இவர்கள் பெரும்பாலும் இங்கே வேலை கிடைக்காமல் வெளிநாட்டிற்குச் செல்வதில்லை. கோடி, கோடியாக குவிக்கும் வாணிப நோக்கத்தோடு தான் வெளிநாடு செல்கின்றனர். நமது நாட்டின் வளர்ச்சிக்கு இவர்களது பணி தேவைப்படுகின்ற பொழுது, இலட்சக்கணக்கில் செலவிட்டுப் படிக்கும் வாய்ப்பை ஏற்படுத்தித் தரும் அரசு, இவர்கள் வெளிநாடு செல்ல அனுமதிப்பது குறித்துச் சிந்திக்க வேண்டும். எண்ணிப் பார்த்தால் இது நாட்டு நலனுக்கெதிரான செயலென்பது விளங்கும். ஒரு சிலரின் தந்நலத்திற்காக எல்லோரையும் ஆங்கிலத்தில் படிக்கச் சொல்வது சமுதாய நீதிக்கு முரணானதாகும்.

முடிவுரை:— எந்த வகையில் எண்ணிப் பார்த்தாலும் தாய்மொழி மூலம் கல்லூரிக் கல்வியைப் பெறவேண்டிய அவசியம் விளங்கும். ஆங்கிலத்தால் வாழ்கின்றவர்களும், பயிற்சி மொழியை அரசியல் கருவியாக மாற்றுபவர்களும் உண்மையை மறைக்க முயல்கின்றனர். நாட்டின் முன்னேற்றத்தை மனத்தில் கொண்டு, மாணவர்களின் எதிர்காலம் நாட்டின் நலனோடு இணைந்திருப்பதை உணர்ந்து, எண்ணிப்பார்க்கின்றவர்கள் எல்லாம் கல்லூரிகளில பயிற்சி மொழியாகத் தமிழ் (தாய் மொழி) இருக்க வேண்டிய இன்றியமையாத் தேவையை ஏற்றுக் கொள்வார்கள்.

## அடிக் குறிப்புகள்

1 திருக்குறள் — 400
2 Harijan — 31—3—37
3 The Complete Works of Swami Vivekananda Vol. IV P. 304
4 பாரதியார் கவிதைகள் — 'தமிழ்த்தாய்' — ப. 46
5 காந்திஜியின் பேருரைகள் ப. 52
6 பாரதியார் கவிதைகள் — 'சுய சரிதம்' (பாடல்கள் 23&26)
7 காந்திஜியின் பேருரைகள் — ப. 52
8 The Report of the University Education Commission — Chairman Dr. S. Radhakrishan, Vol. I P. 326.
9 Report of the Education Commission —Chairman Prof. D. S. Kothari P. 649
10 Report of the Committee of Members of Parliament on Education, 1967
11 The Complete Works of Swami Vivekananda Vol. III P. 301
12 கல்வி—டாக்டர் மு. வரதராசனார் ப. 68
13 Education and Human Resource Development By V. K. R. V. Rao; P. 166
14 Educational Reconstruction – P. 157

# பயிற்று மொழியும் உளவியலும், சமுதாயவியலும்.

ஆ. சுப்பிரமணியன், எம்.ஏ. பி.டி.

''அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடையரேனும் இலர்'' —குறள்

மனிதன் சிறந்த அறிவுடையவனுக இருந்தால் தனக்கு வேண்டிய எல்லாச் செல்வங்களையும் அடைய முடியும் என்பது இந்தக் குறளின் கருத்து. எனவே மனிதனின் தேவைகளைப் பூர்த்தி செய்ய உதவுவது அறிவு. அவ்வறிவைப்பெற உள்ள வழிகளில் முதலாவதும் முக்கியமானதும் கல்வி. கல்வியின் மூலம் பெறும் அறிவையே நாம் வெகுவாகப் போற்றுகிறோம். கல்வி மூலம் அறிவைப் பெற உறுதுணையான கருவியாக விளங்குவது மொழி. நாம் கல்வி கற்க, அறிவைச் சேகரிக்க, தொடர்புக் கருவியாக விளங்குவது மொழி. மொழிதான் அறிவைச் சேகரிக்கப்பயன்படும் கருவி என்பது தெளிவானபின் எந்த மொழி மூலம் அறிவைப் பெறுவது என்ற கேள்வி சாதாரணமாக எழுவதில்லை. ஏனெனில் ஒருவன் தன் கருத்தை, விருப்பத்தை தான் வாழுமிடத்தில் மற்றவனிடம் தெரிவிக்க எம்மொழியைப் பயன் படுத்துகிருனே அம்மொழியின் மூலமே அறிவையும் பெறுவான் என்பது தெளிவு. இன்னமும் தெளிவாகக் கூறுவதானுல் ஒருவன் அன்றுட வேலைக்கு எந்த மொழியைப் பயன்படுத்துகிருனே அம்மொழியையே அறிவைப் பெறும் கருவியாகக் கொள்வான். அத்தகைய மொழி நிச்சயமாகத் தாய் மொழியாகத்தான் இருக்கும் என்பதிலும் இரு கருத்துக்களுக்கு இடமில்லை. எனவே கல்வியைக் கற்பிக்கவும், பெறவும் ஒருவனுக்குத் தேவையானது தாய் மொழிதான் என்பதும் உறுதியாகிறது. பல்வேறு மனோதத்துவ, கல்வி நிபுணர்களின் முடிவும் இதுவே. ஆனாலும் நம் நாட்டைப் பொறுத்த மட்டில் தாய்மொழி மூலம்தான் கல்வி கற்பிக்கப்படவேண்டும் என்பதை நிரூபிக்க வேண்டிய அவல நிலையில் நாம் இருக்கிறோம். ''கண் முன் தெரியும் இந்த உண்மையை நாம் நிரூபிக்க வேண்டும் என்று கேட்கிறார்கள். இது பரிதாபகரமானது. ஆங்கில மோகத்தின் கவர்ச்சியில் நாம் சிக்காமல் இருந்திருந்தால் மிகவும் அப்பட்டமான இந்த உண்மையை நிரூபிப்பதற்கான அவசியமே ஏற்பட்டிருக்க முடியாது'' என்று அண்ணல் காந்தியடிகள் மனம் வருந்திக் கூறியுள்ளார். இனி பயிற்று மொழி தாய் மொழியாக இருக்க வேண்டிய அவசியத்தை நோக்குவோம்.

கல்வியைப் பெறுதல் என்பது ஒரு வழிப் போக்கு அல்ல. கற்பிப்போர் கற்போர் ஆகிய இருவரையும் பொறுத்தது கல்வி. குறைந்த முயற்சியில் நிறைந்த பலனைத் தரக் கூடிய கல்வி முறையினால்தான் ஆசிரியர் தாம் கற்பிக்கும் கல்வியை மாணவர்களுக்கு பய னுள்ளதாக்க முடியும். மாணவர்களும் குறைந்த சிரமத்தில் நிறைந்த பயனை அடைய முடியும். இதை மனதில் கொண்டு பார்க்கும் பொழுது கல்வியைப் பெற உதவும் மொழி தாய் மொழியாக இருந்தாலல்லது மாணவர் கள் எளிதில் அதிகப்பலனைப் பெற முடியாது. பயிற்று மொழி தாய் மொழியானால்தான் ஆசிரியரும் குறைந்த முயற்சியில் மிகுந்த அறி வைப் புகட்ட முடியும் என்பது புலனாகிறது. அக்கல்வி அந்நிய மொழியில் கற்பிக்கப்பட் டால் ஆசிரியருக்கும் மாணவர்களுக்கும் அம் மொழி அந்நிய மொழி. ஆசிரியர் தான் சொல்ல வேண்டிய கருத்தினைத் தெளிவாக வும் விரைவாகவும் கற்பிக்கத் தன் தாய் மொழி அல்லாத வேறு ஒரு மொழியில் முய லும்பொழுது அவருக்குக் கற்பிக்கும் பணியே மிகுந்த சிரமத்தைத் தரக்கூடியதாகிறது. மாணவர்களுக்கும் அந்நிய மொழியில் பயில்வ தென்பது மிகுந்த மலைப்பையும், சிரமத்தையும் தருகிறது. எனவே அந்நிய மொழியில் கற் பிப்பதால் அறிவைத்தரும் ஆசிரியருக்கோ அறிவைப்பெறும் மாணவர்களுக்கோ எவ்வித இலாபமும் இல்லை.

''கற்றுக் கொள்ளுதல் என்பது இயந்திரம் போல் செயல் படுவதல்ல. அறிவுக் கூர்மை யுடன் கசடறக் கற்றுத்தனதாக்கிக்கொள்வது தான் கல்வி. இப்படிக் கல்வி, மாணவர்களின் உள்ளங்களைத் தொட்டு அவர்களை முழுமை யாக வளரச் செய்ய வேண்டுமானால் அந்நிய மொழி பயிற்று மொழியாக இருப்பதை சற் றும் கருணை காட்டாது தூக்கி எறிய வேண் டும்'' என அனுபவமிக்க தலைமை ஆசிரியர் திரு. பாலகிருஷ்ண ஜோஷி என்பார் தன் அநுபவத்தின் வாயிலாகக் கண்டறிந்த உண் மையைக் கூறுகிறார்.

அந்நிய மொழியைப் பயிற்று மொழியா கக் கொள்வதால் நமக்கு நாமே விலங்கிட்டுக் கொள்ளுகிறோம். வகுப்பறைக்கு வெளியே மாணவனும் ஆசிரியரும் தாய்மொழியில் கலந்து உறவாடுகிறார்கள். ஆனால் வகுப்பிற் குள் சென்றதும் ஆசிரியரும் தன்னை அந்நிய ராக்கிக் கொள்ளவேண்டும்; மாணவர்க ளும் தாங்கள் வேற்று நாட்டில் இருப்பதாகப் பாவித்துக் கொள்ள வேண்டும். இப்படிச் சூழ்நிலை மாறும்பொழுது மாணவர்கள் மிக மிக உன்னிப்பாக ஆசிரியரின் சொற்பொழி வைக் கவனிக்க வேண்டும். அந்நிய மொழி வழியே வரும் கருத்துக்களை மூளை உடனுக்கு டன் தாய் மொழியில் மொழிபெயர்த்துக் கொள்ள வேண்டும். பொதுவாக மாணவர் களின் கவனம் நிலையாக இருக்காது. அது அடிக்கடி மாறும் என்பது உள நூல் நிபு ணர்கள் கண்டறிந்த உண்மை. ஏனெனில் மூளை சோர்வடையும் பொழுதெல்லாம், புத் துயிர் பெறக் கவனத்தை வேறு பக்கம் திருப் பிக் கொள்ளுகிறது. இந் நிலையில் அந்நிய மொழியில் வரும் செய்திகளை உடனுக்குடன் மொழி பெயர்க்க வேண்டிய பெரும் வேலைச் சுமையால் மூளை விரைவிலேயே சோர்வடை கிறது. மாணவனின் கவனமும் அடிக்கடி திசை திரும்புகிறது. கல்வியில் அவன் ஆர்வம் குன்றுகிறது.

இயல்பான தாய் மொழியில் கற்பிப்பதை விட்டு செயற்கையான ஒரு சூழ்நிலையை வகுப்பில் உண்டாக்கி கல்வி கற்பிக்கப்படுவ தால், காலம், பணம், முயற்சி, சக்தி அனைத் தும் விரயமாகிறது என்பதனை அண்ணல் காந் தியடிகள் பின்வருமாறு கூறுகிறார். ''ஆங்கி லத்தைப்பயிற்றுமொழியாகக் கொண்ட பள் ளிகளில் படிப்பு முடிவதற்கு 15 முதல் 16ஆண் டுகள் வரையில் தேவையாக இருக்கின்றன. இதேபாடங்கள் தாய்மொழியின்மூலம் சொல் லிக்கொடுக்கப்பட்டால் பத்து ஆண்டுகள்தான் ஆகும். நல்ல அனுபவம் உள்ள பல ஆசிரியர் களும் அவ்விதம்தான் நினைக்கிறார்கள். ஆயி ரக்கணக்கான குழந்தைகள் பள்ளிக்கூடங்க ளில் படிக்கிறார்கள். இவர்கள் ஒவ்வொருவ ருடைய பள்ளிப் படிப்புக் காலத்திலும் ஆறு ஆண்டுகள் மிச்சப்படும் என்றால் காலம், பணம், முயற்சி ஆகிய யாவுமே மிச்சமாகும்

என்றே அர்த்தம்'' மேலும் அந்நிய மொழி பயிற்று மொழியாக இருப்பதால் மாணவர்களின், சுயசிந்தனை கெட்டு, தாழ்வு மனப்பான்மையும் ஏற்பட்டுவிடுகிறது என்பதை காந்தியடிகள் பின்வருமாறு கூறுகிறார். ''ஒரு அந்நிய மொழியின் மூலம் கல்வி போதிப்பதில் ஒரு அளவுக்குக் கஷ்டம் இருக்கிறது; நமது பிள்ளைகளும் அதனால் மிகவும் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. பின்னர் எந்தப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ளும் சக்தியை அவர்கள் பெரும் அளவிற்கு இழந்துவிடுகிறார்கள். ஏனெனில் உடல் நலம் அற்றவர்களாகவும், வேலைசெய்வதற்கு ஆர்வமற்றவர்களாகவும் மேல் நாட்டினரையே 'காப்பி' அடிப்பவர்களாகவும் அவர்கள் பயனற்றவர்களாகிவிடுகிறார்கள். தாமே முன்னின்று ஆராய்ச்சி செய்வதிலோ, ஆழ்ந்து சிந்தனை செய்வதிலோ அவர்களுக்கு அக்கறை இருப்பதில்லை. தைரியம், விடாமுயற்சி, வீரம், அச்சமின்மை ஆகிய குணங்களும் அவர்களுக்கு இருப்பதில்லை. அதனால்தான் முன்னுக்கு வரக்கூடியவர்கள் என்று தோன்றும் சிலரும் சாதாரணமாக இளமையிலேயே இறந்துவிடுகிறார்கள்.''

ஆங்கிலம் பயிற்று மொழியாக இல்லாது போனால் ஆங்கிலத்தின் தரம் குறைந்துவிடும் என்று சிலர் அச்சம் கொள்ளுகின்றனர். நமக்கு ஆங்கில மொழி அறிவு வேண்டுமே ஒழிய அம்மொழியில் ஆங்கிலேயர்களைப் போல் பேசவும் எழுதவும் வேண்டும் என்பதுதான் சிறந்த தரம் என்று எண்ணுவது தவறு. நமக்கு ஆங்கிலம் அந்நிய மொழி. அந்நிய மொழியில் நம்மால் பூர்ணத்துவத்தை அடைய முடியாது. எனவே வெறும் மொழி அறிவைப் பெறுவதுதான் உண்மையான தரம் என்ற உணர்வு நமக்கு வந்திருப்பதற்குக் காரணமே நமக்கு ஆங்கிலத்தின்மேல் இருக்கும் மோகம்தான். அதுமட்டுமல்ல மொழி அறிவைப் பெறுவது வேறு; பொருள் அறிவைப் பெறுவது வேறு. ஒரு பொருளைப் பற்றிய அறிவை நாம் பெறுவதற்கு உரிய கருவி தாய் மொழிதான். அதற்கு மாறாக நாம் அந்நிய மொழியை முதலில் புரிந்துகொள்ள வேண்டிய சுமை உள்ளது. பிறகே பொருளை உணர முடிகிறது. அந்நிய மொழியை நாம் நன்கு கற்றிருந்தால்தான் அம்மொழியின் வாயிலாகப் பொருள் அறிவைப்பெறமுடியும். ஆனால் இங்கு வாதிடப்படும் வாதம் என்னவெனில் பொருள் அறிவை அன்னிய மொழியின் மூலம் பெறுவதால் அந்நிய மொழியின் தரம் கூடும் என்பதாகும். இது விந்தையான வாதம். ஒரு மாணவனுக்கு அந்நிய மொழியில் சிறந்த தேர்ச்சி இல்லாத பொழுது பொருள் அறிவைப் பெறுவதற்கு அந்த மொழியைப் பயன்படுத்தினால் அவனால் எப்படி மொழிஅறிவில் தன் தரத்தை உயர்த்திக் கொள்ள முடியும்? அதற்கு மாறாக அவனால் பொருள் அறிவையோ, மொழி அறிவையோ பெற இயலாமல் போய்விடுகிறது. அதே மாணவன் பொருள் அறிவை தன் தாய் மொழி மூலம் பெறுவானேயானால் காலம் விரயமாவதில்லை. வெகு விரைவில் அவ்வறிவைப் பெற்றுவிடுகிறான். அதனால் கிட்டும் எஞ்சிய நேரத்தை அந்நிய மொழி அறிவைப் பெற அவன் பயன்படுத்த முடிகிறது. இதை நாம் தாய் மொழி பயிற்று மொழியாக இருக்கும் கல்லூரிகளில் அனுபவ வாயிலாக அறிகிறோம். எனவே கல்லூரிகளில் தாய்மொழி பயிற்று மொழியாவதால் ஆங்கில மொழி அறிவின் தரம் கூடுமே அன்றி, குறைய வழியில்லை.

அந்நிய மொழியின் மூலம் கல்வி கற்பவர்கள் தாங்கள் பெற்ற கல்வியால் தானும் பயன்பெறாமல், சமுதாயத்திற்கும் பயனில்லாது இருக்கின்றனர். இக் கருத்தினை மத்திய அரசின் அமைச்சர் திரு. வி.கே. ஆர். வி. ராவ் அவர்கள் கீழ்கண்டவாறு வலியுறுத்துகிறார்.

''பல்கலைக் கழகக் கட்டத்தில் பாட மொழி ஒரு அந்நிய மொழியாக மாறிவிடுகின்றது. இதன் விளைவாக உயர் கல்விக்குச் செல்வோரில் பெரும்பான்மையினர் காலம் முழுதும் அந்நிய மொழியில் கருத்தை வெளியிட இயலாதவராய் தவிக்கின்றனர்; ஆகவே மனப்பாட முறையையே மேற்கொள்ளுகின்ற

னர். இவர்களில் பலர் தேர்வுகளில் தோல்வி யுறுகின்றனர். இவ்வகையில் கல்வித் துறை வள சாதனங்கள் குறையான பயன்பாட்டுக்கு ஆளாக்கப்படுவதுடன் மாணவரின் ஆக்கத் திறமான சிந்தனையும் தோற்றத்திலேயே அழிவு பெறுகின்றது. இச்சூழ்நிலையில் உயர் கல்வியானது சமுதாய அல்லது கலாச்சார அல்லது பொருளாதார முன்னேற்றத்திற்கு மிகக் குறைந்த தூண்டுதலையே அளிப்பதாயிருக்கின்றது. இம்மொழியை நன்கு ஆளும் திறம் பெற்றவர்கள் கன்னிமாடப் பள்ளிகளிலும் செலவு மிக்க இதர பள்ளிகளிலும் ஆங்கிலத்தைப் பாட மொழியாகக் கொண்டு படிப்பவர்கள் மட்டுமே ஆவர். இவர்கள் உயர் வருமான வகுப்புகளைச் சார்ந்தவராய் இருப்பதுடன் இவர்களின் கல்வி தேர்ச்சி முன்னமேயே உள்ள வருமான ஏற்றத் தாழ்வுகளையும் செல்வ உடைமை ஏற்றத் தாழ்வுகளையும் மேலும் அதிகரிப்பதற்குத் துணை புரிவதாயிருக்கின்றது. தவிரவும் நம்முடைய சமுதாய இலட்சியமாக ஆர்வத்துடன் கொள்ளுகின்ற வாய்ப்புமுறைச் சமத்துவத்தை இந்நிலை பொருளற்றதாக்குகின்றது. இதுவன்றி, இவர்கள் தங்கள் நாட்டு மக்களுடனேயே எவ்விதப் பேச்சுத் தொடர்புமற்ற ஒரு தனி வகுப்பினராக ஆகிவிடுவதோடு தனித்ததொரு சாதியாகவே இருக்கின்றனர். இச்சாதி, தங்கள் தொடர்புக்கும், பாராட்டுக்கும் தங்கள் நாட்டின் எல்லைக்கு அப்பால் உள்ளவரையே நாடுவதாக இருக்கின்றது. மேற்கூறிய அவல நிலையிலிருந்து விடுபட வேண்டுமாயின் அதற்கு ஒரே வழி உயர் கல்விக் கட்டங்களில் தாய் மொழியைப் பாட மொழியாக்கிவிடுவதுதான் ஆகும்.''

எனவே கல்வி முழுமையடைய, படித்தவர் படிக்காதவர் என்ற பாகுபாடு அகல, தாய் மொழியன்றிப் பிற மொழிகளிலும் புலமை பெற, தான் வாழும் சமுதாயத்திற்கு சேவை செய்யத் தேவையானது தாய்மொழியைப் பயிற்று மொழியாக்குவதுதான். கவி தாகூர் ஜப்பானின் உதாரணத்தைக் காட்டி நாடு உய்ய தாய் மொழிதான் பயிற்றுமொழியாக இருத்தல் வேண்டும் என்பதை பின்வருமாறு விளக்குகிறார்: ''கல்வி என்பது உண்மையில் பயன்பட வேண்டுமானால் தாய் மொழி மூலம்தான் அது சாத்தியமாகும் என்பதை ஜப்பானியர் முதலிலேயே புரிந்து கொண்டு, அதற்கான ஏற்பாடுகளைச் செய்து வைத்தார்கள். பொதுமக்கள் பேசும் மொழியின் மூலமாகத்தான் எத்தகையப் புதிய அறிவையும் பரப்பமுடியும். ஜப்பானிய பல்கலைக் கழகங்களும் இதைத்தான் செய்துமுடித்தன. படித்தவர் படிக்காதவர் எல்லாருக்குமே இந்த அறிவு பயன்பட்டது. இதனால்தான் இன்று அந்த நாட்டில் அறிவு ஒளி மங்காமல் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது.''

இதுகாறும் கூறியவற்றிலிருந்து பயிற்று மொழி தாய் மொழியாகத்தான் இருத்தல் வேண்டும் என்பது தெளிவு. அண்ணல் காந்தியடிகளின் கூற்றினைக்கூறிமுடிக்கிறேன். ''ஒரு இடத்தில்உள்ள மாணவ மாணவிகளும் எந்த மொழியின் மூலம் கல்வி பெறவேண்டும் என்பதை அவர்கள் முடிவு செய்ய முடியாது.'' ''இந்த விஷயத்தில் நாம் எவ்வளவுக்கு எவ்வளவு தாமதம் செய்கிறோமோ அவ்வளவுக்கு நம்முடைய நஷ்டம் அதிகமாகும்.'' ''என்ன நேர்ந்தாலும் நேரட்டும் என்று பயிற்று மொழியை உடனடியாக மாற்றவேண்டும். தாய் மொழிக்கு உரிய இடத்தை அளிக்க வேண்டும். இப்பொழுது தினசரி நேர்ந்து கொண்டே இருக்கும் இந்த விரயத்தைவிட உயர்தரக் கல்வியில் தற்காலிகமாகக் குழப்பம் ஏற்பட்டால் கூட ஆட்சேபணையில்லை.'' ''ஒரு சர்வாதிகாரியின் அதிகாரங்கள் எனக்கு இருந்தால் நமது பையன்களுக்கும் பெண்களுக்கும் ஒரு அந்நிய மொழியின் மூலம் கல்வி கற்பிக்கப்படுவதை இன்றே நிறுத்திவிடுவேன். பாடபுத்தகங்கள் தயாரிக்கப்படும் வரையில் நான் காத்துக்கொண்டிருக்க மாட்டேன். மாறுதலைத் தொடர்ந்து அவை தாமாக வரும்.''

----

Regd. No. 17758 March 1971







Edited and Published by N. Vanamamalai, M. A., L. T, at 258, Tiruchendur Road. Tirunelveli-2., and Printed by C. M. S. Printing Press, 61, Tiruchendur Road, Palayamkottai, Tirunelveli-2